உலகெல்லாம், யத் அபாங்க3 ஸம்ஶ்ரயம்—எவளுடைய மந்த3கடாக்ஷத்தைப் பற்றியிருக்கிறதோ, யத3ர்த்த2ம்—எவளுக்காக, அம்பே4ாதி4:—கடலானது, அமந்தி2 அப3ந்தி4 ச—கடையவும், அணைகட்டவும்பட்டதோ.

அவ:— (சகர்த்தே2தி) மேலில் ஶ்லோகத்3வயத்தாலே பிராட்டியோட்டைச் சேர்த்தியை அனுப4விக்கிருர். இதில், முதல் ஶ்லோகத்தாலே பிராட்டியுடைய மேன்மையையும், இவள்பக்கல் ஈஶ்வரனுக்கு உண்டான வ்யாமோஹத்தையும் அருளிச்செய்கிருர்.

வ்யா:— (தவ பு4ஜாந்தரம் யஸ்யா ப4வநம் சகர்த்த2) 260. "सर्वयज्ञमयं वपुः" (ஸர்வயஜ்ஞமயம் வபு:) என்கிற திருமார்பைப் பிராட்டிக்குக் கோயிற்கட்டணமாகப் பண்ணியருளிற்று. 'யஸ்யா:' என்கிறது இதிலுண்டான ப்ரமாண ப்ரஸித்3தி4யாலே. 260. "सर्वयज्ञमयं वपुरध्यास्ते" (ஸர்வ யஜ்ஞமயம் வபுரத்4யாஸ்தே), 261. "पश्यतां सर्वदेवानां ययौ वक्षस्स्थलं हरेः" (பஶ்யதாம் ஸர்வதே3வாநாம் யயௌ வக்ஷஸ்ஸ்த2லம் ஹரே:), a"நின்வலமார்பினில் வாழ்கின்ற மங்கை", b "திகழ்கின்ற திருமார்பில் திருமங்கை தன்னோடும் திகழ்கின்ற திருமாலார்", c "என்திருமகள் சேர் மார்பன்", d"மையகண்ணாள் மலர்மே லுறைவாள் உறைமார்பினன்", e "அலர்மேல் மங்கையுறை மார்பா", f "மார்வத்து மாலே", g"செய்யாள் திருமார்பினில் சேர் திருமால்". (தவ ப்ரியம் த4ாம யதி3யஜந்மபூ4:) யாவளொருத்தி அவதரித்த திருப்பாற்கடல் h 'அயர்வறுமமரர்களதிபதி'யான தேவருக்கு இனி தமரும் இடமாயிற்று. 262. "श्रीः पूर्वमुदधेः ...... देवदानवयत्नेन प्रसूतामृतमन्थने" (ஶ்ரீ: பூர்வமுத3தே4: ........ தே3வதா3நவயத்நேந ப்ரஸூதாம்ருதமந்த2நே), 263. "नेदानीं त्वदृते सीते स्वर्गोऽपि मम रोचते" (நேதா3நீம் த்வத்3ருதே ஸீதே ஸ்வர்க்கோ3ऽபி மம ரோசதே). (ஜக3த் ஸமஸ்தம் யத3பாங்க3ஸம்ஶ்ரயம்) 132. "अस्येशाना जगतः" (அஸ்யேஶாநா ஜக3த:), 131. "ईश्वरीं सर्वभूतानां" (ஈஶ்வரீம் ஸர்வபூ4தாநாம்), 264. "त्वं माता सर्वलोकानां" (த்வம் மாதா ஸர்வலோகாநாம்) என்கிறபடியே, இவ்வுப4யவிபூ4தியும் யாவளொருத்தியுடைய மந்த3கடாக்ஷத்தைப் பற்றி உண்டாயிருக்கிறது. (யத3ர்த்த2மம்பே4ாதி4ரமந்தி2) a "விண்ணவர் அமுதுண அமுதில் வரும் பெண்ணமுதுண்ட எம்பெருமான்" என்கிறபடியே யாவளொருத்தியைப் பெறுகைக்குக் கடல் கடைந்தருளிற்று. (அப3ந்தி4 ச) யாவளொருத்தியுடைய பிரிவாற்ருமையாலே கடலை அடைத்தருளிற்று. 265. "एष सेतुर्मया बद्धस्सागरे सलिलार्णवे। तव हेतोर्विशालाक्षि! नलसेतुस्सुदुष्करः ॥" (ஏஷ ஸேதுர் மயா ப3த்3த4ஸ் ஸாக3ரே ஸலிலார்ணவே। தவ ஹேதோர் விஶாலாக்ஷி நளஸேதுஸ் ஸுது3ஷ்கர:॥). 37.

a திருப்பல்லாண்டு-2. b திருவாய் 10-6-9. c திருவாய் 7-2-9. d திருவாய் 4-5-2. e திருவாய் 6-10-10. f திருவாய் 10-10-2. g திருவாய் 9-4-1. h திருவாய் 1-1-1.



स्वैश्वरूप्येण सदाऽनुभूतयाऽप्यपूर्ववद्विस्मयमादधानया ।
गुणेन रूपेण विलासचेष्टितैस्सदा तवैवोचितया तव श्रिया ॥ ३८ ॥

38. ஸ்வவைஶ்வரூப்யேண ஸதா3ऽநுபூ4தயாऽப்-
யபூர்வவத்3 விஸ்மயமாத3த4ாநயா ।
கு3ணேந ரூபேண விலாஸசேஷ்டிதைஸ்
ஸதா3 தவைவோசிதயா தவ ஶ்ரியா ॥

38. பதவுரை:— ஸ்வ வைஶ்வரூப்யேண—தன் விஶ்வரூப நிலையுடன், ஸதா3—எப்போதும், அநுபூ4தயா அபி—அனுப4விக்கப்பட்டபோதிலும், கு3ணேந—கு3ணங்களாலும், ரூபேண—வடிவழகாலும், விலாஸ சேஷ்டிதை:—அழகிய செயல்களாலும், அபூர்வவத்—புதியதுபோல், விஸ்மயம் ஆத3த4ாநயா—ஆஶ்சர்யத்தைத் தருபவளாய், ஸதா3—

a பெரியதிருமொழி 6-1-2.

(பரம், வ்யூஹம், விப4வம் முதலிய) எல்லா நிலைகளிலும், **தவ ஏவ உசிதயா**—உனக்கே தகுந்தவளாய், **தவ ஶ்ரியா**—உனக்குச் செல்வமாயிருப்பவளான.

**அவ:— (ஸ்வவைஶ்வரூப்யேண)** இதில், பிராட்டியினுடைய நிரதிஶயபோ4க்3யதையையும், a "உனக்கேற்கும் கோலமலர்ப்பாவை" என்கிறபடியே அவனுக்கேயாயிருக்கிற இருப்பையும் அனுப4விக்கிறார்.

**வ்யா:—(ஸ்வவைஶ்வரூப்யேண ஸதா3நுபூ4தயாऽபி)** ஸர்வஶக்தியான தேவர், ஸர்வவிக்3ரஹத்தாலும், ஸர்வகாலமும், ஸர்வப்ரகாரத்தாலும் அனுப4வியாநின்றாலும், பிராட்டியினுடைய போ4க்3யதையைப் பரிச்சே2தி3க்கப் போகாது. ஸௌப4ரியைப்போலே அநேகவிக்3ரஹத்தைப் பரிக்3ரஹித்தாலும் முடியாது. 266. "**पर्यायेण प्रसुप्तश्च**" (பர்யாயேண ப்ரஸுப்தஶ்ச) என்கிறபடியே, ப்ரகாரங்கள் அநேகமானாலும் முடியாது. **(அபூர்வவத் விஸ்மயமாத3தா4நயா)** நித்யாபூர்வம்போலே ஆஶ்சர்யாவஹமாயிருக்கும். **267. "स एकधा भवति। द्विधा भवति।"** (ஸ ஏகதா4 ப4வதி। த்3விதா4 ப4வதி।) என்று, நித்யஸூரிகள் தன் திறத்தில் படுமதெல்லாம் பிராட்டியைக் குறித்துத் தான் படும் என்கை. b "பண்டிவரைக் கண்டறிவதெவ்வூரில்" என்றும் c "அப்பொழுதைக்கப்பொழுதென் ஆராவமுதம்" என்றும் ஆழ்வார்களும், **113. "सदा पश्यन्ति"** (ஸதா3 பஶ்யந்தி) என்று நித்யஸூரிகளும், நித்யாபூர்வதையாலே தேவர் திறத்தில் படுமதெல்லாம் தேவர் படும்படியாயிறே பிராட்டிபோ4க்3யதை **இருப்பது**. உகப்பிப்பது எவ்வழியாலே? என்னில்: **(கு3ணேந ரூபேண விலாஸசேஷ்டிதை:)** வடிவழகாலும், ***ஶீலாதி3கு3ணங்களாலும்***. "ஸக்ருத் த்வதா3காரவிலோகநாஶயா" **என்கிறபடியே**, d "ஈர்கின்ற குணங்களையுடையாய்"

**a திருவாய் 10-10-6.** **b பெரியதிருமொழி 8-1-9.**
**c திருவாய் 2-6-6.** **d திருவாய் 8-1-8.**



तया सहासीनमनन्तभोगिनि प्रकृष्टविज्ञानबलैकधामनि ।
फणामणिव्रातमयूखमण्डलप्रकाशमानोदरदिव्यधामनि ॥ ३९ ॥

39. தயா ஸஹாஸீநமநந்தபோ4கி3நி
ப்ரக்ருஷ்டவிஜ்ஞாநப3லைகதா4மநி।
ப2ணாமணிவ்ராதமயூக2மண்ட3ல-
ப்ரகாஶமாநோத3ரதி3வ்யதா4மநி॥

என்கிற கு3ணங்களிலும், a "உன் செய்கை நைவிக்கும்" என்கிற சேஷ்டிதங்களிலும், அபி4யுக்தர் ஆழங்காற்படும்படி இருக்குமிறே அவன். இப்படி இவள் ஸ்வரூபாதி3களிலே அழுந்துகிறான். அவன் ஸ்வரூபத்தாலே அபரிச்சி2ந்நன்; இவள் போ4க்3யதையாலே அபரிச்சி2ந்நை. **(ஸதா3 தவைவோசிதயா) 268. "तुल्यशीलवयोवृत्तां"** (துல்யஶீலவயோவ்ருத்தாம்) என்றும், b "உனக்கேற்கும் கோலமலர்ப்பாவை" என்றும் சொல்லுகிறபடியே தேவர் தமக்குத் தகுதியாயிருக்குமவள். **(ஸதா3)** என்று பரவ்யூஹவிப4வரூபேண உண்டான ஸர்வாவஸ்தை2களிலும் என்கிறது. "கு3ணேந ரூபேண விலாஸசேஷ்டிதைஸ் ஸதா3 தவைவோசிதயா" என்னவுமாம். **( தவ ஶ்ரியா ) 269. "विष्णोः श्रीः"** (விஷ்ணோ: ஶ்ரீ:) என்றும், c "உன் திரு" என்றும் சொல்லுகிறபடியே அநந்யார்ஹையென்னுதல்; தேவர்க்கு ஸம்பத்தாயிருக்குமென்னுதல். 38

* 39 & 40. **பதவுரை:— தயா ஸஹ** — அந்தப் பிராட்டியுடன்கூட, **ப்ரக்ருஷ்ட விஜ்ஞாந ப3ல ஏக தா4மநி**—மேலான ஞானத்திற்கும், ப3லத்திற்கும் நிகரற்ற இருப்பிடமானவனும், **ப2ணா மணி வ்ராத மயூக2 மண்ட3ல ப்ரகாஶமாந உத3ர தி3வ்ய தா4மநி**—தன் படங்களிலிருக்கும் மணி ஸமூஹங்களுடைய

*** இவ்விரண்டு ஶ்லோகங்களும் சேர்ந்தே பொருள்படுவதால் பதவுரை சேர்த்து எழுதப்பட்டது.**
**a திருவாய் 5-10-2.** **b திருவாய் 10-10-6.** **c திருவாய் 10-10-2.**

கிரண மண்ட3லங்களாலே ஒளிவிடும் மத்4யப்ரதே3ஶத்தை யுடைய (ப4க3வானுடைய) தி3வ்யாந்த:புரத்தை உடையவனும், **நிவாஸ ஶய்யா ஆஸந பாது3கா அம்ஶுக உபதா4ந வர்ஷாதப வாரண ஆதி3பி4:**—(ப4க3வானுக்கு) எழுந்தருளியிருக்கிற திருமாளிகையாகவும், கண்வளர்ந்தருளுகிற படுக்கையாகவும். ஸிம்ஹாஸநமாகவும், பாது3கையாகவும். திருப்பரியட்டமாகவும், அணையாகவும், மழைக்கும், வெயிலுக்கும் குடையாகவும், மற்றும் பலபடியாகவும் ஆகின்றவையாய், **யதோ2சிதம்**—அந்தந்த காலத்திற்குத் தக்கபடி, **தவ ஶேஷதாம் க3தை:**—உனக்கு அடிமைப்பட்டவையான, **ஶரீர பே4தை3:**—பல ஶரீரங்களாலே, **ஶேஷ: இதி ஜநை: ஈரிதே**—ஶேஷன் என்று எல்லா ஜனங்களாலும் சொல்லப்படுபவனுமான, **அநந்தபோ4கி3நி** — திருவனந்தாழ்வானுடைய திருமேனியில், **ஆஸீநம்** — எழுந்தருளியிருக்கிறவனாகவும்.

39. **அவ:**—(தயா ஸஹ) இதில் — பர்யங்கவித்3யையில் சொல்லுகிறபடியே திருவனந்தாழ்வான் மடியிலே பிராட்டியோடே எழுந்தருளியிருக்கிற சேர்த்தியை அனுப4விக்கிறார்.

**வ்யா :—** (தயா ஸஹாஸீநம்) 249. "**श्रिया सार्धं जगत्पतिरास्ते**" (ஶ்ரியா ஸார்த்த4ம் ஜக3த்பதிராஸ்தே) என்கிறபடியே, நித்யவிபூ4தியில் மிது2னமாயிருந்திறே அடிமை கொள்வது. அவதாரத்திலும், 28. "**भवांस्तु सह वैदेह्या**" (ப4வாம்ஸ்து ஸஹ வைதே3ஹ்யா) என்னக்கடவதிறே. **(அநந்தபோ4கி3நி)** ஶ்ரிய:பதித்வத்தால் வந்த உத்கர்ஷத்தோபாதியிறே இவனோட்டைச் சேர்த்தியும். 270. "**गन्धर्वाप्सरसः सिद्धास्सकिन्नरमहोरगाः। नान्तं गुणानां गच्छन्ति तेनानन्तोऽयमुच्यते॥**" (க3ந்த4ர்வாப்ஸரஸஸ் ஸித்3தா4ஸ் ஸகிந்நரமஹோரகா3: । நாந்தம் கு3ணாநாம் க3ச்ச2ந்தி தேநாநந்தோऽயமுச்யதே ॥) என்கிறபடியே கு3ணாநந்த்யத்தாலே அநந்தனென்னக்கடவதிறே. ஈஶ்வரன் ரக்ஷணத்திலே அஸங்க்2யாதகு3ணன். இவன் கைங்கர்யார்த்த2மாக அஸங்க்2யாதகு3ணன். **(போ4கி3நி)** மென்மை, குளிர்ச்சி, நாற்றம் இவற்றை ஸ்வ



निवासशय्यासनपादुकांशुकोपधानवर्षातपवारणादिभिः।
शरीरभेदैस्तव शेषतां गतैर्यथोचितं शेष इतीरिते जनैः॥ ४०॥

40. **நிவாஸஶய்யாஸநபாது3காம்ஶுகோ-**
**பதா4நவர்ஷாதபவாரணாதி3பி4: ।**
**ஶரீரபே4தை3ஸ் தவ ஶேஷதாம் க3தைர்**
**யதோ2சிதம் ஶேஷ இதீரிதே ஜநை: ॥**

---

பா4வமாக உடைய திருமேணியிலே, போ4க3ம்—ஶரீரம். (ப்ரக்ருஷ்டவிஜ்ஞாநப3லைகதா4மநி) இருவருமாய்ப் பரிமாறும் போது அவர்களுக்கும் / படியான ஜ்ஞானஶக்த்யாதி3களுக்கு ஆஶ்ரயமாயிருக்குமவன். ஒருத்தன் என்று அவனுக்குக் கூசவேண்டாதே துகைத்துப் பரிமாறலாம்படியான தா4ரண ஸாமர்த்2யத்துக்கு ஆஶ்ரயமாயிருக்குமவன். **(ப2ணாமணீத்யாதி3)** தன்னுடைய ப2ணாமணிஸமூஹங்களினுடைய ரஶ்மி மண்ட3லங்களினாலே ப்ரகாஶியாநின்ற மத்4யத்தையுடைய தி3வ்யாந்த:புரத்தை உடையவன். உ "மணி விளக்காம்" என்கிறபடியே, தி3வ்யாந்த:புரத்துக்கு மங்க3ளதீ3பமாயிறே இருப்பது. 39.

40. **அவ:—** (நிவாஸ) திருவனந்தாழ்வானுடைய வ்ருத்திவிஶேஷங்களை அனுப4விக்கிறார், தமக்கு அடிமையிலுண்டான த்வரையாலே. 271. "**उपमानमशेषाणां साधूनां**" (உபமாநமஶேஷாணாம் ஸாதூ4நாம்) என்னும் ந்யாயத்தாலே, அடிமையில் ருசியுடையார்க்கெல்லாம் உதா3ஹரணபூ4தமாயிறே திருவனந்தாழ்வானுடைய வ்ருத்திவிஶேஷங்களிருப்பது. இவனுடைய காஷ்டை2யை அருளிச்செய்கிறார்.

**வ்யா:—** (நிவாஸ) எழுந்தருளியிருக்கிற திருமாளிகையாம். **(ஶய்யா)** கண்வளர்ந்தருளுகைக்குப் படுக்கையாம். **(ஆஸந)** உ "இருந்தால் சிங்காசனமாம்". **(பாது3கா)** உ "நின்றால் மரவடியாம்". **(அம்ஶுக)** பும்ஸ்த்வாவஹமான திருப்

---

/ படியான — ஒப்பான. உ முதல்திருவந்தாதி-53.

**दासस्सखा वाहनमासनं ध्वजो यस्ते वितानं व्यजनं त्रयीमयः।**
**उपस्थितं तेन पुरो गरुत्मता त्वदङ्घ्रिसंमर्दकिणाङ्कशोभिना॥४१॥**

41. தா$_3$ஸஸ் ஸகா$_2$ வாஹநமாஸநம் த்$_4$வஜோ
யஸ்தே விதாநம் வ்யஜநம் த்ரயீமய: ।
உபஸ்தி$_2$தம் தேந புரோ க$_3$ருத்மதா
த்வத$_3$ங்க்$_4$ரிஸம்மர்த்த$_3$கிணாங்கஶோபி$_4$நா ॥

---

பரியட்டமாம். (உபதா$_4$ந) a "புல்கும் அணையாம்". (**வர்ஷா தபவாரணதி$_3$பி$_4$:**) a "சென்றால் குடையாம்" என்கிறபடியே, வர்ஷத்துக்கும் ஆதபத்துக்கும் ச$_2$த்ரமாம். § ஆதி$_3$ஶப்$_3$த$_3$த்தாலே, அடிமையில் அபி$_4$நிவேஶாநுரூபமாக **ஶரீரத்**துக்குத் தொகையில்லை; 267. **"स एकधा भवति"** (ஸ ஏகதா$_4$ ப$_4$வதி) என்று தொடங்கி, 267. **"सहस्रधा भवति"** (ஸஹஸ்ரதா$_4$ ப$_4$வதி) என்னக்கடவதிறே. (ஶரீரபே$_4$தை$_3$:) கைங்கர்யபே$_4$த$_3$மே ஶரீரபே$_4$த$_3$த்துக்கு ஹேது. (**தவ ஶேஷதாம் க$_3$தை:**) தேவருடைய விக்$_3$ரஹங்கள் ரக்ஷணஹேதுவாயிருக்கிறாப்போலே, இவனுடைய விக்$_3$ரஹங்கள் ஶேஷத்வத்தை அடைந்திருக்கும் என்கை. (**யதோ$_2$சிதம்**) 272. **"यदा यदा हि कौसल्या"** (யதா$_3$ யதா$_3$ர் ஹி கௌஸல்யா) என்கிறபடியே தத்தத்காலோசிதமாயிருக்கை. (**ஜநை: ஶேஷ இதீரிதே**) சிறியார் பெரியாரென்னாதே ஸர்வராலும் ஶேஷனென்று சொல்லப்படுகை; ஶேஷத்வந்தான் ஒரு வடிவுகொண்டாப்போலே இருக்கை. (**ஜநை:**) b "பெருமக்களுள்ளவர்" என்கிறபடியே நித்யஸித்$_3$த$_4$ரைச் சொல்லவுமாம். 273. **"परगतातिशयाधानेच्छयोपादेयत्वमेव यस्य स्वरूपं स शेषः। परश्शेषी॥"** (பரக$_3$தாதிஶயாதா$_4$நேச்ச$_2$யா உபாதே$_3$யத்வமேவ யஸ்ய ஸ்வரூபம் ஸ ஶேஷ:। பரஶ் ஶேஷீ॥) என்கிற ஶேஷத்வத்தின்படியே; 274. **"पारतन्त्र्यं परे पुंसि"** (பாரதந்த்ர்யம் பரே பும்ஸி) இத்யாதி$_3$. 40.

---

§ 'ஆதி$_3$ஶப்$_3$த$_3$த்தாலே' என்பதுமுதல் 'என்னக்கடவதிறே' என்பதுவரை சில ஸ்ரீகோஶங்களில் இல்லை.

a முதல்திருவந்தாதி-53. b திருவாய் 3-7-5.



41. பதவுரை:— **த்ரயீமய:**—வேத$_3$ங்களை அவயவங்களாகக்கொண்ட, **ய:**—எந்த கருடாழ்வான், **தே**—உனக்கு, **தா$_3$ஸ:**—அடியவனும், **ஸகா$_2$**—நண்பனும், **வாஹநம்**—வாஹனமும், **ஆஸநம்**—ஸிம்ஹாஸனமும், **த்$_4$வஜ:**—கொடியும், **விதாநம்**—(வெயிலைப்போக்கும்) மேற்கட்டியும், **வ்யஜநம்**—சாமரமுமாக இருக்கின்றனனோ, **த்வத் அங்க்$_4$ரி ஸம்மர்த்த$_3$ கிண அங்க ஶோபி$_4$நா**—உன்னுடைய திருவடிகள் நெருக்கின தழும்பை அடையாளமாகக்கொண்டு ஶோபி$_4$ப்பவனான, **தேந க$_3$ருத்மதா**—அந்த க$_3$ருட$_3$ாழ்வானாலே, **புர: உபஸ்தி$_2$தம்** — திருமுன்பே ஸேவிக்கப்பட்டவனாகவும்.

**அவ:**— (**தா$_3$ஸஸ்ஸகே$_2$தி**) இதில்—வாஹந த்$_4$வஜாதி$_3$ ஸர்வவ்ருத்திகளையும் உடையனாய், ஈஶ்வரனுக்கு *மோம்பழம்போலே ஸதா$_3$ விரும்பும்படி அபி$_4$மதனாயிருக்கிற பெரிய திருவடியோட்டைச் சேர்த்தியை அனுப$_4$விக்கிறார்.

**வ்யா:**— (**தா$_3$ஸ:**) தன்னுடைய வ்யாபாரங்களடங்க ஈஶ்வரனுக்கு அதிஶயத்தை விளைக்குமவையாயிருக்கும். (**ஸகா$_2$**) ஜக$_3$த்$_3$வ்யாபாரங்களில் ஈஶ்வரன் தன்னோடே உசாவவேண்டும்படியான பெருமையை உடையவன். (**வாஹநம்**) ஆஶ்ரிதருடைய ஆபத்துக்களிலே ஈஶ்வரனைக் கொடுவந்து சேர்க்குமவனாயிருக்கை. (**ஆஸநம்**) ஒரு கார்யமில்லாதபோது, ஸிம்ஹாஸநஸ்தா$_2$னாயிருந்தாலோபாதி தன் மேன்மைக்கு ஸத்$_3$ருஶம் என்னும்படி ஸிம்ஹாஸநமாயிருக்கை. (**த்$_4$வஜ:**) ஈஶ்வரன் கிட்டுவதற்கு முன்னே, எழுந்தருளிநின்றான் என்று ஆஶ்ரிதர்க்கு ப்ரீதிஹேதுவான கொடியானவன். அவனுடைய ரக்ஷகத்வத்துக்கு ஹேதுவானவன் என்றுமாம். (**ய:**) a "பொன் மலையின் மீமிசைக் கார்முகில்போல" என்றும், b "புள்ளூர் கொடியான்" என்றும் உண்டான ப்ரஸித்$_3$தி$_4$யைச் சொல்லுகிறது. (**விதாநம்**) c "வினதை சிறுவன் சிறகென்னும் மேலாப்பின் கீழ்

---

a திருவாய் 9-2-6. b திருவாய் 3-8-1. c நாச்-திரு 14-3.

* மோம்பழம்—மோந்துகொண்டிருக்கிற எலுமிச்சம்பழம்.

**त्वदीयभुक्तोज्झितशेषभोजिना त्वया निसृष्टात्मभरेण यद्यथा।**
**प्रियेण सेनापतिना न्यवेदि तत्तथाऽनुजानन्तमुदारवीक्षणैः॥ ४२॥**

**42. த்வதீ3யபு4க்தோஜ்ஜி2தஶேஷபே4ாஜிநா**
**த்வயா நிஸ்ருஷ்டாத்மப4ரேண யத்3யதா2।**
**ப்ரியேண ஸேநாபதிநா ந்யவேதி3 தத்**
**ததா2ऽநுஜாநந்தமுதா3ரவீக்ஷணை:॥**

---

வருவான்'' என்கிறபடியே ஆதபநிவாரணமாயிருக்கை. 275. "**गरुडं च ददर्शोच्चैरन्तर्धानगतं द्विज। कृतच्छायं हरेर्मूर्ध्नि पक्षाभ्यां पक्षिपुङ्गवम्॥**" (க3ருட3ஞ்ச த3த3ர்ஶோச்சைரந்தர்த்த4ாநக3தம் த்3விஜ। க்ருதச்ச2ாயம் ஹரேர் மூர்த்4நி பக்ஷாப்4யாம் பக்ஷிபுங்க3வம்॥) இதி பராஶர:. (**வ்யஜநம்**) தன்னை மேற்கொண்டு போம்போது சாமரங்கள்போலே திருச் சிறகாலே ஆஶ்வாஸகனாயிருக்கை. (**த்ரயீமய:**) 276. "**त्रिवृत्ते शिरः। गायत्रं चक्षुः।**" (த்ரிவ்ருத் தே ஶிர:। கா3யத்ரம் சக்ஷு:।) என்கிறபடியே, வேத3ங்களை அவயவங்களாக உடையனாயிருக்கை. 'அவயவார்த்தே2 மயட்'. ஈஶ்வரன் வேத3ப்ரதிபாத்3யன்; இவன் வேத3ஶரீரன். (**தேந கு3ருத்மதா புர: உபஸ்தி2தம்**) ஸர்வேஶ்வரன்தன்னை ப்ரகாஶிப்பிக்கும் நிலைக்கண்ணாடிபோலேயும், மோம்பழம்போலேயும், திருமுன்பே ஸர்வதா3 ஸந்நிஹிதனாயுள்ளவன். (**த்வத3ங்க்4ரி ஸம்மர்த்த3கிணாங்கஶோபி4நா**) தன்னை மேற்கொண்டால், திருவடிகளாலே நெருக்கின தழும்பு தனக்கு போ4க3சிஹ்நமாகையாலே, அத்தாலே விளங்காநிற்குமவன். ஈஶ்வரனுக்கு ஸ்ரீகௌஸ்துப4ம் லக்ஷணமானாற்போலே இவனுக்கும் அது தா3ஸ்யசிஹ்நமாயிருக்கும். 41.

42. பதவுரை:— **த்வதீ3ய பு4க்த உஜ்ஜி2த ஶேஷ போ4ஜிநா** — உன்னுடைய உண்டு மிகுந்த ஶேஷத்தை உண்பவனும், **த்வயா**—உன்னாலே, **நிஸ்ருஷ்ட ஆத்ம ப4ரேண**—வைக்கப்பட்ட உன்னுடைய (உப4யவிபூ4தி நிர்வாஹரூபமான) ப4ாரத்தை உடையவனும், **ப்ரியேண**—(எல்லாருக்கும்) அன்பனுமான, **ஸேநாபதிநா**—விஷ்வக்ஸேனராலே, **யத் யதா2 ந்யவேதி3**—எந்தக் காரியம் எம்மாதிரி விண்ணப்பம் செய்யப்பட்டதோ, **உதா3ரவீக்ஷணை:**—அருள் நிரம்பிய கடாக்ஷங்களாலே, **தத் ததா2 அநுஜாநந்தம்**—அந்தக் காரியத்தை அம்மாதிரியே (செய்வதென்று) நியமித்தருளுகிறவனாகவும்.

---

**அவ:**— (**த்வதீ3ய**) உப4யவிபூ4திவிஷயமான தன்னுடைய ஸர்வப4ரத்தையும் இவன்பக்கலிலே வைத்து இவனிட்ட வழக்காயிருக்கிற ஸ்ரீஸேநாபதியாழ்வானுடைய தா3ஸ்யஸாம்ராஜ்யத்தை அனுப4விக்கிறார்.

**வ்யா:**— (**த்வதீ3யேதி**) தேவர் அமுதுசெய்து கைவாங்கின ப்ரஸாத3த்தாலே த4ரிக்குமவராயிருக்கை. 'த்வதீ3ய' என்கையாலே வகுத்த ஸ்வாமியுடைய ஶேஷமே போ4ஜ்யம் என்கிறது. 277. "**यदुच्छिष्टमभोज्यं**" (யது3ச்சி2ஷ்டமபோ4ஜ்யம்) என்கையாலே அல்லாதாருடைய உச்சி2ஷ்டம் அபோ4ஜ்யமென்கை. 'பு4க்தோஜ்ஜி2தம்' என்கையாலே, a "கலத்ததுண்டு" என்கிறபடியே, அமுதுசெய்து கைவாங்கின பின்புற்றையதே போ4ஜ்யம்; முன்பு பாத்ரஶேஷமே அபோ4ஜ்யம் என்கிறது. (**ஶேஷபோ4ஜிநா**) தனக்கு தா4ரகமாயிருக்குமளவன்றிக்கே 278. "**रसान् भक्तस्य जिह्वायां**" (ரஸாந் ப4க்தஸ்ய ஜிஹ்வாயாம்) என்கிறபடியே ஈஶ்வரனுக்கு போ4க்3யமாவதும் ஆழ்வார் அமுதுசெய்தால் என்கை. (**த்வயா நிஸ்ருஷ்டாத்மப4ரேண**) நம்மிலும் பெரியவன்; ஸமர்த்த2ன் என்று தேவராலே தன் பக்கலிலே வைக்கப்பட்ட உப4யவிபூ4திரூபமான ப4ரத்தை உடையவனாலே. (**ப்ரியேண**) ஸர்வாபி4மதனானவனாலே. (**ஸேநாபதிநா**) ஸர்வஸேநாநிர்வாஹகனாலே. b "அசைவில் அமரர் தலைவர் தலைவா" என்னக்கடவதிறே. (**யத் யதா2 ந்யவேதி3**)

---

a திருப்பல்லாண்டு-9. b திருவாய் 5-8-9.

**हताखिलक्लेशमलैः स्वभावतस्सदानुकूल्यैकरसैस्तवोचितैः।**
**गृहीततत्तत्परिचारसाधनैर्निषेव्यमाणं सचिवैर्यथोचितम्॥४३॥**

**43. ஹதாகி2லக்லேஶமலை: ஸ்வப4ாவத:**
*** ஸத3ாநுகூல்யைகரஸைஸ் தவோசிதை: ।**
**க்3ருஹீததத்தத்பரிசாரஸாத4நை:**
**நிஷேவ்யமாணம் ஸசிவைர் யதோ2சிதம் ॥**

---

யாதொரு கார்யம் யாதொருபடி விண்ணப்பம் செய்யப் பட்டது. இதில் உள்மானம், புறமானம் பார்ப்பதில்லை; செய்யும் ப்ரகாரங்களும் அனுஸந்தி4ப்பதுமில்லை; ஈஶ்வரன் இவன் உக்தியைப் பின்செல்லுமத்தனை. (**உத3ாரவீக்ஷணை: தத் தத2ாநுஜாநந்தம்**) 114. **"अवलोकनदानेन भूयो मां पालयाच्युत"** (அவலோகநத3ாநேந பூ4யோ மாம் பாலயாச்யுத) என்றும், a "உயிர்க்கெல்லாம் தாயாய் அளிக்கின்ற தண்டாமரைக் கண்ணன்" என்றும் சொல்லுகிறபடியே, அநவதி4கத3யா ஸௌஹார்த்த3ாநுராக3க3ர்ப்ப4மான இக்கடாக்ஷங்களாலே யாயிற்று, 'இவன் இப்படிச் செய்வது' என்று நினைப்பிடுவது. (**தத2ாநுஜாநந்தம்**) 'ஐயராலே யாதொரு விண்ணப்பம் செய்யப்பட்டதோ அது அப்படியே' என்று பாசுரப்பரப்பற நியமித்தருளுவது. 42.

43. **பதவுரை:— ஹத அகி2ல க்லேஶ மலை:**—எல்லா க்லேஶங்களும், (ப்ரக்ருதிஸம்ப3ந்த4மாகிய) மலமும் அற்றவர்களாயும், **ஸ்வப4ாவத:**—இயற்கையாகவே, *** ஸத3ா ஆநுகூல்ய ஏகரஸை:**—எப்போதும் (உன்னுடைய) கைங்கர்யத்தையே பே4ாக்3யமாக உடையவர்களாயும், **தவ உசிதை:**— உனக்குத் தகுந்தவர்களாயும், **க்3ருஹீத தத் தத் பரிசார ஸாத4நை:**—அந்தந்த கைங்கர்யங்களுக்கு ஸாத4னங்களான மாலைகள், தூ4பம், தீ3பம் முதலியவைகளை த4ரித்திருப்பவர்களாயும், **ஸசிவை:**—உனக்கு முறையுணர்த்தி அடிமை

---

* **'த்வத3ாநுகூல்யைக' என்றும் பாடமுண்டு.** a பெரியதிரு 7-1-9.



செய்பவர்களாயுமிருக்கும் நித்ய ஸூரிகளாலே, **யதோ2சிதம்** — ஸ்வரூபத்துக்குத் தக்கபடி, **நிஷேவ்யமாணம்** — ஸேவிக்கப்படுகிறவனாகவும்.

அவ:— (**ஹதாகி2லேதி**) 113. **"सदा पश्यन्ति सूरयः"** (ஸத3ா பஶ்யந்தி ஸூரய:) இத்யாதி3களில் சொல்லுகிற நித்யஸூரிகளுடைய த3ாஸ்யைகஸம்ருத்3தி4யை அநுப4விக்கிறார். a "அடியார்கள் குழாங்களை-உடன் கூடுவதென்றுகொலோ" என்றிறே இவர் ப்ரார்த்த2னை.

**வ்யா:— (ஹதாகி2லக்லேஶமலை:) 279. "अविद्यास्मिताभिनिवेशरागद्वेषाः पञ्च क्लेशाः"** (அவித்3யாஸ்மிதாபி4நிவேஶராக3த்3வேஷா: பஞ்ச க்லேஶா:) என்கிறவை க்லேஶங்கள். அவற்றினுடைய /ப்ராக3ப4ாவத்தை உடையவர்களென்கை. இத்தால் § ப3த்3த4வ்யாவ்ருத்தி சொல்லுகிறது. மலமென்று ப்ரக்ருதியாய், தத்ஸம்ஸர்க்க3ார்ஹதயா வந்த /ப்ராக3ப4ாவத்தை உடையவர்கள் என்கை. இத்தால் ப்ரபு3த்3த4ஸ்வப4ாவயுக்தரான முக்தவ்யாவ்ருத்தியைச் சொல்லுகிறது. (**ஸ்வப4ாவதஸ் * ஸத3ாநுகூல்யைகரஸை:**) ஸத்தாப்ரயுக்தமாக தேவர் திருவடிகளில் கைங்கர்யத்தையே பே4ாக்3யமாக உடையராயிருக்கை. இத்தாலும், ஒரு நாள் தொடங்கி அடிமை செய்யத் தொடங்கின முக்தவ்யாவ்ருத்தியைச் சொல்லுகிறது. (**தவோசிதை:**) ஸ்வரூபரூபகு3ணங்களாலே தேவருக்கு ஸத்3ருஶலக்ஷணரானவர்கள். (**க்3ருஹீதேத்யாதி3**) கைங்கர்யோசித பரிகரங்களை ஆத3ராதிஶயத்தாலே விடமாட்டாமையாலே, b 'சூட்டுநன் மாலை'ப்படியே த4ரித்திருக்கையாலே, தேவர்க்கே ஸத்3ருஶரானவர்களாலே ஸேவிக்கப்படாநின்றுள்ள உன்னை. (**ஸசிவை:**)

---

**/ ப்ராக3ப4ாவம் — முன் எப்பொழுதும் இல்லாதிருத்தல்.**
**§ ப3த்3த4வ்யாவ்ருத்தி — ஸம்ஸாரிகளைக்காட்டிலும் வேறுபாடு.**
*** 'த்வத3ாநுகூல்யைக' என்றும் பாடமுண்டு.**
a திருவாய் 2-3-10. b திருவிருத்தம்-21.

अपूर्वनानारसभावनिर्भरप्रबद्धया मुग्धविदग्धलीलया।
क्षणाणुवत्क्षिप्तपरादिकालया प्रहर्षयन्तं महिषीं महाभुजम्॥ ४४॥

44. அபூர்வநாநாரஸப4ாவநிர்ப்ப4ர-
ப்ரப3த்3த4யா முக்3த4வித3க்3த4லீலயா।
க்ஷணுணுவத் க்ஷிப்தபராதி3காலயா
ப்ரஹர்ஷயந்தம் மஹிஷீம் மஹாபு4ஜம்॥

---

வாத்ஸல்யத்தாலே அவன் முறையழியப் பரிமாற நினைத்தாலும், அவனை முறையுணர்த்தி அடிமைசெய்யுமவர்கள். a'நீதி வானவ'ரிறே. ஆஶ்ரிதரக்ஷணத்தில் தேவரை ப்ரேரிக்குமவர்களிறே. (யதோ2சிதம்) ஸ்வரூபாநுரூபமாக என்னுதல்; அவஸரோசிதமாக என்னுதல். 43.

44. பதவுரை:— அபூர்வ நாநாரஸ ப4ாவ நிர்ப்ப4ர ப்ரப3த்3த4யா—(க்ஷணந்தோறும்) புதிதாயிருக்கும் பலவகை ரஸங்களாலும் நெருங்கிச் சேர்ந்திருப்பதும், க்ஷண அணுவத் க்ஷிப்த பர ஆதி3 காலயா—கணநேரத்தில் ஒரு பகுதிபோல் கழிக்கப்பட்ட (பிரமனின் ஆயுட்காலமாகிய) பரகாலம் முதலியவற்றை உடையதுமான, முக்3த4 வித3க்3த4லீலயா—அழகியதாகவும், ஸாமர்த்2யத்துடன் கூடியதாகவுமிருக்கும் விளையாட்டாலே, மஹிஷீம்—பெரியபிராட்டியை, ப்ரஹர்ஷயந்தம் — ஸந்தோஷப்படுத்துகிறவனாகவும், மஹாபு4ஜம் — (பெரிய பிராட்டியாரை அணைக்கத் தகுந்த) பெரிய கைகளை உடையவனாகவும்.

அவ:— (அபூர்வேதி) 28. "भवांस्तु सह वैदेह्या गिरिसानुषु रंस्यते" (ப4வாம்ஸ்து ஸஹ வைதே3ஹ்யா கி3ரிஸாநுஷு ரம்ஸ்யதே) என்கிறபடியே, பிராட்டியை நாநாரஸங்களாலே உகப்பிக்கும்படியை அனுப4விக்கவேண்டும் என்கிறார்.

வ்யா:— (அபூர்வ) ப்ரதிக்ஷணமும் முன்பு கண்டறியாததுபோலே இருக்கை. (நாநாரஸப4ாவநிர்ப்ப4ர) ப3ஹு

a 'நீதிவானவன்' [அமலனாதி-1] அவனோடு பரமஸாம்யமடைந்த நித்யஸூரிகளை 'நீதிவானவர்' என்கிறார்.



अचिन्त्यदिव्याद्भुतनित्ययौवनस्वभावलावण्यमयामृतोदधिम्।
श्रियः श्रियं भक्तजनैकजीवितं समर्थमापत्सखमर्थिकल्पकम्॥ ४५॥

---

முக2மான ரஸத்தாலும், ப4ாவத்தாலும் நெருங்கும்படி. (ப்ரப3த்3த4யா) ஸம்ப3த்3த4யா. ரஸமாவது:— சேதனர் யாதொன்றை அநுஸந்தி4யாநின்றாலும் 280. "येन माद्यति" (யேந மாத்3யதி) என்கிறபடியே மதி3யாநிற்பர்,— அதிறே ரஸம். அதுக்கு அடி ப4ாவம்,—மாநஸவிகாஸம். (முக்3த4வித3க்3த4லீலயா) அவ்வோ த3ஶாநுகு3ணமாய், முக்3த4மாயும், வித3க்3த4மாயும் உள்ள லீலையாலே. (க்ஷணுணுவத்க்ஷிப்தபராதி3காலயா) ஒரு க்ஷணத்தில் ஏகதே3ஶம்போலே போக்கப்பட்ட பரகாலம், பரார்த்த4காலம் இவற்றை உடைத்தாயிருக்குமதினாலே. பரகாலமாகிறது— ப்3ரஹ்மாயுஸ்ஸு; பரார்த்த4காலமாகிறது— அதில் செம்பாதி. (மஹிஷீம் ப்ரஹர்ஷயந்தம்) 281. "यस्त्वया सह स स्वर्गो निरयो यस्त्वया विना" (யஸ் த்வயா ஸஹ ஸ ஸ்வர்க்கோ3 நிரயோ யஸ் த்வயா விநா), 282. "त्वद्वियोगेन मे राम त्यक्तव्यमिह जीवितम्" (த்வத்3வியோகே3ந மே ராம த்யக்தவ்யமிஹ ஜீவிதம்), 283. "सर्वथा तेन हीनाया रामेण विदितात्मना। तीक्ष्णं विषमिवास्वाद्य दुर्लभं मम जीवितम्॥" (ஸர்வதா2 தேந ஹீநாயா ராமேண விதி3தாத்மநா। தீக்ஷ்ணம் விஷமிவாஸ்வாத்3ய து3ர்லப4ம் மம ஜீவிதம்॥), a"அகலகில்லேன் இறையும்"என்கிறபடியே வ்யதிரேகத்தில் ஆற்றமாட்டாத பிராட்டியை மிகவும் உகப்பியாநின்றுள்ளவனை. "ப்ரஹர்ஷயந்தம்" என்கையாலே இவ்வுகப்பு நித்யம் என்கை. (மஹாபு4ஜம்) கீழ்ச்சொன்ன லீலாரஸத்தாலே உகப்பிக்குமவனேபாதியன்று; b'அணி மானத்தடவரைத்தோளாலே' அணைத்து உகப்பிக்கும். என்றும் ஸ்வரூபகு3ணங்களைக்காட்டில் ரூபகு3ணமிறே இனிதாயிருப்பது. 44.

45. பதவுரை:—அசிந்த்ய தி3வ்ய அத்3பு4த நித்ய யௌவந ஸ்வப4ாவ லாவண்ய மய அம்ருத உத3தி4ம்—நினைக்கமுடியாத

a திருவாய் 6-10-10. b திருவாய் 4-8-2.

45. அசிந்த்யதி$_3$வ்யாத்$_3$பு$_4$தநித்யயௌவந-
ஸ்வப$_4$ாவலாவண்யமயாம்ருதோத$_3$தி$_4$ம் ।
*ஶ்ரிய: ஶ்ரியம்* ப$_4$க்தஜநைகஜீவிதம்
ஸமர்த்த$_2$மாபத்ஸக$_2$மர்த்தி$_2$கல்பகம் ॥

தாய், அப்ராக்ருதமாய், ஆஶ்சர்யமாய், நித்யமாயிருக்கும் யௌவனத்தை இயற்கையாக உடையவனாகவும், அழகு நிறைந்த அமுதக் கடலாகவும், *ஶ்ரிய: ஶ்ரியம்*—திருவுக்கும் திருவாகவும், **ப$_4$க்த ஜந ஏக ஜீவிதம்**—ப$_4$க்தஜநங்களுக்கு ஓருயிராகவும், **ஸமர்த்த$_2$ம்** — (ஞானத்தினால் குறைந்தவர் களையும் கொஞ்சம் கொஞ்சமாகத் தன்னை அனுப$_4$விப்பிக்க வல்ல) ஸாமர்த்$_2$யத்தை உடையவனாகவும், **ஆபத் ஸக$_2$ம்**—ஆபத்திலுதவும் நண்பனாகவும், **அர்த்தி$_2$ கல்பகம்**—யாசிப்ப வர்களுக்குக் கல்பகவ்ருக்ஷம்போன்றவனாகவுமிருக்கிற.

**அவ:**— (**அசிந்த்யேதி**) இப்படிப் பிராட்டியை உகப் பிக்கிற ரஸப$_4$ாவங்களுக்கு ஆஶ்ரயமான வடிவையும், கு$_3$ணங்களையும் அனுஸந்தி$_4$க்கிறார்.

**வ்யா:**— (**அசிந்த்ய**) விக்$_3$ரஹகு$_3$ணங்களுடைய அவாங் மநஸகோ$_3$சரத்வத்தைச் சொல்லுகிறது.* (**தி$_3$வ்ய**) 159. **"न भूतसङ्घसंस्थानो देहोऽस्य परमात्मनः"** (ந பூ$_4$தஸங்க$_4$ஸம்ஸ் தா$_2$நோ தே$_3$ஹோऽஸ்ய பரமாத்மந:) என்கிறபடியே அப்ராக்ருதமாயிருக்கை. (**அத்$_3$பு$_4$த**) க்$_3$ருஹீதாம்ஶம் ஆஶ்சர்யமாயிருக்கை. a "முழுசி வண்டாடிய தண்டு ழாயின் மொய்ம் மலர்க்கண்ணி" என்கிறபடியே இருக்கை. (**நித்ய**) அகாலகால்யத்வத்தைச் சொல்லுகிறது. (**யௌவந ஸ்வப$_4$ாவ**) 284. **"युवाऽकुमारः"** (யுவாऽகுமார:) என்கிறபடியே

* (அதி$_4$கபாட$_2$ம்) ஸ்வரூபத்தையும், கு$_3$ணத்தையும் பரிச்சே$_2$தி$_3$க்கிலும் வடிவில் பே$_4$ாக்$_3$யதை பரிச்சே$_2$தி$_3$க்க வொண்ணாது என்கை. "இச்ச$_2$ாக்$_3$ருஹீதாபி$_4$மதோரு தே$_3$ஹ:". [சது:ஶ்லோகீ வ்யா-ப்ர 25 காண்க.]

a பெரியதிருமொழி 2-8-7.



भवन्तमेवानुचरन्निरन्तरं प्रशान्तनिश्शेषमनोरथान्तरः।
कदाहमैकान्तिकनित्यकिङ्करः प्रहर्षयिष्यामि सनाथजीवितः॥ ४६॥

46. ப$_4$வந்தமேவாநுசரந் நிரந்தரம்
ப்ரஶாந்தநிஶ்ஶேஷமநோரத$_2$ாந்தர: ।
கத$_3$ாऽஹமைகாந்திகநித்யகிங்கர:
ப்ரஹர்ஷயிஷ்யாமி ஸநாத$_2$ஜீவித: ॥

இருக்கை. 285. **"तरुणौ रूपसंपन्नौ"** (தருணௌ ரூபஸம் பந்நௌ) என்கிற ஶ்லோகத்தின்படியே ஸ்வாப$_4$ாவிகமான யௌவனத்தை உடைத்தாயிருக்கை. (**லாவண்யமய**) ப்ரசுரமான ஸாமாந்யஶோபை$_4$யை உடைத்தாயிருக்கை. (**அம்ருதோத$_3$தி$_4$ம்**) ஸர்வப்ரகாரபே$_4$ாக்$_3$யதையாலே, 286. **"अप्रमेयो महोदधिः"** (அப்ரமேயோ மஹோதத$_3$தி$_4$:) என்கிற படியே பரிச்சே$_2$தி$_3$க்கப்போகாமைக்கு ஒரு ஸமுத்$_3$ர மென்னுமத்தனை. (*ஶ்ரிய: ஶ்ரியம்*) a "திருவுக்கும் திருவாகிய செல்வன்" என்கிறபடியே பிராட்டிக்கும் மங்க$_3$ளாவஹனா யிருக்குமவனை. (**ப$_4$க்தஜநைகஜீவிதம்**) b "எல்லாம் கண்ணன்" என்கிறபடியே, ஆஶ்ரிதருக்கு த$_4$ாரகாதி$_3$களெல்லாம் தானேயாயிருக்குமவனை. ப$_4$க்தஜநங்களையே தனக்கு த$_4$ாரகமாக உடையவன் என்றுமாம். 287. **"मम प्राणा हि पाण्डवाः"** (மம ப்ராணா ஹி பாண்ட$_3$வா:). (**ஸமர்த்த$_2$ம்**) அள வுடையரான நித்யஸூரிகள் அனுப$_4$விக்குமவனை, நித்ய ஸம்ஸாரிகள் அனுப$_4$விக்கும்படி c "ஆற்ற நல்ல வகை காட்டுமம்மானை" என்கிறபடியே ஸாத்மிக்க ஸாத்மிக்க அனுப$_4$விப்பிக்கும் ஸாமர்த்$_2$யத்தையுடைய உன்னை. (**ஆபத் ஸக$_2$ம்**) d காணவாராயென்று கண்ணும் வாயும் துவர்ந்த வளவிலே உதவும் ஸ்வப$_4$ாவனான உன்னை. (**அர்த்தி$_2$ கல்பகம்**) e "என்னையாக்கிக்கொண்டு எனக்கே தன்னைத் தந்த கற்பகம்" என்கிறபடியே தன்னை ஔதா$_3$ர்யம் பண்ணுமவனை. 45.

a பெரியதிருமொழி 7-7-1. b திருவாய் 6-7-1. c திருவாய் 4-5-5. d திருவாய் 8-5-2. e திருவாய் 2-7-11.

46. **பதவுரை:—ப$_{4}$வந்தமேவ**—உன்னையே, **நிரந்தரம்**—இடைவிடாமல், **அநுசரந்**—அனுஸரித்துக்கொண்டு, **ப்ரஶாந்த நிஶ்ஶேஷ மநோரத$_{2}$ாந்தர:**—மற்ற எல்லா ஆசைகளும் வாஸனையுமில்லாமல் நீங்கப்பெற்றவனாய், **ஐகாந்திக நித்யகிங்கர:**—ஒருபடிப்பட்டதாய்,நித்யமான கைங்கர்யத்தை உடையவனாய், **ஸநாத$_{2}$ஜீவித:**—ப்ரயோஜனத்துடன் கூடிய வாழ்வை உடையவனாய், **கத$_{3}$ா அஹம் ப்ரஹர்ஷயிஷ்யாமி**—என்று நான் (உன்னையே) மிகவும் உகப்பிக்கப்போகிறேன்?

**அவ:—** (**ப$_{4}$வந்தமித்யாதி$_{3}$**) கீழ்ச்சொன்ன ஸ்வரூபரூப கு$_{3}$ணவிபூ$_{4}$திகளால் பூர்ணனாய், நித்யவிபூ$_{4}$தியிலே குறைவற எழுந்தருளியிருக்கிற தேவரை, ப$_{3}$ாஹ்யமநோரத$_{2}$ங்களைத் தவிர்ந்து, என்னுடைய ஸத்தையாலுள்ள ப்ரயோஜனம் பெறும்படி நித்யகைங்கர்யத்தாலே உகப்பிப்பது என்று? என்கிறார்.

**வ்யா:—** (**ப$_{4}$வந்தம்**) ஸ்வரூபரூபகு$_{3}$ணவிப$_{4}$வை: பரிபூர்ணம். a "இன்பம் பயக்க" என்று தொடங்கி, a "ஆள்கின்ற எங்கள் பிரான்" என்கிற பூர்த்தியைச் சொல்லுகிறது. (**ஏவ**) b "தனக்கேயாக எனைக்கொள்ளுமீதே" என்கிறபடியே, அநுகூலவ்ருத்தி தேவருக்கே அநுகூலமாயிருக்கை. (**அநுசரந்**) 25. **"येन येन धाता गच्छति"** (யேந யேந த$_{4}$ாதா க$_{3}$ச்ச$_{2}$தி), 288. **"एतमानन्दमयमात्मानमुपसंक्रम्य"** (ஏதமாநந்த$_{3}$மயமாத்மாநமுபஸங்க்ரம்ய), 289. **"अनुसञ्चरन्"** (அநுஸஞ்சரந்) 204. **"कुरुष्व मामनुचरं"** (குருஷ்வ மாமநுசரம்) என்கிறபடியே அநுவர்த்தனத்தையுடையனாய். (**நிரந்தரம்**) இடைவிடாதேயிருக்கை. (**ப்ரஶாந்தேத்யாதி$_{3}$**) c "மற்றை நம் காமங்கள் மாற்று" என்று, தேவரையொழிந்த விஷயங்களில் மநோவ்யாபாரங்களை ஸவாஸநமாகத் தவிர்ந்து. (**கத$_{3}$ா**) d "என்று கொல் கண்கள் காண்பது?" e "எந்நாள் யான் உன்னை இனி வந்து கூடுவன்?" என்னும்படியே

**a திருவாய் 7-10-1. b திருவாய் 2-9-4. c திருப்பாவை 29.**
**d திருவாய் 3-6-10. e திருவாய் 3-2-1.**



**धिगशुचिमविनीतं निर्दयं मामलज्जं**
**परमपुरुष ! योऽहं योगिवर्याग्रगण्यैः ।**
**विधिशिवसनकाद्यैर्ध्यातुमत्यन्तदूरं**
**तव परिजनभावं कामये कामवृत्तः ॥ ४७ ॥**

**47. தி$_{4}$க$_{3}$ஶுசிமவிநீதம் நிர்த்த$_{3}$யம் மாமலஜ்ஜம்**
**பரமபுருஷ ! யோऽஹம் யோகி$_{3}$வர்யாக்$_{3}$ரக$_{3}$ண்யை: ।**
**விதி$_{4}$ஶிவஸநகாத்$_{3}$யைர், த்$_{4}$யாதுமத்யந்ததூ$_{3}$ரம்**
**தவ பரிஜநப$_{4}$ாவம் காமயே காமவ்ருத்த: ॥**

---

காலத்துக்கு எல்லை அருளிச்செய்யவேணும். (**அஹம்**) ருசியேயாய், இத்தலையால் உபாயமில்லாத நான். (**ஐகாந்திகநித்யகிங்கர:**) ஏகரூபமாய், யாவதா$_{3}$த்மப$_{4}$ாவியான கைங்கர்யத்தை நிரூபகமாக உடையனாய். (**ஸநாத$_{2}$ ஜீவித:**) ஸநாத$_{2}$மான ஸத்தையை உடையனாய்; என் ஸத்தையை ஸப்ரயோஜனமாக்கி என்கை. (**ப்ரஹர்ஷயிஷ்யாமி**) மிகவும் உகப்பிக்கக்கடவேன். தன்னுடைய அநுவ்ருத்தியால் ஈஶ்வரனுக்குப் பிறந்த ப்ரஹர்ஷமிறே சேதனனுக்கு ப்ராப்யம். 46.

47. **பதவுரை:—பரமபுருஷ**—புருஷோத்தமனே!, **காமவ்ருத்த: ய: அஹம்**—(என்னுடைய) இஷ்டப்படியெல்லாம் நடக்கிறவன் என்று ப்ரஸித்$_{3}$த$_{4}$னான யாவனொரு நான், **யோகி$_{3}$வர்ய அக்$_{3}$ரக$_{3}$ண்யை:**—யோகி$_{3}$ஶ்ரேஷ்ட$_{2}$ர்களுள் முதல்வராக எண்ணத்தகுந்த, **விதி$_{4}$ ஶிவ ஸநக ஆத்$_{3}$யை:**—பிரமன், சிவன், ஸநகர் முதலியவர்களாலும், **த்$_{4}$யாதும்**—நினைப்பதற்கும், **அத்யந்த தூ$_{3}$ரம்**—வெகுதூரமாயுள்ள, **தவ பரிஜநப$_{4}$ாவம்**—உன்னுடைய கைங்கர்யத்தை, **காமயே**—விரும்புகிறேனே, **அஶுசிம்**—அபரிஶுத்$_{3}$த$_{4}$னும், **அவிநீதம்**—(ஓர் ஆசார்யனாலே) ஶிக்ஷிக்கப்படாதவனும், **நிர்த்த$_{3}$யம்**—த$_{3}$யையற்றவனும், **அலஜ்ஜம்**—வெட்கமற்றவனுமான, (**தம்**) **மாம்** **தி$_{4}$க்**—அப்படிப்பட்ட என்னை நிந்தி$_{3}$த்துக்கொள்ளவேண்டும்.

**அவ:—** (தி4க்3தி) இதில், ப்ராப்யனன ஈஶ்வரனுடைய வைலக்ஷண்யத்தையும், தம்முடைய பூர்வவ்ருத்தத்தையும் பார்த்து, விதி4ஶிவஸநகாதி3களுடைய மனஸ்ஸூக்கு அத்யந்ததூ3ரமாய், அஸ்ப்ருஷ்டஸம்ஸாரக3ந்த4ரான நித்யஸூரிகள் ஆசைப்படுமதான கைங்கர்யத்தை ஸம்ஸாரியானவன் ஆசைப்படுவதாவதென் ? ராஜாங்கம் விஷஸம்ஸ்ப்ருஷ்டமாவதே ! என்று a "வளவேழுலகில்" ஆழ்வாரைப்போலே தம்மை நிந்தி3க்கிருர்.

**வ்யா:—** (**அஶுசிம்**) அநாதி3யான தே3ஹஸம்ப3ந்த4யுக்தனுன என்னை. தே3ஹஸம்ப3ந்த4ாப4ாவம் ஸத்தாப்ரயுக்தமான நித்யஸித்3த4ரிறே நித்யஶுத்3த4ர். (**அவிநீதம்**) இவ்வாத்மாவுக்கு தே3ஹஸம்ப3ந்த4ம் அஶுசிஹேது என்று அறிகைக்கு அடியான ஆசார்யஸேவையில்லாமையாலே ஸுஶிக்ஷிதனல்லாத என்னை. (**நிர்த்த3யம்**) அம்ருதத்தை விஷத்தாலே தூ3ஷித்தாற்போல, விலக்ஷணபே4ாக்3யமான ப4க3வத்தத்வத்தைக் கண்ணற்று தூ3ஷிக்கப் பார்த்த நிர்த்த3யனை. (**அலஜ்ஜம்**) 'க4டதா3ஸி ஸார்வபெ4ளமனை மேல் விழுமாபோலே, நம்மைப் பாராதே மேல் விழுந்தோம்; இது அபஹாஸ்யம்' என்று லஜ்ஜிக்கவும் அறியாத என்னை. (**மாம் தி4க்**) இப்படி ஹேயகு3ணபூர்ணனுன என்னை வேண்டேன் என்று தம்மைக் குத்ஸிக்கிருர். (**பரம புருஷ**) ஸர்வாதி4கனுன புருஷோத்தமனே ! (**யோऽஹம்**) நிஹீநாக்3ரக3ண்யன் என்று ப்ரஸித்3த4னுன நான். (**யோகி3 வர்யேத்யாதி3**) யோகி3ஶ்ரேஷ்ட2ரில் ப்ரத2மக3ண்யரான ப்3ரஹ்மருத்3ராதி3களென்ன, ப்3ரஹ்மப4ாவநாநிஷ்ட2ரான ஸநகாதி3களென்ன இவர்களாலே நினைக்கைக்கும் அத்யந்தம் தூ3ரமாயுள்ளத்தை. (**தவ பரிஜநப4ாவம்**) ஆத்மஸ்வாமியாய், நிரதிஶயபே4ாக்3யரான தேவருடைய கைங்கர்யாம்ருதத்தை; ஸத்தாப்ரயுக்தமான ருசியையும், வைலக்ஷண்யத்தையுமுடைய நித்யஸூரிகள் ஆத3ரிக்குமத்தை

a திருவாய் 1-5.



अपराधसहस्रभाजनं पतितं भीमभवार्णवोदरे।
अगतिं शरणागतं हरे! कृपया केवलमात्मसात्कुरु॥ ४८॥

48. அபராத4ஸஹஸ்ரப4ாஜநம்
பதிதம் பீ4மப4வார்ணவோத3ரே |
அக3திம் ஶரணுக3தம் ஹரே !
க்ருபயா கேவலமாத்மஸாத் குரு ||

---

யன்றே நான் ஆத3ரித்தது. (**காமயே**) ஸங்க3த்தளவிலே நின்றேனே? பெற்றல்லது த4ரியாத த3ஶையைப்பற்றி நின்றேன். "கத3ா நு ஸாக்ஷாத்கரவாணி" என்றும், "கத3ா ப்ரஹர்ஷயிஷ்யாமி" என்றும் கூப்பிட்டேன். (**காமவ்ருத்த:**) விஷயப்ரவணனுய் யுக்தாயுக்தங்கள் பாராதாப்போலே, தோற்றிற்றுச் செய்த நான். ராக3ம் ஸ்வரூபத்தைப் பார்க்கவொட்டாதிறே. 47.

48. **பதவுரை:—** **ஹரே!**—து3க்க2ங்களையெல்லாம் போக்கும் எம்பிரானே!, **அபராத4 ஸஹஸ்ர ப4ாஜநம்**—கணக்கற்ற குற்றங்களுக்கு இருப்பிடமாகவும், **பீ4ம ப4வ அர்ணவ உத3ரே**—ப4யங்கரமான ஸம்ஸாரமாகிய கடலினுள், **பதிதம்**—விழுந்தவனுகவும், **அக3திம்**—(உன்னையொழிய வேறு) க3தியற்றவனுகவும், **ஶரணுக3தம்**—'ஶரணுக3தன்' என்று சொல்லிக்கொள்ளுமவனுகவுமிருக்கிற அடியேனை, **கேவலம் க்ருபயா**—(உன்) அருளிஞலேயே, **ஆத்மஸாத்குரு**—உன்னுடையவனுகக் கொள்வாயாக.

**அவ:—** (அபராத4) தம்முடைய அயோக்3யதையை அனுஸந்தி4த்து அகலப்பார்த்தவர் ருசியின் மிகுதியாலே அகலமாட்டாதே நிற்க, 'இந்த அயோக்3யதைக்குப் பரிஹாரமும் நம் க்ருபாஜநிதமான ப்ரபத்தியே காணும்' என்ன மீண்டாராய், 'இந்த அயோக்3யதாஹேதுபூ4த ஸர்வாபராத4ங்களுக்கும் பரிஹாரம் தன்னுடைய வெறு

மையை முன்னிட்டுப் பண்ணும் ப்ரபத்தியேயாகாதே' என்று வேத3ாந்தரஹஸ்யத்தை முன்னிட்டு, 'கேவலக்ருபையாலே தேவர் என் பாபத்தைப் போக்கி விஷயீகரிக்க வேணும்' என்கிருர். அதோ2வா, தாம் ப்ரார்த்தி2த்தபோதே ப்ராப்யம் ஸித்3தி4யாமையாலே, 'ஸம்ஸாரியான நாம் ஆசைப்படக்கடவோமோ?' என்று நிந்தி3த்துக்கொண்டு, பின்பும் ருசியாலே அகலமாட்டாதே, 'இப்படி விளம்பிக்கைக்கு ஹேதுவான பாபத்தையும் தேவருடைய கேவலக்ருபையாலே போக்கித்தந்தருளவேணும்' என்கிருராகவுமாம். அத்தலையில் பெருமையின் எல்லையைப் பார்த்து அகன்ருர் அங்கு; இங்கு நீர்மையின் எல்லையைப் பார்த்துக் கிட்டுகிருர்.

வ்யா:— (அபராத4ஸஹஸ்ரப4ாஜநம்) தேவர் கு3ணைகப4ாஜநரானுப்போலே, அஸங்குசிதமான அபராத4ங்களுக்குக் கொள்கலமான என்னை. அபராத4ஶப்3த3த்தாலே சொல்லிற்று,— புண்யபாபரூபமான ப4க3வந்நிக்3ரஹாநுக்3ரஹமென்கை. ஆகையால் இந்த வேத3ார்த்த2த்தை வெளியிடுகிருர். (பதிதம்) அந்தப் பாபத்தை விளைக்கும் ஸம்ஸாரத்திலேயிருந்திறே கூப்பிடுகிறது. a "கொடுவினைத் தூற்றுள் நின்று". (பீ4ம) ஜ்ஞாநம் பிறந்தார்க்குக் கட்டடங்க ப4யாவஹமாயிருக்குமென்கை. 290. "अहं भीतोऽस्मि देवेश संसारेऽस्मिन् भयावहे" (அஹம் பீ4தோऽஸ்மி தே3வேஶ ஸம்ஸாரேऽஸ்மிந் ப4யாவஹே). (ப4வார்ணவ) பரிச்சே2தி3க்க அரிதாய், அத்தாலே துஸ்தரமாயிருக்கை. ஸம்ஸாரமாகிற கடலிலே புக்கார்க்கு, விஷ்ணுபோதமொழியத் தந்தாமால் கரையேறவொண்ணுதிருக்கை. b "வைகுந்தனென்பதோர் தோணி பெருதுழல்கின்றேன்" என்னக் கடவதிறே. (உத3ரே) c "நின் பன்மாமாயப் பல் பிறவியில் படிகின்ற யான்" என்கிறபடியே, எடுக்கப்பார்த்தாலும் உனக்கும் எட்டாதபடியாயிருக்கை. (பதிதம்) கர்மம் புகத்

a திருவாய் 3-3-9. b நாச்-திரு 5-4. c திருவாய் 3-2-2.



अविवेकघनान्धदिङ्मुखे बहुधा सन्ततदुःखवर्षिणि।
भगवन्! भवदुर्दिने पथः स्खलितं मामवलोकयाच्युत! ॥ ४९ ॥

49. அவிவேகக4நாந்த4தி3ங்முகே2
பு3ஹுதா4 ஸந்ததது3:க்க2வர்ஷிணி ।
ப4க3வந்! ப4வது3ர்த்தி3நே பத2:
ஸ்க2லிதம் மாமவலோகயாச்யுத! ॥

தள்ள விழுந்து கிடக்கிறபடி. (அக3திம்) உன்னையொழிய வேறு புகலற்று இருக்கிற என்னை. (ஶரணாக3தம்) ஶரணாக3தஶப்3த3யுக்தனுன என்னை. (ஹரே) மித்ரப4ாவமேயடியாக ஸமஸ்த து3:க்க2ங்களையும் போக்குகையே ஸ்வப4ாவமாக உடையவனே! (கேவலம் க்ருபயா) ஆர்த்தப்ரபந்நனல்லன் என்னுதே 291. "कृपामात्रमनोवृत्तिः" (க்ருபாமாத்ரமநோவ்ருத்தி:) என்கிறபடியே, ஸஹகாரமில்லாத க்ருபையினுலே. (ஆத்மஸாத்குரு) ஆத்மஸாத்தாகப் பண்ணியருளவேணும். நம்முடையவனென்று விஷயீகரித்தருளவேணும். 48.

49. பதவுரை:— ப4க3வந்!—ஜ்ஞாநஶக்த்யாதி3 கு3ணங்கள் நிறைந்தவனே!, அச்யுத!—அடியவரைக் கைவிடாதவனே!, அவிவேக க4ந அந்த4 தி3ங்முகே2—விவேகமில்லாமையாகிற மேக4ங்களாலே இருளடைந்த திசைகளை உடையதும், ப3ஹுதா4—பலவித4மாக, ஸந்தத து3:க்க2 வர்ஷிணி—இடைவிடாமல் துன்பங்களைப் பொழிகின்றதுமான, ப4வ து3ர்த்தி3நே—ஸம்ஸாரமாகிய மழைக்கால இருளிலே, பத2: ஸ்க2லிதம்—நல்வழியிலிருந்து தவறின, மாம்—அடியேனை, அவலோகய—நோக்கியருளுவாயாக.

அவ:— (அவிவேக) "அபராத4ப3ஹுளமானபின்பு, ஶாஸ்த்ரீயமான உபாயாந்தரங்களைப்பற்றிப் போக்குதல், விட்டுப் பற்றுதல் செய்கையொழிய, 'க்ருபயா கேவலமாத்மஸாத்குரு' என்று நம்மை நிர்ப3ந்தி4க்கிறதென்?"

என்ன, "ஶாஸ்த்ரீயானுஷ்டா2னத்துக்கு ஜ்ஞானமேயில்லை; வேறு க3தியில்லாமையாலே விடமாட்டேன். ஆனபின்பு, க்ருபாகார்யமான விஶேஷகடாக்ஷமே எனக்கு உஜ்ஜீவன ஸாத4னம்" என்கிறார்.

வ்யா:— (அவிவேக) அதாவது:— விவேகாபா4வம்; ஜீவ பரவிவேகாபா4வம்; தே3ஹாத்மவிவேகாபா4வம்; த்யாஜ்யோபாதே3யவிவேகாபா4வம்; ப3ந்த4விமோசநவிவேகாபா4வம்; இவையாகிற மேக4படலங்களாலே திரோஹிதமான மனஸ்ஸையுடையவனாகையாலே உஜ்ஜீவனோபாயத்தில் தி3ங்மாத்ரமும் தெரியாதிருக்கிறதற்கு மேலே. (ப3ஹுதா4 ஸந்ததது3:க்க2வர்ஷிணி) ப3ஹுப்ரகாரமாய், இடைவிடாதே யுண்டான து3:க்க2வர்ஷத்தை உடைத்தானதிலே. அவிவேகம் து3:க்க2த்தை விளைக்கையாவது:—அஜ்ஞானத்தாலே கர்மமாய், அத்தாலே தே3வாதி3ஶரீரப்ரவேஶமாய், அத்தாலே தாபத்ரயரூபமான து3:க்க2மாயிருக்கும். a "பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கும் அழுக்குடம்பும்" என்கிறபடியே. (ப3ஹுதா4) ஆத்4யாத்மிகாதி3ப3ஹுப்ரகாரமாயிருக்கை. (ப4க3வந்) 'இந்த து3:க்க2த்தைப் பரிஹரிக்கைக்கு இத்தலையில் ஜ்ஞானஶக்த்யாத்3யபா4வமும், தேவராலல்லது பரிஹாரமில்லை என்கிற இதுவும் தேவரீர் அறியீரோ?' என்கை. [(பா) (ப4க3வந்) இத்தலையில் து3:க்க2த்தைப் பரிஹரிகைக்கு ஜ்ஞானஶக்த்யபா4வத்தாலும், தேவராலல்லது பரிஹாரமில்லாத இதிலும் தேவர் அறியாததுண்டோ?] (ப4வது3ர்தி3நே) ஸம்ஸாரமாகிற மழைக்காலவிருளிலே. து3ர்தி3நம் — மேக4திமிரம். (பத2:ஸ்க2லிதம்) b "கொடுவினைத்தூற்றுள் நின்று பாவியேன் பல காலம் வழி திகைத்து அலமருகின்றேன்" என்கிறபடியே. (மாம்) கர்மாத்3யுபாயங்களில் ப்ரச்யுதனான என்னை. நான் படுகிற பாடு இதுவானால், ஶாஸ்த்ரீயானுஷ்டா2னத்துக்கு நான் ஆர்? தேவரையொழிய வேறு உண்டோ? என்று கருத்து.

a திருவிருத்தம்-1. b திருவாய் 3-3-9.



**न मृषा परमार्थमेव मे शृणु विज्ञापनमेकमग्रतः।**
**यदि मे न दयिष्यसे ततो दयनीयस्तव नाथ! दुर्लभः॥५०॥**

**50. ந ம்ருஷா பரமார்த்த2மேவ மே**
**ஶ்ருணு விஜ்ஞாபநமேகமக்3ரத:।**
**யதி3 மே ந த3யிஷ்யஸே ததோ**
**த3யநீயஸ் தவ நாத2! து3ர்லப4:॥**

(அவலோகய) 114. "अवलोकनदानेन भूयो मां पालय" (அவலோகந தா3னேந பூ4யோ மாம் பாலய) என்று சொல்லுகிறபடியே, ஸகலக்லேஶமும் போம்படி பார்த்தருளவேணும். ஸாத4நாந்தரநிஷ்ட2ர்க்கும் தேவர் விஶேஷ கடாக்ஷம் உத்தாரகமிறே. 292. "जायमानं हि पुरुषं यं पश्येन्मधुसूदनः" (ஜாயமாநம் ஹி புருஷம் யம் பஶ்யேந்மது4ஸூத3ந:) என்று, அதி4காரஸித்3தி4யும் தேவர் கடாக்ஷமிறே. 104. "जितन्ते पुण्डरीकाक्ष" (ஜிதந்தே புண்ட3ரீகாக்ஷ) என்று, புறம்புள்ள துவக்கை அறுப்பதும் உன் கடாக்ஷமிறே. (அச்யுத) a "அடியரை வல்வினைத் துப்பாம் புலனைந்தும் துஞ்சக்கொடான்" என்கிறபடியே, ஆஶ்ரிதரை ஒரு வழியாலும் நசிக்க விட்டுக் கொடாதவரிறே தேவர். b "அவருயிரைச் சோர்ந்தே போகல் கொடாச்சுடரை" என்னக்கடவதிறே. 49.

50. பதவுரை:— நாத2—எம்பிரானே!, மே—அடியேனுடைய, ஏகம் விஜ்ஞாபநம்—ஒரு விண்ணப்பத்தை, அக்3ரத:-முதலில், ஶ்ருணு-கேட்டருளவேணும்; ந ம்ருஷா—(இந்த விண்ணப்பம்) பொய்யன்று; பரமார்த்த2ம் ஏவ—உண்மையானதே; மே—அடியேனுக்கு, யதி3 ந த3யிஷ்யஸே—அருளாயாகில், தத:—(அடியேன் கைதப்பிப்போனா) பிறகு, தவ—உனக்கு, த3யநீய:—அருளத்தக்கவன், து3ர்லப4:—கிடைக்கமாட்டான்.

a திருவாய் 1-7-2. b திருவாய் 2-3-6.

**அவ:**—(ந ம்ருஷேதி)"தேவர் க்ருபைய(ால)ல்லது வேறு எனக்கு இல்லாதவோபாதி, தேவர் க்ருபைக்கு நானல்லது விஷயமில்லை; இத்தை இழவாதே கொள்ளீர்" என்கிருர்.

**வ்யா:**—(ந ம்ருஷா பரமார்த்த2மேவ) 'இது ஸம்ஸாரத்திலே கேட்டறிவதொன்று அல்லாமையாலே, மெய்யாக மாட்டாது' என்று ஈஶ்வரஹ்ருத3யத்தில் பிறந்த அதிஶங்கையைத் தவிர்க்கைக்காக, அந்வயவ்யதிரேகத்தாலே ஸத்யமென்கிருர். **(ந ம்ருஷா)** லௌகிகர் பக்கலிலே இரக்கம் பிறக்கைக்காக அபு3த்3த்4யா சொல்லும் வார்த்தையைப்போலே பொய்யன்று. **(பரமார்த்த2மேவ)** நினைவுக்கு வாய்த்தலையிலிருந்து அறியும் தேவர் திருமுன்பே, மெய்யே விண்ணப்பம் செய்யலாம்படி ஸத்யமே. **(மே விஜ்ஞாபநம்)** 'ஸர்வஜ்ஞரான தேவர் திருமுன்பே விண்ணப்பம் செய்யுமதுவே உஜ்ஜீவநோபாயம்' என்றிருக்கும் என்னுடைய விண்ணப்பத்தை. a "மெய் நின்று கேட்டருளாய் அடியேன் செய்யும் விண்ணப்பம்" என்னக்கடவதிறே. **(ஏகம்)** அத்3விதீயம்; இதுக்கு மேலாக நிஷ்கர்ஷித்துச் சொல்லுவது ஒரு வார்த்தையில்லை; இதுவே எல்லையான நிஷ்கர்ஷம். **(அக்3ரத: ஶ்ருணு)** மேல் கார்யம் செய்யிலும், செய்யாதொழியிலும் முற்படக் கேட்டருளவேணும். ஸம்ஸாரத்தில் பரிமாருததொன்று என்று அநாத3ரியாதே, அவதா4னம் பண்ணிக் கேட்டருளவேணும். **(யதி3 மே ந த3யிஷ்யஸே)** த3யைகரக்ஷ்யனுன எனக்கு த3யைபண்ணியருளீராகில். **(தத:)** தேவரீரைக் கிட்டின இவ்வஸ்து தப்பினால், பின்பு. **(த3யநீயஸ்தவ)** ரக்ஷ்யவிஷயார்த்தி2யான தேவருக்கு, ஸாபராத4னுய், அனுதாபம் பிறந்த த3யநீயவிஷயம். **(நாத2)** ரக்ஷ்யவிஷயார்த்தி2யாகைக்கு, த3யையேயன்று, ப்ராப்தியுமுண்டு என்கை. **(து3ர்லப4:)** த3யைகரக்ஷ்யராயிருப்பார் து3ர்லப4ர். 228. "**स महात्मा सुदुर्लभः**" (ஸ மஹாத்மா ஸுது3ர்லப4:) என்னுமவரிறே தேவர். 50.

a திருவிருத்தம் 1.



तदहं त्वदृते न नाथवान् मदृते त्वं दयनीयवान्न च।
विधिनिर्मितमेतदन्वयं भगवन्! पालय मा स्म जीहपः॥ ५१॥

51. தத3ஹம் த்வத்3ருதே ந நாத2வாந்
மத்3ருதே த்வம் த3யநீயவாந் ந ச।
விதி4நிர்மிதமேதத3ந்வயம்
ப4க3வந்! பாலய மா ஸ்ம ஜீஹப:॥

51. பதவுரை:— ப4க3வந் — ஜ்ஞாநம் நிறைந்தவனுன எம்பெருமானே!, தத் — ஆதலால், அஹம் — அடியேன், த்வத் ருதே — உன்னைத்தவிர, ந நாத2வாந் — (வேறு) நாதனற்றவன், த்வம் ச—நீயும், மத் ருதே—என்னைத்தவிர (வேறொருவனை), ந த3யநீயவாந் — அருளுக்கு விஷயமாக உடையையல்லை. விதி4 நிர்மிதம் — உன் அருளாலே ஏற்பட்ட, ஏதத3ந்வயம் — இந்த ஸம்ப3ந்த4த்தை, பாலய— ரக்ஷித்துக்கொள். மா ஸ்ம ஜீஹப: — கைவிட்டுவிட வேண்டாம்.

**அவ:**— (தத3ஹம்) "இப்படி த3யநீயத3யாவான்களான இருவர்க்கும் முக்2யமான இஸ்ஸம்ப3ந்த4ம்தானும் தேவரீருடைய க்ருபையாலேயாயிற்று; ஆனபின்பு இதைக் கைவிடாதே ரக்ஷித்தருளவேணும்" என்கிருர்.

**வ்யா:**— (தத்) ஆதலால். த3யநீயர் தேவருக்கு து3ர்லப4மானபின்பு **(அஹம்)** ஸாபராத4னுய், அனுதாபம் பிறந்த நான். **(த்வத்3ருதே ந நாத2வாந்)** 196. "**भृशं भवति दुःखितः**" (ப்4ருஶம் ப4வதி து3:க்கி2த:) என்று, து3:க்கி2யான என்னிலும் என் து3:க்க2த்தைப் பொறுக்கமாட்டாத தேவரையொழிய நாத2வானல்லேன். பரது3:க்கா2ஸஹிஷ்ணுத்வமிறே த3யை. **(மத்3ருதே த்வம் த3யநீயவாந் ந ச)** த3யைகரக்ஷ்யனுன என்னையொழிந்தாலும், தேவரீருடைய க்ருபை குமரிருந்து போமித்தனை. **(ஏதத3ந்வயம் விதி4 நிர்மிதம்)** ஒருவரையொழிய ஒருவருக்குச் செல்லாத இம்

**वपुरादिषु योऽपि कोऽपि वा गुणतोऽसानि यथातथाविधः।**
**तदयं तव पादपद्मयोरहमद्यैव मया समर्पितः ॥ ५२ ॥**

**52. வபுராதி3ஷு யோऽபி கோऽபி வா**
**கு3ணதோऽஸாநி யதா2ததா2வித4: ।**
**தத3யம் தவ பாத3பத்3மயோ:**
**அஹமத்3யைவ மயா ஸமர்ப்பித: ॥**

---

முக்2யஸம்ப3ந்த4ம் தேவரீருடைய கேவலக்ருபையாலே வந்தது. a "விதிவாய்க்கின்று காப்பாரார்" என்கிறபடியே. இப்பக்ஷத்தில், 'தத3ஹம்' என்கிறவிடத்தில் தச்ச2ப்3த3ம் மேலுக்கு உடலாக இங்கும் அந்வயிக்கக்கடவது. அத2வா, விதி4யென்று தை3வமாய், 293. "**इच्छात एव तव विश्वपदार्थसत्ता**" (இச்ச2ாத ஏவ தவ விஶ்வபதா3ர்த்த2ஸத்தா) என்கிறபடியே ஸத்தாப்ரயுக்தமான ஸம்ப3ந்த4த்தைச் சொல்லிற்றாகவுமாம். (**ப4க3வந்**) இவற்றில் தேவருக்கு அறிவிக்கவேண்டுவது உண்டோ? (**பால்ய**) இதை ரக்ஷித்தருளவேண்டும் என்னுதல்; இதை பு4ஜித்தருளவேண்டும் என்னுதல். 'பு4ஜ-பாலநாப்4யவஹாரயோ:'. (**மா ஸ்ம ஜீஹப:**) இத்தலையில் பூர்வாபராத4த்தைப் பார்த்தாதல், தேவர் பூர்த்தியைப் பார்த்தாதல் கைவிட்டருளாதொழியவேண்டும். 51.

52. **பதவுரை:— வபுராதி3ஷு** — ஶரீரம் முதலியவைகளுள், **ய: அபி க: அபி வா** — ஏதேனுமொன்றாகவும், **கு3ணத:** — ஸ்வபா4வத்தினால், **யதா2 ததா2வித4:** — ஏதேனுமொருபடிப்பட்டவனாகவும், **அஸாநி** — இருக்கக்கடவேன்; [ அவைகளில் எனக்கு ஒரு நிர்ப்ப3ந்த4முமில்லை. ] **தத்**— ஆகையால், **அயம் அஹம்**—இந்த நான், **தவ**—உன்னுடைய, **பாத3 பத்3மயோ:** — இரு திருவடித் தாமரைகளிலும், **அத்3யைவ**—இந்த க்ஷணத்திலேயே, **மயா** — என்னால், **ஸமர்ப்பித:**— ஸமர்ப்பிக்கப்பட்டேன்.

---

a திருவாய் 5-1-1.



**அவ:— ( வபுராதி3ஷு )** இதில், "ஆத்மாநுரூபமாகவன்றோ நம்முடைய ரக்ஷணமிருப்பது; த3யநீயரான உம்முடைய ஸ்வரூபத்தை நிஷ்கர்ஷித்து நம் பக்கலிலே ஸமர்ப்பியும்" என்ன, a "சிறப்பில் வீடு" என்கிற பாட்டின்படியே, "எனக்கு அதில் நிர்ப்ப3ந்த4மில்லை; அஹம்பு3த்3தி4போ3த்4யமான இவ்வஸ்து, தேவர் திருவடிகளிலே என்னாலே ஸமர்ப்பிதம்" என்கிறார்.

**வ்யா:— ( வபுராதி3ஷு )** தே3ஹேந்த்3ரியமந:ப்ராண பு3த்3தி4களைச் சொல்லுகிறது. இவற்றில் ஒன்றே ஆத்மா என்பாரும், ப்ரக்ருதே:பரமாய், ஜ்ஞாநாநந்த3லக்ஷணம் என்பாருமாய், ஸ்வரூபத்திலே § விப்ரதிபத்தியுண்டாயிருக்கும். இவற்றில் ஏதேனுமொன்று ஸ்வரூபமாகவுமாம். (**கு3ணதோऽஸாநி யதா2ததா2வித4:**) ஸ்வபா4வத: அணுத்வ விபு4த்வ ஶரீரபரிமாணத்வ நித்யத்வ அநித்யத்வ ஜ்ஞாத்ருத்வாதி3களிலே § விப்ரதிபத்தியுண்டாயிருக்கும். அதில் ஏதேனுமொன்று ஸ்வரூபமாகிலும் அதிலும் எனக்கு ஒரு நிர்ப்ப3ந்த4மில்லை. (**தத்**) தஸ்மாத்; கீழ்ச்சொன்ன ஸ்வரூப ஸ்வபா4வங்களிலே நிர்ப்ப3ந்த4மில்லாமையாலே. (**அஹம்**) பராக3ர்த்த2வ்யாவ்ருத்தனாய், ப்ரத்யக3ர்த்த2பூ4தனாய், ப்ரத்யக்ஷபூ4தனாய் ப்ரகாஶிக்கிற நான். (**தவ பாத3பத்3மயோ:**) ரக்ஷகரான தேவருடைய போ4க்3யமான திருவடிகளிலே. (**அத்3யைவ**) ஆத்மா க்ஷணிகமாகிலும், இந்த க்ஷணத்திலே ஸமர்ப்பிதமென்கை. (**மயா ஸமர்ப்பித:**) என்னாலே ஸமர்ப்பிதன். 294. "**योऽहमस्मि स सन् यजे**" (யோऽஹமஸ்மி ஸ ஸந் யஜே), 295. "**यस्यास्मि न तमन्तरेमि**" (யஸ்யாஸ்மி ந தமந்தரேமி), 296. "**आत्मा राज्यं धनं मित्रं कलत्रं वाहनानि च।...... इति तत्प्रेक्षितं सदा॥**" (ஆத்மா ராஜ்யம் த4நம் மித்ரம் களத்ரம் வாஹநாநி ச। ...... இதி தத்ப்ரேக்ஷிதம் ஸதா3॥), 297. "**राज्यञ्चाहञ्च रामस्य धर्मं वक्तुमिहार्हसि**" (ராஜ்யஞ்சாஹஞ்ச ராமஸ்ய த4ர்மம் வக்துமிஹார்ஹஸி). 52.

---

a திருவாய் 2-9-5. § விப்ரதிபத்தி—அபி4ப்ராயபே4த3ம்.

**मम नाथ! यदस्ति योऽस्म्यहं सकलं तद्धि तवैव माधव!।**
**नियतस्वमिति प्रबुद्धधीरथवा किं नु समर्पयामि ते॥५३॥**

**53.** மம நாத$_2$! யத$_3$ஸ்தி யோऽஸ்ம்யஹம்
ஸகலம் தத்$_3$தி$_4$ தவைவ மாத$_4$வ!।
நியதஸ்வமிதி ப்ரபு$_3$த்$_3$த$_4$தீ$_4$:
அத$_2$வா கிந்நு ஸமர்ப்பயாமி தே ॥

---

**53.** பதவுரை:— நாத$_2$ மாத$_4$வ! — ஸர்வஸ்வாமியாய், லக்ஷ்மீநாத$_2$னை பெருமானே!, **மம யத் அஸ்தி**—எனக்கு யாதொன்று சொந்தமாயிருக்கிறதோ, **ய: அஹம் அஸ்மி**—யாவனொரு நான் இருக்கிறேனோ, **தத் ஸகலம்** — அது முழுவதும், **தவ ஏவ**—உனக்கே, **நியத ஸ்வம்**—எப்பொழுதும் சொந்தமானது, **இதி**—என்று, **ப்ரபு$_3$த்$_3$த$_4$ தீ$_4$:**—தெரிந்துகொண்ட பு$_3$த்$_3$தி$_4$யை உடைய அடியேன், **தே**—உனக்கு, **கிம் நு ஸமர்ப்பயாமி**—எதைத்தான் ஸமர்ப்பிப்பேன்?

அவ:—(மம நாதே$_2$தி) "இவரை ப்$_4$ரமத்தோடே விடுகிறதென்?" என்று பார்த்தருளி, "நீர் ஆர், அத்தை ஆருக்கு ஸமர்ப்பித்தீர்?" என்ன, நிரூபித்தவிடத்து, a "எனதாவியாவியும் நீ ...... எனதாவியார்? யானார்?" என்கிறபடியே, "உமதை நீரே ஸ்வீகரித்தீரித்தனை; ஆத்மஸமர்ப்பணமும் ஆத்மாபஹாரத்தோபாதி" என்று, பண்ணின ஆத்மஸமர்ப்பணத்தை அநுஶயிக்கிறார். ப$_4$க$_3$வத் பரதந்த்ரமான ஆத்மாவுக்கு, அநாத்$_3$யவித்$_3$யாஸித்$_3$த$_4$மான ஸ்வாதந்த்ர்யமடியாக ப$_4$க$_3$வத்$_3$வைமுக்$_2$யம் பிறந்து, அத்தாலே ஹதனென்று பீ$_4$தி பிறந்தவளவிலே, ததீ$_3$யத்வானுஸந்த$_4$ாநத்தால் வந்த தாத$_3$ாத்ம்யைககரண ஸங்கல்பமாதல்; ராஜாப$_4$ரணத்தை ரக்ஷித்துவைத்து ப்ராப்தகாலங்களிலே கொடுக்குமாபோலே, ஆத்மாவை ஈஶ்வரன் பக்கலிலே ஸமர்ப்பிக்கையென்னுதல்; இவை இரண்டும் அர்த்த$_2$மன்று

---

a திருவாய் 2-3-4.



**अवबोधितवानिमां यथा मयि नित्यां भवदीयतां स्वयम्।**
**कृपयैतदनन्यभोग्यतां भगवन्! भक्तिमपि प्रयच्छ मे॥५४॥**

---

என்னும்படி, பண்டே அவனதான வஸ்துவை அவனதாக இசையுமதொழிய, ஸமர்ப்பணமும் ஆத்மாபஹாரத்தோடு ஒக்கும்.

வ்யா:—(நாத$_2$) அகி$_2$லஜக$_3$த்ஸ்வாமிந்! அவனதான ஸம்ப$_3$ந்த$_4$த்தைச் சொல்லுகிறது. (**மம யத$_3$ஸ்தி யோऽஹமஸ்மி**) கு$_3$ணமாயும், விபூ$_4$தியாயும் மமதாவிஷயமாயுள்ளது யாதொன்று; அதுக்கு ஆஶ்ரயமான நான் யாவனொருவனாகிறேன். (**தத் ஸகலம்**) ஔபாதி$_4$கமாயும், ஸ்வாப$_4$ாவிகமாயும் உள்ளதெல்லாம். (**மாத$_4$வ தவைவ**) ஶ்ரிய:பதியாய், ஸர்வஶேஷியாயுள்ள உன்னுடையது. அவத$_4$ாரணத்தால், அந்யஶேஷத்வத்தை வ்யாவர்த்திக்கிறது. (ஹி) 239. "**सर्वेषामेव लोकानां पिता माता च माधवः**" (ஸர்வேஷாமேவ லோகாநாம் பிதா மாதா ச மாத$_4$வ:) இத்யாதி$_3$ப்ரமாண ப்ரஸித்$_3$தி$_4$யைச் சொல்லுகிறது. (**நாத$_2$ மாத$_4$வ**) ஸர்வஸ்வாமியாய், ஶ்ரிய:பதியான வஸ்துவுக்கே அநந்யார்ஹஶேஷம் ஸர்வபதா$_3$ர்த்த$_2$ங்களும் என்கை. a "யானே நீ என் உடைமையும் நீயே". (**நியதஸ்வமித்யாதி$_3$**) ஸமர்ப்பணம் மிகையாம்படி ஜ்ஞாநம் பிறந்த காலத்துடன், ப்$_4$ரமித்த காலத்துடன் வாசியற நியதஸ்வம். (**இதி ப்ரபு$_3$த்$_3$த$_4$தீ$_4$:**) என்று தெரிந்த பு$_3$த்$_3$தி$_4$யையுடைய நான். (**அத$_2$வா**) கீழில் ஸமர்ப்பண பக்ஷவ்யாவ்ருத்தி. (**தே கிந்நு ஸமர்ப்பயாமி**) இத்தை உடைய உனக்கு எதை ஸமர்ப்பிப்பேன்? ஸமர்ப்பணீயம் ஏது? ஸமர்ப்பகர் ஆர்? ஸமர்ப்பணீயமாகைக்கு ஸ்வாம்யமில்லை. ஸமர்ப்பிக்கைக்கு ஸ்வாதந்த்ர்யமில்லை. ஸம்ஸாரபீ$_4$தியாலே ஸமர்ப்பிக்கையும், ஸ்வரூபயாதா$_2$த்ம்ய ஜ்ஞாநத்தாலே அநுஶயிக்கையும் இரண்டும் யாவந்மோக்ஷம் அநுவர்த்திக்கக்கடவது. 53.

---

a திருவாய் 2-9-9.

54. அவபோ$_3$தி$_4$தவாநிமாம் யதா$_2$
மயி நித்யாம் ப$_4$வதீ$_3$யதாம் ஸ்வயம் ।
க்ருபயைதத$_3$நந்யபோ$_4$க்$_3$யதாம்
ப$_4$க$_3$வந் ! ப$_4$க்திமபி ப்ரயச்ச$_2$ மே ॥

54. பதவுரை:—ப$_4$க$_3$வந்—எம்பிரானே!, மயி-என்னிடத்தில், நித்யம்—என்றுமிருக்கும், இமாம் ப$_4$வதீ$_3$யதாம்—இந்த ஶேஷத்வத்தை, யதா$_2$—எப்படி, அவபோ$_3$தி$_4$தவாந்—அறிவித்தாயோ (அப்படியே), ஸ்வயம் க்ருபயா—கேவலக்ருபையினாலே, ஏதத$_3$நந்யபோ$_4$க்$_3$யதாம்—இதைத்தவிர வேறொன்றில் இனிமையை உடையதல்லாத, ப$_4$க்திம் அபி—ப$_4$க்தியையும், மே ப்ரயச்ச$_2$—அடியேனுக்குக் கொடுத்தருளுவாயாக.

அவ:— (அவபோ$_3$தி$_4$த) "ஆத்மாபஹாரபர்யாயமான ஆத்மஸர்ப்பணத்தளவிலே நான் நில்லாமையாலே, நிர்ஹேதுகக்ருபையாலே, இந்த ஶேஷத்வத்தை உணர்த்தினப் போலே, இந்த ஜ்ஞாநம் புருஷார்த்தோ$_2$பயோகி$_3$யாம்படி இந்த க்ருபையாலே * ஸ்தா$_2$நத்ரயோதி$_3$தபரப$_4$க்தியைத் தந்தருளவேண்டும் என்கிறார்.

வ்யா:— (மயி நித்யாம் ப$_4$வதீ$_3$யதாம் அவபோ$_3$தி$_4$தவாந்) என் பக்கலிலே நியதையான த்வத்$_3$விஷயஶேஷதையை. 'ப$_4$வதீ$_3$யதை' என்கையாலே அந்யஶேஷத்வவ்யாவ்ருத்தி. 'மயி நித்யாம்' என்றது, இத்தலையில் ப$_4$க$_3$வச்சே$_2$ஷத்வம் ஸ்வரூபமென்கை. 298. "स्वत्वमात्मनि सञ्जातं स्वामित्वं ब्रह्मणि स्थितम्" (ஸ்வத்வமாத்மநி ஸஞ்ஜாதம் ஸ்வாமித்வம் ப்$_3$ரஹ்மணி ஸ்தி$_2$தம்). 'இமாம்' என்று, ஶேஷத்வத்தில் இனிமையாலே கொண்டாடுகிறார். (யதா$_2$ அவபோ$_3$தி$_4$தவாந்) யாதொருபடி அறிவிக்கப்பட்டேன். (ஸ்வயம் க்ருபயா)

* ஸ்தா$_2$நத்ரயோதி$_3$தபரப$_4$க்தியாவது:— கீ$_3$தையில் "புருஷஸ்ஸ பர: பார்த்த$_2$ ப$_4$க்த்யா லப்$_4$யஸ்த்வநந்யயா" [8-22], "ப$_4$க்த்யா த்வநந்யயா ஶக்ய:" [11.54], "மத்$_3$ப$_4$க்திம் லப$_4$தே பராம்" [18.54] என்று மூன்று ஸ்தா$_2$னங்களில் சொல்லப்பட்ட பரப$_4$க்தி.



तव दास्यसुखैकसङ्गिनां भवनेष्वस्त्वपि कीटजन्म मे।
इतरावसथेषु मा स्म भूदपि मे जन्म चतुर्मुखात्मना ॥५५॥

55. தவ தா$_3$ஸ்யஸு$_2$கை$_2$கஸங்கி$_3$நாம்
ப$_4$வநேஷ்வஸ்த்வபி கீடஜந்ம மே ।
இதராவஸதே$_2$ஷு மா ஸ்ம பூ$_4$த்
அபி மே ஜந்ம சதுர்முக$_2$ாத்மநா ॥

கேவலக்ருபையாலே. ஸ்வயம் — கேவலம். (ஏதத$_3$நந்யபோ$_4$க்$_3$யதாம்) இதொழிய வேறொன்றும் நெஞ்சுக்கு விஷயமாகாதபடியிருக்கும் போ$_4$க்$_3$யதையை உடைத்தான ப$_4$க்தியை. (ப$_4$க$_3$வந்) ஒன்றை ஒருத்தனுக்குக் கொடுப்போமென்றால், ஒரு தடையில்லாத ஜ்ஞாநஶக்த்யாதி$_3$களால் பூர்ணனென்கை. (ப$_4$க்திமபி ப்ரயச்ச$_2$) யாதொருபடி ஜ்ஞானத்தைத் தந்தாய், அப்படியே ப$_4$க்தியையும் தந்தருளவேணும். (மே) அஜ்ஞனாய், அஶக்தனாய், ருசிமாத்ரமேயாயிருக்கிற எனக்கு. 54.

55. பதவுரை:—தவ—உன்னுடைய, தா$_3$ஸ்ய ஸு$_2$க$_2$ ஏக ஸங்கி$_3$நாம் — ஶேஷத்வமாகிற ஸு$_2$க$_2$மொன்றிலேயே ஈடுபட்டவர்களுடைய, ப$_4$வநேஷு—திருமாளிகைகளில், மே—அடியேனுக்கு, கீடஜந்ம அபி—புழுவாய்ப் பிறப்பதாவது, அஸ்து—உண்டாகவேண்டும். இதர ஆவஸதே$_2$ஷு—மற்றவர்களின் வீடுகளில், சதுர்முக$_2$ ஆத்மநா ஜந்ம அபி—பிரமனாகப் பிறப்பதும், மே—எனக்கு, மா ஸ்ம பூ$_4$த்—ஏற்படவேண்டியதில்லை.

அவ:— (தவ தா$_3$ஸ்யேதி) ப$_4$க$_3$வத்ப்ரஸாத$_3$த்தாலே லப்$_3$த$_4$மான ப$_4$க்திப்ராசுர்யத்தாலே, தச்சே$_2$ஷத்வத்தளவில் பர்யவஸியாதே, ததீ$_3$யஶேஷத்வத்தை ப்ரார்த்தி$_2$க்கிறார். ஆழ்வார் a 'கண்கள் சிவந்து'விலே ப$_4$க$_3$வச்சே$_2$ஷத்வத்தை அனுப$_4$வித்து, b 'கருமாணிக்கமலை'யிலே அநந்யார்ஹ

a திருவாய் 8-8. b திருவாய் 8-9.

ஶேஷத்வத்தை அநுஸந்தி4த்து, அவ்வளவிலும் பர்ய வஸியாதே, a 'நெடுமாற்கடிமை'யிலே ததீ3யஶேஷத்வத்தை அநுஸந்தி4த்தாப்போலேயும், ஸ்ரீராமாயணபுருஷர்களில் ஸ்ரீஶத்ருக்4நாழ்வானைப்போலேயும் ததீ3யஶேஷத்வத்தையே ப்ரார்த்தி2க்கிருர்.

வ்யா:— (தவ தா3ஸ்யஸுகை2கஸங்கி3நாம்) ஐஶ்வர்ய கைவல்யஸுக2ங்கள் விக்4னமாம்படியிறே தா3ஸ்யஸுக2மிருப்பது. 299. " तस्यान्तरायो मैत्रेय! देवेन्द्रत्वादिकं फलम् " (தஸ்யாந்தராயோ மைத்ரேய! தே3வேந்த்3ரத்வாதி3கம் ப2லம்) 300. "स्वर्गाप्तिस्तस्य विघ्नोऽनुमीयते" (ஸ்வர்க்கா3ப்திஸ்தஸ்ய விக்4நோऽநுமீயதே) என்றும், b "அற்றது பற்றெனில் உற்றது வீடுயிர் செற்றது" என்றும், c "இறுகலிறப்பு" என்றும் இவை தா3ஸ்யத்துக்கு விரோதி4யாயிறே இருப்பது. (ஏகஸங்கி3நாம்) 30. "निस्तरन्ति मनीषिणः" (நிஸ்தரந்தி மநீஷிண:) என்றும், 29. "सोऽध्वनः पारमाप्नोति तद्विष्णोः परमं पदम्" (ஸோऽத்4வந: பாரமாப்நோதி தத்3 விஷ்ணோ: பரமம் பத3ம்) என்றும் ஸம்ஸாரநிவ்ருத்தியால் வந்த ஸுக2மும், பரமபத3ப்ராப்தியால் வந்த ஸுக2மும் தா3ஸ்யஸுக2த்துக்கு அபாயமென்கை. 64. "तस्य यज्ञवराहस्य विष्णोरमिततेजसः। प्रणामं येऽपि कुर्वन्ति तेषामपि नमो नमः॥" (தஸ்ய யஜ்ஞவராஹஸ்ய விஷ்ணோரமிததேஜஸ:। ப்ரணாமம் யேऽபி குர்வந்தி தேஷாமபி நமோ நம:॥), 301. "वासुदेवस्य ये भक्ताः शान्तास्तद्गतमानसाः। तेषां दासस्य दासोऽहं भवेज्जन्मनि जन्मनि॥" (வாஸுதே3வஸ்ய யே ப4க்தா: ஶாந்தாஸ் தத்3க3தமாநஸா:। தேஷாம் தா3ஸஸ்ய தா3ஸோऽஹம் ப4வேஜ்ஜந்மநி ஜந்மநி॥) d "அடியாரடியாரடியார் எம் கோக்கள் அவர்க்கே குடிகளாய்ச் செல்லும் நல்ல கோட்பாடே—வாய்க்க" என்னக் கடவதிறே தா3ஸ்யரஸம் ரஸித்தால். (தேஷாம் ப4வநேஷு கீடஜந்ம மேऽப்யஸ்து) அவர்கள் திருவடிகளில் அடிமை

a திருவாய் 8-10. b திருவாய் 1-2-5. c திருவாய் 4-1-10.
d திருவாய் 8-10-10.



सकृत्त्वदाकारविलोकनाशया तृणीकृतानुत्तमभुक्तिमुक्तिभिः।
महात्मभिर्मामवलोक्यतां नय क्षणेऽपि ते यद्विरहोऽतिदुस्सहः॥ ५६॥

56. ஸக்ருத் த்வதா3காரவிலோகநாஶயா
த்ருணீக்ருதாநுத்தமபு4க்திமுக்திபி4:।
மஹாத்மபி4ர் மாமவலோக்யதாம் நய
க்ஷணேऽபி தே யத்3விரஹோऽதிது3ஸ்ஸஹ:॥

---

செய்யவேண்டா; அவர்கள் திருமாளிகையில் ஒரு கீடமாய் ஜனிக்குமதாகிலும் உண்டாகவேண்டும். 'அபி' ஶப்3த3ம் அவதா4ரணத்திலேயாய், கீடஜன்மமே உண்டாகவேண்டுமென்றுமாம். மனுஷ்யாதி3 ஜன்மங்களில் ஆசைப்படாதொழிந்தது,— தே3ஶாந்தரப்4ரமணஸம்பா4வனையாலே, உத்பத்திஸ்தி2திலயங்கள் அங்கேயாகக்கிடையாது என்னுமத்தாலே. 'எல்லாரும் உத்க்ருஷ்டஜன்மங்களையன்ரே ஆசைப்படுவது?' என்ன, தந்தாமுகந்ததன்ரே புருஷார்த்த2ம் என்கிறது. எனக்கு இதுவே பெறவேணுமென்கை. (இதராவஸதே2ஷு) தா3ஸ்யரஸம் அறியாதே 'எனக்கு' என்னுமவர்கள் இருப்பிடத்திலே. (சதுர்முக2ாத்மநா ஜந்மாபி மா ஸ்ம பூ4த்) சதுர்முக2ரூபேண வரும் ஜன்மமும் எனக்கு உண்டாமதன்று. சதுர்முக2ாதி3 ஜன்மம் லௌகிகருக்கு ஶ்லாக்4யமானலும், தா3ஸ்யருசியை உடைய எனக்கு வேண்டா என்கிருர். அந்வயத்திலும், வ்யதிரேகத்திலும் இரண்டிலுமுண்டான நிர்ப்ப3ந்த4ம் தோற்ற இருக்கலாம் என்கிருர். 55.

56. பதவுரை:— யத்3 விரஹ:—எந்தப் பெரியோர்களின் பிரிவானது, தே — உனக்கு, க்ஷணே அபி — ஒரு கணப் பொழுதும், அதிது3ஸ்ஸஹ:—மிகவும் பொறுக்கமுடியாததாயிருக்கிறதோ ஸக்ருத் — ஒரு தடவை, த்வத் ஆகார விலோகந ஆஶயா — உன்னுடைய திருமேனியைக் காண வேணும் என்னும் ஆசையினல், த்ருணீக்ருத அநுத்தம

यस्यास्ते महिमानमात्मन इव त्वद्वल्लभोऽपि प्रभुः
नालं मातुमियत्तया निरवधिं नित्यानुकूलं स्वतः।
तां त्वां दास इति प्रपन्न इति च स्तोष्याम्यहं निर्भयो
लोकैकेश्वरि! लोकनाथदयिते! दान्ते! दयान्ते विदन्॥२॥

2. யஸ்யாஸ்தே மஹிமாநமாத்மந
இவ த்வத்3வல்லபே4ாऽபி ப்ரபு4:
நாலம் மாதுமியத்தயா
நிரவதி4ம் நித்யாநுகூலம் ஸ்வத:।
தாம் த்வாம் தா3ஸ இதி ப்ரபந்ந
இதி ச ஸ்தோஷ்யாம்யஹம் நிர்ப்ப4யோ
லோகைகேஶ்வரி! லோகநாத2த3யிதே!
தா3ந்தே! த3யாந்தே விதந் ॥

2. பதவுரை:— லோகைகேஶ்வரி—லோகத்திற்கு ஒரே ஈஶ்வரியாயிருப்பவளே!, லோகநாத2த3யிதே—லோகங்களுச்கெல்லாம் ஸ்வாமியான எம்பெருமானுக்கு ப்ரியமஹிஷியாயிருப்பவளே! தா3ந்தே—கருணைகல்பவல்லியே! யஸ்யா தே—எந்த உன்னுடைய, நிரவதி4ம்—அளவற்றதும், ஸ்வத நித்யாநுகூலம்—இயற்கையாகவே (ப4க3வானுக்கு) எப்போதும் அனுகூலமாயிருப்பதுமான, மஹிமாநம்—பெருமையை ப்ரபு4: த்வத்3வல்லப4: அபி—ஈச்வரனான உன்னுடைய வல்லப4னும், ஆத்மந: இவ—தன்னுடைய பெருமையைப்போல் இயத்தயா—இவ்வளவென்று, மாதும் ந அலம்—அளவிட்டறிய மாட்டானோ, தாம் த்வாம்—அப்படிப்பட்ட உன்னை தா3ஸ: இதி—'தா3ஸன்' என்றும், ப்ரபந்ந: இதி ச—'ஶரணமடைந்தவன்' என்றும், தே த3யாம் விதந் அஹம்—உன்னுடைய கருணையை அறியும் நான், நிர்ப்ப4ய:—ப4யமற்றவனாய், ஸ்தோஷ்யாமி—துதிக்கிறேன்.

வ்யா:— (யஸ்யாஸ்தே மஹிமாநமாத்மந இவ த்வத்3வல்லபே4ாऽபி ப்ரபு4ர் நாலம் மாதுமியத்தயா நிரவதி4ம் நித்யாநு



கூலம் ஸ்வத:) 24. "यस्यायुतायुतांशांशे विश्वशक्तिरियं स्थिता" (யஸ்யாயுதாயுதாம்ஶாம்ஶே விஶ்வஶக்திரியம் ஸ்தி2தா) என்றும், 25. "स्वशक्तिलेशोद्धृतभूतसर्गः" (ஸ்வஶக்திலேஶோத்3த்4ருதபூ4தஸர்க்க3:) என்றும், 26. "मनसैव जगत्सृष्टिं संहारञ्च करोति यः" (மநஸைவ ஜக3த்ஸ்ருஷ்டிம் ஸம்ஹாரஞ்ச கரோதி ய:) என்றும், 27. "परास्य शक्तिर्विविधैव श्रूयते स्वाभाविकी ज्ञानबलक्रिया च" (பராஸ்ய ஶக்திர் விவிதை4வ ஶ்ரூயதே ஸ்வாபா4விகீ ஜ்ஞாநப3லக்ரியா ச) என்றும், 28. "एको ह वै नारायण आसीत्" (ஏகோ ஹை நாராயண ஆஸீத்) என்றும், 29. "दिव्यो देव एको नारायणः" (தி3வ்யோ தே3வ ஏகோ நாராயண:) என்றும், இப்படி ப்ரமாணங்களாலே ப்ரதிபாதி3க்கப்பட்ட பரத்வத்தை உடையவனாய், உனக்கு வல்லப4னான ஸர்வேஶ்வரனுமகப்பட, யச்ச2ப்3த3த்தாலே அவாங்மநஸகோ3சரமாயிருக்கிற உன்னுடைய அளவிறந்திருக்கிற பெருமையை இவ்வளவென்று நிரூபிக்குமளவில், a "தனக்கும் தன் தன்மையறிவரியான்" என்கிறபடியே தன் வைப4வநிரூபணம் பண்ணத் தான் மாட்டாதாப்போலே உன்னுடைய வைப4வநிரூபணம் பண்ணும்போது அஸமர்த்த2னாயிருக்கும். 'ஆனால் ஜக3த்துக்கு ஶேஷித்2வித்வம் உண்டோ?' என்றால்: (நித்யாநுகூலம் ஸ்வத:) 16. "अस्येशाना जगतो विष्णुपत्नी" (அஸ்யேஶாநா ஜக3தோ விஷ்ணுபத்நீ) என்கையாலே ஜக3த்தைப் பற்ற இவளுக்கு ஶேஷிணீத்வமும், அவனைப்பற்ற ஶேஷத்வமும் ப்ரதிபாதி3க்கப்படுகையாலே ஶேஷித்3வித்வமில்லை. 'ஆனால் இவனைப்பற்ற இவள் ஶேஷபூ4தையாகில், இவளுடைய வைப4வநிரூபணம பண்ணவொண்ணாதே' என்னவொண்ணாது. அதெங்ஙனேயென்றால்: 30. "अपूर्वनानारसभावनिर्भरप्रबद्धया मुग्धविदग्धलीलया" (அபூர்வநாநாரஸபா4வநிர்ப்ப4ரப்ரப3த்3த4யா முக்3த4வித3க்3த4லீலயா) என்று அதிவித3க்3த4மாயிருந்துள்ள க்ரீடா3வைப4வத்தாலே b "பித்தர் பனிமலர்

a திருவாய் 8-4-6. b திருநெடுந்தாண்டகம் 18.

மேல் பாவைக்கு'' என்கிறபடியே ப்ரேமபரவஶனுயிருக்கை யாலே ஸர்வஜ்ஞனுயிருந்தானேயாகிலும் நிரூபிக்கமாட் டாதேயாய்த்து இருப்பது.

**(தாம் த்வாம்)** கீழ் ப்ரதிபாதி$_3$க்கப்பட்ட பரத்வத்தை நிரூபகத$_4$ர்மமாக உடையையாயிருக்கிற உன்னை என்றபடி. **(த$_3$ாஸ இதி)** 'அடியேன்' என்றுகொண்டு ஆஶ்ரயிக்கிறேன் என்கிருர். 15. "**ईश्वरीं सर्वभूतानां**" (ஈஶ்வரீம் ஸர்வபூ$_4$தாநாம்) என்றும், 16. "**अस्येशाना जगतः**" (அஸ்யேஶாநா ஜக$_3$த:) என்றும் சொல்லுகையாலே, நமக்கு ஜக$_3$த்தைப் பற்ற ஶேஷிணீத்வம் ஸாத$_4$ாரணமன்ருே? உமக்கு அவர்களிற் காட்டில் விஶேஷமென்? என்று பிராட்டி அருளிச்செய் தார். 'அவர்களிற்காட்டில் நெடுவாசியுண்டே; ஸ்வரூபாநு ரூபமான ஶேஷத்வபூர்வகமாக ப்ரபந்நனுனேன்' என் கிருர், — **(ப்ரபந்ந இதி ச)** என்றுகொண்டு. **(ஸ்தோஷ்யாம் யஹம் நிர்ப்ப$_4$ய:)** அதினுலே நிர்ப்ப$_4$யனுய்க்கொண்டு ஸ்தோத்ரம் பண்ணுகிறேன் என்கிருர். ஸ்தோத்ரமாகிறது இல்லாததொன்றைச் சொல்லுகையாயிருக்கும். இங்குத் தைக்கு அங்ஙனல்ல; 31. "**भूतार्थव्याहृतिस्सा हि न स्तुतिः परमेष्ठिनः**" (பூ$_4$தார்த்த$_2$வ்யாஹ்ருதிஸ் ஸா ஹி ந ஸ்துதி: பரமேஷ்டி$_2$ந:) என்கிறபடியே உள்ள கு$_3$ணங்களைத்தான் யத$_2$ாவத் ப்ரதிபாதி$_3$க்கப் போகாதேயாய்த்து இருப்பது. இவையும் எத்தாலேயென்ருல்: **(லோகைகேஶ்வரி)** ஜக$_3$த் தைப்பற்ற இவள் ஶேஷிணியாகையாலே. இவளுக்கு ஜக$_3$த்தைப்பற்ற ஸ்வாமிநீத்வம் எத்தாலே வந்ததென்ருல்: **(லோகநாத$_2$த$_3$யிதே)** லோகநாத$_2$னுயிருக்கிற நாராயணனுக்கு தி$_3$வ்யமஹிஷியாகையாலே.

"இங்ஙனெத்த மேன்மையை உடையோமான நம்மை உம்மால் பரிச்சே$_2$தி$_3$க்கப்போமோ?'' எனப் பிராட்டி திருவுள்ளமாக, "அது ஒக்கும்; உம்முடைய மேன்மையை நிரூபித்தோமாகிலன்ருே நாங்கள் ப$_4$ங்கு$_3$ரதீ$_4$



**(भङ्गुरधी)**களாவது. உம்முடைய நீர்மையை நிரூபிக்கும் போது மந்த$_3$மதிகளாயிருந்துள்ள அஸ்மத$_3$ாதி$_3$களுக்கும் ஸ்தோத்ரம் பண்ணுகையிலே யோக்$_3$யதையுண்டாம்'' என்கிருர். **(த$_3$ாந்தே)** * கருணேஜ்ஜ்வலஸம்வர்த்தி$_4$தையா யிருக்கிற கற்பகக் கொடியே! **(த$_3$யாம் தே வித$_3$ந்)** த$_3$யை யாவது,– "ஸ்வார்த்த$_2$நிரபேக்ஷா பரது$_3$:க்க$_2$ா ஸஹிஷ்ணுதா'' என்றிறே த$_3$யாலக்ஷணமிருக்கும்படி. அங்ஙனெத்திருந் துள்ள உன்னுடைய த$_3$யையை அறியாநின்றுகொண் டேன் என்றபடி. "அங்ஙனெத்த க்ருபை நம் பக்க லுண்டோ?'' என்று திருவுள்ளமாக, 32. "**पापानां वा...... नापराध्यति ॥**'' (பாபாநாம் வா ...... நாபராத்$_4$யதி ॥) என்று கொண்டு, எம்பெருமான் தே$_3$வகார்யார்த்த$_2$மாக யாதொரு தி$_3$வ்யமங்க$_3$ளவிக்$_3$ரஹத்தைக் கொண்டான் தத$_3$னுகூலமாக தேவரீரும் வடிவைக்கொள்ளக் கடவதாயிருக்கையாலே, அவன் ராக$_4$வனுய்க்கொண்டு அவதரித்தபோது, தேவரீரும் ஸ்ரீ ஜநகராஜன் திருமகளான ஸீதையாய்க்கொண்டு அவதரித்து, ராவணனைப் புத்ரமித்ரகளத்ராதி$_3$களோடு தரைப்படுத்துகைக்காகவும், ஸ்ரீ விபீ$_4$ஷணுழ்வானை ஸ்த$_2$ா பிக்கைக்காகவும் அஶோகவனிகையிலே இருந்து, காட்டை வெட்டி நாடாக்கினுப்போலேயும், களைபறித்துப் பயிராக்கு மாபோலேயும், அஸங்கிராஸபூர்வகமாக ஸத்பாலனம் பண்ணுகைக்காக ராவணனைக் கொன்றருளினவனந்தரமாக, தர்ஜநப$_4$ர்த்ஸநாதி$_3$களைப் பண்ணின ராக்ஷஸிகளைக் கொல் லுகையிலே உத்$_3$யுக்தனுயிருந்துள்ள திருவடியைக் குறித்து உன் பரமக்ருபையை ப்ரகடீகரித்தபடியை பு$_3$த்$_3$தி$_4$ பண்ணிக்கொண்டு நிர்ப்ப$_4$யனுய் ஸ்தோத்ரம் பண்ணினே னென்கிருர் ஆளவந்தார். 2.

---

**• "கருணும்ருதஸம்வர்த்தி$_4$தையான கற்பகக்கொடியே'' என்று இவருடைய குமாரரான நாயனுராச்சான் பிள்ளையின் வ்யாக்$_2$யான பாட$_2$ம்.**

ईषत्त्वत्करुणानिरीक्षणसुधासन्धुक्षणाद्रक्ष्यते
नष्टं प्राक्तदलाभतस्त्रिभुवनं संप्रत्यनन्तोदयम्।
श्रेयो नह्यरविन्दलोचनमनःकान्ताप्रसादादृते
संसृत्यक्षरवैष्णवाध्वसु नृणां संभाव्यते कर्हिचित्॥ ३॥

3. ஈஷத் த்வத்கருணாநிரீக்ஷண
ஸுத$_4$ாஸந்து$_4$க்ஷணாத் ரக்ஷ்யதே
நஷ்டம் ப்ராக் தத$_3$லாப$_4$தஸ்
த்ரிபு$_4$வநம் ஸம்ப்ரத்யநந்தோத$_3$யம்।
ஶ்ரேயோ ந ஹ்யரவிந்த$_3$லோசநமந:-
காந்தாப்ரஸாத$_3$ாத்$_3$ருதே
ஸம்ஸ்ருத்யக்ஷரவைஷ்ணவாத்$_4$வஸு
ந்ருணாம் ஸம்ப$_4$ாவ்யதே கர்ஹிசித்॥

---

3. பதவுரை:— தத் அலாப$_4$த: — அந்தக் கடாக்ஷம் இல்லாமையாலே, ப்ராக் நஷ்டம்—முன் நசித்துக் கிடந்ததான, த்ரிபு$_4$வநம் — மூவுலகமும், ஸம்ப்ரதி — இப்போது, ஈஷத்—சிறிதுபோது, த்வத் கருணா நிரீக்ஷண ஸுத$_4$ா ஸந்து$_4$க்ஷணாத் — உன்னுடைய கருணாகடாக்ஷமாகிற அம்ருத வர்ஷத்தினால், அநந்தோத$_3$யம் — அளவற்ற பெருமையை உடைத்தாகும்படி, ரக்ஷ்யதே — காப்பாற்றப்படுகிறது; ந்ருணாம் — மனிதர்களுக்கு, ஸம்ஸ்ருதி அக்ஷர வைஷ்ணவாத்$_4$வஸு—ஐஶ்வர்யம், கைவல்யம், பரமபத$_3$ம் இவைகளில், ஶ்ரேய:—மேன்மையானது, அரவிந்த$_3$ லோசந மந: காந்தா ப்ரஸாத$_3$ாத் ருதே—தாமரைக்கண்ணனின் மனத்துக்கினியவளான ஸ்ரீதே$_3$வியின் அருளில்லாமல், ந ஹி ஸம்ப$_4$ாவ்யதே—ஏற்படாதன்றோ.

வ்யா:— (ஈஷத் த்வத்கருணாநிரீக்ஷணஸுத$_4$ா ஸந்து$_4$க்ஷணாத் ரக்ஷ்யதே நஷ்டம் ப்ராக் தத$_3$லாப$_4$தஸ் த்ரிபு$_4$வநம்) "पृथिव्यप्सु प्रलीयते। आपस्तेजसि लीयन्ते। तेजो वायौ लीयते। वायुराकाशे लीयते। आकाशमव्यक्ते लीयते। अव्यक्तमक्षरे लीयते। अक्षरं तमसि लीयते। तमः परे देव एकीभवति॥" (ப்ருதி$_2$வ்யப்ஸு ப்ரலீயதே। ஆபஸ்தேஜஸி லீயந்தே। தேஜோ வாயௌ லீயதே। வாயுராகாஶே லீயதே। ஆகாஶமவ்யக்தே லீயதே। அவ்யக்தமக்ஷரே லீயதே। அக்ஷரம் தமஸி லீயதே। தம: பரே தே$_3$வ ஏகீப$_4$வதி॥) என்றும், 28. "न ब्रह्मा नेशानः। नेमे द्यावापृथिवी" (ந ப்$_3$ரஹ்மா நேஶாந:। நேமே த்$_3$யாவா ப்ருதி$_2$வீ) என்றும், 34. "आनीदवातं स्वधया तदेकं। तस्माद्धान्यं न परः किञ्चनास।" (ஆநீத$_3$வாதம் ஸ்வத$_4$யா ததே$_3$கம்। தஸ்மாத்$_3$த$_4$ாந்யம் ந பர: கிஞ்சநாஸ।) என்றும், 35. "तद्धेदं तर्ह्यव्याकृतमासीत्" (தத்$_3$தே$_4$த$_3$ம் தர்ஹ்யவ்யாக்ருதமாஸீத்) என்றும், 36. "आसीदिदं तमोभूतमप्रज्ञातमलक्षणम्। अप्रतर्क्यमविज्ञेयं प्रसुप्तमिव सर्वतः॥" (ஆஸீதி$_3$த$_3$ம் தமோபூ$_4$தம் அப்ரஜ்ஞாதமலக்ஷணம்। அப்ரதர்க்யமவிஜ்ஞேயம ப்ரஸுப்தமிவ ஸர்வத:॥) என்றும் [a] "ஒன்றும் தேவுமுலகுமுயிரும் மற்றும் யாதுமில்லாவன்று" என்றும் ஶ்ருதியோடு ஸ்ம்ருதியோடு ஆழ்வார் பாசுரத்தோடு வாசியற ப்ரதிபாதி$_3$க்கிற ப்ரளயத்திலே, 37. "नारायणाद्ब्रह्मा जायते। नारायणाद्रुद्रो जायते।" (நாராயணாத் ப்$_3$ரஹ்மா ஜாயதே। நாராயணாத் ருத்$_3$ரோ ஜாயதே।) என்றும், 28. "स एकाकी न रमेत" (ஸ ஏகாகீ ந ரமேத) என்றும், 38. "बहुस्यां प्रजायेयेति" (ப$_3$ஹுஸ்யாம் ப்ரஜாயேயேதி) என்றும், 39. "तत्सृष्ट्वा तदेवानुप्राविशत्" (தத் ஸ்ருஷ்ட்வா ததே$_3$வாநுப்ராவிஶத்) என்றும், 35. "तन्नामरूपाभ्यां व्याक्रियत" (தந்நாமரூபாப்$_4$யாம் வ்யாக்ரியத) என்றும், 40. "सर्वाणि रूपाणि विचित्य धीरः नामानि कृत्वाऽभिवदन् यदास्ते" (ஸர்வாணி ரூபாணி விசித்ய தீ$_4$ர: நாமாநி க்ருத்வாऽபி$_4$வத$_3$ந் யத$_3$ாஸ்தே) என்றும், 41. "सर्वे निमेषा जज्ञिरे विद्युतः पुरुषादधि" (ஸர்வே நிமேஷா ஜஜ்ஞிரே வித்$_3$யுத: புருஷாத$_3$தி$_4$) என்றும், 42. "अप एव ससर्जादौ तासु वीर्यमवासृजत्। तदण्डमभवद्धैमं सहस्रांशुसमप्रभम्॥ तस्मिन् जज्ञे स्वयं ब्रह्मा सर्वलोकपितामहः॥ ततः स्वयंभूर्भगवानव्यक्ते

---

a திருவாய் 4-10-1.

**व्यञ्जयन्निदम्। महाभूतादि वृत्तौजाः प्रादुरासीत्तमोनुदः॥"** (அப ஏவ ஸஸர்ஜாதௌ$_3$ தாஸு வீர்யமவாஸ்ருஜத்। தத$_3$ண்ட$_3$மப$_4$வத்$_3$தை$_4$மம் ஸஹஸ்ராம்ஶுஸமப்ரப$_4$ம்॥ தஸ்மிந் ஜஜ்ஞே ஸ்வயம் ப்$_3$ரஹ்மா ஸர்வலோகபிதாமஹ:॥ ததஸ் ஸ்வயம்பூ$_4$ர் ப$_4$க$_3$வாநவ்யக்தே வ்யஞ்ஜயந்நித$_3$ம்। மஹாபூ$_4$தாதி$_3$வ்ருத்தௌஜா: ப்ராது$_3$ராஸீத் தமோநுத$_3$: ॥) என்றும், a "நான்முகன் தன்னொடு தேவருலகோடுயிர் படைத்தான்" b "நான்முகனை நாராயணன் படைத்தான் நான்முகனும், தான்முகமாய்ச் சங்கரனைத்தான் படைத்தான்" என்றும் இப்படி ப்ரதிபாதி$_3$க்கப்பட்ட ப்$_3$ரஹ்மா முதலான ஸ்ருஷ்டியை ஈஶ்வரன் உகக்கும்போது 6. **"यद्भ्रूभङ्गाः प्रमाणं स्थिरचररचनातारतम्ये मुरारेः, वेदान्तास्तत्त्वचिन्तां मुरभिदुरसि यत्पादचिह्नैस्तरन्ति।"** (யத்$_3$ப்$_4$ரூப$_4$ங்க$_3$ா: ப்ரமாணம் ஸ்தி$_2$ரசரரசநா தாரதம்யே முராரேர் வேதா$_3$ந்தாஸ் தத்த்வசிந்தாம் முரபி$_4$து$_3$ரஸி யத்பாத$_3$சிஹ்நைஸ் தரந்தி।) என்றும், 43. **"उल्लासपल्लवितपालितसप्तलोकीनिर्वाहकोरकितनेमकटाक्षलीलां"** (உல்லாஸபல்லவிதபாலிதஸப்தலோகீநிர்வாஹகோரகிதநேமகடாக்ஷலீலாம்) என்றும் இவள் கடாக்ஷமடியாகவாய்த்து உண்டாவது.

§ இன்னமும், "பிராட்டிக்கு ஜக$_3$த்காரணத்வத்திலே அந்வயமுண்டோ?" என்று நடாதூரம்மாள் பிள்ளானை ப்ரஶ்நம் பண்ண, "ஆவதென்? இவ்வர்த்த$_2$த்தில் ஸந்தே$_3$ஹமுண்டோ? 44. **'आवाभ्यां कर्माणि कर्तव्यानि। प्रजाश्च उत्पादयितव्याः॥'** (ஆவாப்$_4$யாம் கர்மாணி கர்த்தவ்யாநி। ப்ரஜாஶ்சோத்பாத$_3$யிதவ்யா: ॥) என்றன்றோ இருப்பது. இவள் ஸஹத$_4$ர்ம சாரிணியன்றோ" என்று அருளிச் செய்தார் பிள்ளான்.

---

a திருவாய் 4-10-1. b நான்முகன்திருவந்தாதி-1.

§ இந்த ஐதிஹ்யம் நாயனாராச்சான்பிள்ளையின் வ்யாக்$_2$யானத்திலும் காணப்படுகிறது.



ஆக, இப்படி ஶ்ருதிஸ்ம்ருதிகளென்ன, ஆழ்வார் பாசுரமென்ன, இவற்றை அடியொற்றினவர் பாசுரமென்ன இவற்றாலே ஈஶ்வரன் 38. **"तदैक्षत बहु स्यां प्रजायेयेति"** (ததை$_3$க்ஷத ப$_3$ஹு ஸ்யாம் ப்ரஜாயேயேதி) என்று ஸ்ருஷ்டிக்கக்கடவதாகப் பார்த்தருளினபோது, (ஈஷத்த்வத்கருணாநிரீக்ஷணஸுதா$_4$ஸந்து$_4$க்ஷணாத் ரக்ஷ்யதே) அவன் பார்வைக்கு அனுகூலமாய், கருணாஜலபரிபூர்ணமாயிருந்துள்ள உன்னுடைய கடாக்ஷவிக்ஷேபங்களாலேயன்றோ ஜக$_3$த்து ரக்ஷிக்கப்படுகிறது. (நஷ்டம் ப்ராக் தத$_3$லாப$_4$த:) அம்ருதஜலவர்ஷங்களாயிருக்கிற அந்தக் கடாக்ஷமின்றியே இருக்கையாலேயன்றோ 45. **"असन्नेव स भवति"** (அஸந்நேவ ஸ ப$_4$வதி) என்கிறபடியே நாமரூபவிப$_4$ாக$_3$ாநர்ஹமாய்க் கொண்டு இருந்தது. (ஸம்ப்ரத்யநந்தோத$_3$யம்) கடுங் கோடையிலே நொந்த பயிர் மேக$_4$மேறி வர்ஷித்தால் தேறுமாபோலே, நீர் பார்த்தருளுகையாலே இப்போது அநந்தோத$_3$யமாய்த்து. 'ஆவதென்?' என்றால்: மஹீமஹீத$_4$ரஜலநிதி$_4$ரூபமான ஜக$_3$த்தென்ன, தத$_3$ந்தர்வர்த்திகளான தே$_3$வதிர்யங்மநுஷ்யஸ்தா$_2$வரரூபமான சதுர்வித$_4$தே$_3$ஹ ப்ரவேஶம் பண்ணியிருக்கிற ஆத்மகோடிகளென்ன, இவற்றை உடைத்தாயிற்று.

(ஶ்ரேயோ ந ஹ்யரவிந்த$_3$லோசநமந:காந்தாப்ரஸாதா$_3$த்ருதே) 46. **"तस्य यथा कप्यासं पुण्डरीकमेवमक्षिणी"** (தஸ்ய யதா$_2$ கப்யாஸம் புண்ட$_3$ரீகமேவமக்ஷிணீ) என்றுகொண்டு ஈஶ்வரனுடைய உத்பு$_2$ல்லமான தாமரைப்பூப்போலே இருந்துள்ள திருக்கண்மலரில் அழகு. 47. **"मत्स्यः कमललोचनः"** (மத்ஸ்ய: கமலலோசந:) என்றும் 48. **"महावराहः स्फुटपद्मलोचनः"** (மஹாவராஹ: ஸ்பு$_2$டபத்$_3$மலோசந:) என்றும், 49. **"रामो राजीवलोचनः"** (ராமோ ராஜீவலோசந:) என்றும், 50. **"कृष्णः कमललोचनः"** (க்ருஷ்ண: கமலலோசந:) என்றும் இப்படி மத்ஸ்யமநுஷ்யாதி$_2$விக்$_3$ரஹபரிக்$_2$ரஹம்

பண்ணினுலும் கண்ணை மறைக்கப்போகாதேயிறேயிருப்பது. ஸர்வாங்க3ங்களும் மறையும்படியாகக் கவசமிட்டாலும் கண்ணைக் கவசமிடுவானில்லனிறே. ஆக, தாமரைக் கண்ணன் என்கையாலே இவனுக்கு அவாப்தஸமஸ்த காமத்வம் சொல்லப்பட்டது.

(அரவிந்த3லோசநமந:காந்தா) இங்ஙனெத்த வைப4வத்தை உடையனுயிருந்துள்ள ஈஶ்வரனுடைய திருவுள்ளத்திற்கு உகப்பைப் பண்ணுமவளாயிருக்கும். "ப4ார்யை" என்னுதே "காந்தை" என்பானென்? என்ருல்: a"உனக்கேற்கும் கோலமலர்ப்பாவைக்கன்பாகிய என் அன்பேயோ!" என்றும், b"பித்தர் பனிமலர்மேல் பாவைக்கு" என்றும், 51. "अस्या देव्या मनस्तस्मिंस्तस्य चास्यां प्रतिष्ठितम्" (அஸ்யா தே3வ்யா மநஸ்தஸ்மிம்ஸ்தஸ்ய சாஸ்யாம் ப்ரதிஷ்டி2தம்) என்றும் ப்ரமாணமுண்டாகையாலே காந்தாஶப்3த3ப்ரயோக3ம் பண்ணுகிருர். (ப்ரஸாத3ாத்3ருதே) இங்ஙனெத்திருந்துள்ள இவளுடைய ப்ரஸாத3த்தையொழிய.

(ஸம்ஸ்ருத்யக்ஷரவைஷ்ணவாத்4வஸு நருணும் ஸம்ப4ாவ்யதே கர்ஹிசித்) ஸம்ஸ்ருதியாவது ஐஶ்வர்யம்; அக்ஷரமாவது கைவல்யமோக்ஷம்; வைஷ்ணவாத்4வா வாகிறது,— 52. "न च [illegible]वर्तते। न च पुनरावर्तते" (ந ச புநராவர்த்ததே। ந ச புநராவர்த்ததே॥) என்றும், 53. "तद्विष्णोः परमं पदं" (தத்3 விஷ்ணோ: பரமம் பத3ம்) என்றும். c"பிணகொடுக்கிலும் போகவொட்டார்" என்றும், இப்படி ஶ்ருதியோடு, ஆழ்வார் பாசுரத்தோடு வாசியற ப்ரதிபாதி3க்கிற பரமபத3ம் ஆக, இவ்வழிகளில் அரவிந்த3லோசநமந:காந்தையுடைய ப்ரஸாத3த்தையொழிய மநுஷ்யரில் வைத்துக் கொண்டு ஒருவருக்கும் ஶ்ரேயஸ் வாராது என்கிருர் ஆளவந்தார். 3.

a திருவாய் 10-10-6. b திருநெடு-18. c பெரியாழ்-திரு 4-5-2.



शान्तानन्दमहाविभूति परमं यद्ब्रह्म रूपं हरेः
मूर्तं ब्रह्म ततोऽपि तत्प्रियतरं रूपं यदत्यद्भुतम् ।
यान्यन्यानि यथासुखं विहरतो रूपाणि सर्वाणि ता-
न्याहुः स्वैरनुरूपरूपविभवैर्गाढोपगूढानि ते ॥ ४ ॥

4. ஶாந்தாநந்த3மஹாவிபூ4தி
பரமம் யத் ப்3ரஹ்ம ரூபம் ஹரே:
மூர்த்தம் ப்3ரஹ்ம ததோऽபி
தத்ப்ரியதரம் ரூபம் யத3த்யத்3பு4தம்।
யாந்யந்யாநி யதா2ஸுக2ம்
விஹரதோ ரூபாணி ஸர்வாணி தாந்-
யாஹு: ஸ்வைரநுரூபரூபவிப4வைர்
கா3டோ4பகூ3டா4நி தே॥

4. பதவுரை:—ஶாந்த—ஷடூ3ர்மிகளற்றதாய், ஆநந்த3—ஆநந்த3மயமாய், மஹாவிபூ4தி—பெரிய விபூ4திகளை உடையதாய், பரமம்—தனக்கு மேலானதற்றதாய், ப்3ரஹ்ம—பெரிதாயிருப்பதாலும், (பிறரைப்) பெரிதாகச் செய்வதாலும் ப்3ரஹ்மஶப்3த3த்தாலே சொல்லப்படுவதாயிருக்கும், ஹரே: யத் ரூபம்—ஹரியினுடைய யாதொரு ஸ்வரூபமுண்டோ, தத: அபி—அதைக்காட்டிலும், தத்ப்ரியதரம்—அந்த ப4க3வானுக்கு மிகவும் பிரியமாயிருப்பதும், மூர்த்தம்—கண்ணுல் காணக்கூடியதும், ப்3ரஹ்ம—ப்3ரஹ்மஶப்3த3த்தால் சொல்லப்படுவதும், அத்யத்3பு4தம்—மிகவும் அத்3பு4தமானதுமான, ரூபம் யத்—யாதொரு ரூபம் உண்டோ, யதா2ஸுக2ம் விஹரத:—இஷ்டப்படி விளையாடும் எம்பெருமானுக்கு, அந்யாநி ரூபாணி யாநி—மற்றும் யாவை சில ரூபங்களுண்டோ, தாநி ஸர்வாணி—அந்த ரூபங்களெல்லாம், தே—உனக்கு, ஸ்வை: அநுரூபரூபவிப4வை:—அஸாதா4ரணங்களாய் தகுந்தவையாயிருக்கும் தி3வ்ய ரூபங்களால், கா3டோ4பகூ3டா4நி ஆஹு:—நன்ருக ஆலிங்கனம் செய்யப்பட்டவையென்று (ப்ரமாணங்கள்) சொல்லுகின்றன.

வ்யா:— (ஶாந்தாநந்த3மஹாவிபூ4தி பரமம் யத் ப்3ரஹ்ம ரூபம் ஹரே:) ஶாந்தியாவதென்னென்ருல், — 54. "अशनायाऽपिपासे च शोकमोहौ जरामृती। षडूर्मिभिर्विशुद्धा" (அஶநாயாऽபிபாஸே ச ஶோகமோஹௌ ஜராம்ருதீ। ஷடூ3ர்மிபி4ர் விஶுத்3த4ா) என்றுகொண்டு ஶ்ருதியில் சொல்லப்பட்டபடி ஷடூ3ர்மிரஹிதமாயிருக்குமென்றபடி. இன்னமும், 55. "अपक्षयविनाशाभ्यां परिणामर्धिजन्मभिः। वर्जितः शक्यते वक्तुं यस्सदाऽस्तीति केवलम्॥" (அபக்ஷயவிநாஶாப்4யாம் பரிணமர்த்தி4ஜந்மபி4:। வர்ஜித: ஶக்யதே வக்தும் யஸ்ஸதா3ऽஸ்தீதி கேவலம்॥) என்றுகொண்டு பராஶர ப்3ரஹ்மர்ஷியாலே ப்ரதிபாதி3க்கப்பட்டபடி ஷட்3பா4வவிகாரரஹிதம் என்கிறதாகவுமாம். (ஆநந்த3) 56. "ज्ञानानन्दमयं यस्य स्वरूपं परमात्मनः" (ஜ்ஞாநாநந்த3மயம் யஸ்ய ஸ்வரூபம் பரமாத்மந:) என்கிறபடியே ஆநந்த3ரூபமாயிருக்கும். 'ஆநந்த3ரூபமாயிருக்கையாவதென்?' என்ருல்: தன்னைத் தான் அநுப4விக்கும்போது ஸுக2ாவஹமாயிருக்கை. (மஹாவிபூ4தி) 57. "अङ्गुलस्याष्टभागोऽपि न सोऽस्ति मुनिसत्तम। न सन्ति प्राणिनो यत्र कर्मबन्धनिबन्धनाः॥" (அங்கு3லஸ்யாஷ்டபா4கோ3ऽபி ந ஸோऽஸ்தி முநிஸத்தம। ந ஸந்தி ப்ராணிநோ யத்ர கர்மப3ந்த4 நிப3ந்த4நா:॥) என்றுகொண்டு மஹர்ஷியாலே ப்ரதிபாதி3க்கப்படுகையாலே, யாதோரிடத்தில் ஜீவஸமூஹமுண்டு, அங்கே பரமாத்மஸந்நிதி4 உண்டாயிருக்கும். அதெங்ஙனேயென்னில்: 58. "यस्यात्मा शरीरं। यस्य पृथिवी शरीरं।" (யஸ்யாத்மா ஶரீரம்। யஸ்ய ப்ருதி2வீ ஶரீரம்।) என்றுகொண்டு ப்ரமாணமுண்டாகையாலே. ஶரீரத்தையொழிந்தன்றிறே ஶரீரியிருப்பது. ஆக, "மஹாவிபூ4தி" என்று தி3வ்யாத்மஸ்வரூபத்தினுடைய விபு4த்வம் ப்ரதிபாதி3க்கப்பட்டது.

(பரமம்) "பரோ மாऽஸ்யேதி பரம:" என்கிறபடியே இதுதன்னுடைய நிருபமத்வம் ப்ரதிபாதி3க்கப்படுகிறது. 'இதுக்கு ப்ரமாணமென்?' என்ருல்: 59. "न तत्समश्चाभ्यधिकश्च दृश्यते" (ந தத்ஸமஶ்சாப்4யதி4கஶ்ச த்3ருஶ்யதே,) 60.



"न सन्दृशे तिष्ठति रूपमस्य न चक्षुषा पश्यति कश्चनैनम्" (ந ஸந்த்3ருஶே திஷ்ட2தி ரூபமஸ்ய ந சக்ஷுஷா பஶ்யதி கஶ்சநைநம்) [a]"ஒத்தார் மிக்காரையிலையாய மாமாயா!" என்றுமுண்டாகையாலே. யச்ச2ப்3த3த்தாலே 61. "वचसामात्मसंवेद्य" (வசஸாமாத்மஸம்வேத்3யம்) என்கிறபடியே இதுதன்னுடைய அவாங்மநஸகோ3சரத்வம் ப்ரதிபாதி3க்கப்படுகிறது. (ப்3ரஹ்ம) 62. "बृहत्त्वाद्बृंहणत्वाच्च ब्रह्म इत्यभिधीयते" (ப்3ருஹத்த்வாத் ப்3ரும்ஹணத்வாச்ச ப்3ரஹ்ம இத்யபி4தீ4யதே) என்று சொல்லுகிறபடியே, கீழ்ச்சொன்ன மஹாவிபூ4திஶப்3த3த்தாலே ஆர்த்த2மாக ப்ரதிபாதி3க்கப்பட்ட தி3வ்யாத்ம ஸ்வரூபவிபு4த்வம் ப்3ரஹ்மஶப்3த3த்தாலே ஶாப்3த3மாக ப்ரதிபாதி3க்கப்படுகிறது. ஆக, இப்படிப் பூர்வபாத3த்தாலே ஷடூ3ர்மிரஹிதமாய், தனக்கு ஸுக2ாவஹமாய், நிருபமமாய், அவாங்மநஸ கோ3சரமாய், ப்3ருஹத்த்வப்3ரும்ஹணத்வகு3ணயோகி3யாயிருக்கிற தி3வ்யாத்மஸ்வரூபம் ப்ரதிபாதி3க்கப்பட்டது.

இனி, உத்தரவாக்யத்தாலே தி3வ்யமங்க3ளவிக்3ரஹம் ப்ரதிபாதி3க்கப்படுகிறது. (மூர்த்தம் ப்3ரஹ்ம ததோऽபி தத்ப்ரியதரம் ரூபம் யத3த்யத்3பு4தம்) கீழ் ப்ரதிபாதி3க்கப்பட்ட அமூர்த்தமான ப்3ரஹ்மத்திற்காட்டில் ப4க3வானுக்கு அத்யந்தம் ப்ரீதிப்ரகர்ஷஜநகமாய், மூர்த்தமாய், ப்3ரஹ்ம ஶப்3த3வாச்யமாய், அத்யாஶ்சர்யமாயிருக்கிறது யாதொரு தி3வ்யமங்க3ள விக்3ரஹம் அது ப்ரதிபாதி3க்கப்படுகிறது. "விக்3ரஹோ...*" என்றும், 63. "अरूपी हि जनार्दनः" (அரூபீ ஹி ஜநார்த்த3ந:) என்றும், 64. "न ते रूपं न चाकारः" (ந தே ரூபம் ந சாகார:) என்றும் இப்படி ஈஶ்வரனுக்கு விக்3ரஹமில்லையென்றுகொண்டு ப்ரமாணங்கள் உண்டாயிருக்க, தி3வ்யம் ஸ்வரூபம் என்றும், தி3வ்யமங்க3ளவிக்3ரஹமென்றும் எங்ஙனே? என்று இப்படிச்சொல்லுவார் வேதா3ந்தநிஷ்ட2ருடைய கோ3ஷ்டி2யில் ப3ஹிஷ்க்ருதரான பேரிறே. "ஆவதென்?

---

a திருவாய் 2-3-2. * இந்த ப்ரமாணம் தெளிவாக விளங்கவில்லை.

சோத்3யம் பண்ணினுல் பரிஹரிக்குமித்தனையொழியப் பரிவாதி3யாகின்றீர். இப்படி ப்ரமாணமுண்டோ?" என்ருல்,— உண்டு. அதெங்ஙனேயென்ருல் : 46. "य एषोऽन्तरादित्ये हिरण्मयः पुरुषो दृश्यते" (ய ஏஷோऽந்தராதி3த்யே ஹிரண்மய: புருஷோ த்3ருஶ்யதே) 41. "सर्वे निमेषा जज्ञिरे विद्युतः पुरुषादधि" (ஸர்வே நிமேஷா ஜஜ்ஞிரே வித்3யுத: புருஷாத3தி4) 65. "आदित्यवर्णं तमसः परस्तात्" (ஆதி3த்யவர்ணம் தமஸ: பரஸ்தாத்) 66. "ध्येयस्सदा सवितृमण्डलमध्यवर्ती नारायणस्सरसिजासनसन्निविष्टः। केयूरवान् मकरकुण्डलवान् किरीटी हारी हिरण्मयवपुर्धृतशङ्खचक्रः॥" (த்4யேயஸ்ஸதா3 ஸவித்ருமண்ட3லமத்4யவர்த்தீ நாராயணஸ் ஸரஸிஜாஸநஸந்நிவிஷ்ட:। கேயூரவாந் மகரகுண்ட3லவாந் கிரீடீ ஹாரீ ஹிரண்மய வபுர் த்4ருதஶங்க2 சக்ர: ॥), 67. "किरीटकौस्तुभधरं मित्राणामभयप्रदम्" (கிரீடகௌஸ்துப4த4ரம் மித்ராணமப4யப்ரத3ம்), a "நீண்டபொன்மேனியொடும் நிறைந்தென்னுள்ளே நின்ருழிந்தான்" என்றுகொண்டு இப்படி ப்ரமாணமுண்டாகையாலே உன்னுடைய அபி4மதம் ஸித்3தி4யாது.

(யாந்யந்யாநி யத2ாஸுக2ம் விஹரதோ ரூபாணி ஸர்வாணி) 68. "अजायमानो बहुधा विजायते" (அஜாயமானோ ப3ஹுதா4 விஜாயதே) என்றும், b "பிறப்பில் பல் பிறவிப் பெருமான்" என்றும் இப்படி ப்ரமாணமுண்டாகையாலே ஜநிஜராதி3 து3ரிததூ3ரனுயிருந்துள்ள ஸர்வேஶ்வரன் தன்னுடைய ஸௌலப்4யம் என்கிற கு3ணத்தை ஒப்பமிடுகைக்காக, 38. "बहु स्यां प्रजायेय" (ப3ஹு ஸ்யாம் ப்ரஜாயேய) என்றும் 69. "एष नारायणः श्रीमान् क्षीरार्णवनिकेतनः। नागपर्यङ्कमुत्सृज्य ह्यागतो मथुरां पुरीम्॥" (ஏஷ நாராயண: ஶ்ரீமாந் க்ஷீரார்ணவநிகேதந:। நாக3பர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாக3தோ மது4ராம் புரீம் ॥) என்றும், 70. "स हि देवैरुदीर्णस्य रावणस्य वधार्थिभिः। अर्थितो मानुषे लोके जज्ञे विष्णुस्सनातनः॥" (ஸ ஹி தே3வைருதீ3ர்ணஸ்ய ராவணஸ்ய வதா4ர்த்தி2பி4:। அர்த்தி2தோ

a திருவாய் 5-5-7. b திருவாய் 2-9-5.



மாநுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணுஸ் ஸநாதந: ॥) 71. "संभवामि युगे युगे" (ஸம்ப4வாமி யுகே3 யுகே3) என்றும், 25. "इच्छागृहीताभिमतोरुदेहः संसाधिताशेषजगद्धितोऽसौ" (இச்ச2ாக்3ருஹீதாऽபி4மதோருதே3ஹஸ் ஸம்ஸாதி4தாऽஶேஷ ஜக3த்3தி4தோऽஸௌ) என்றும், 72. "विष्णुत्वमुपजग्मिवान्" (விஷ்ணுத்வமுபஜக்3மிவாந்) என்றும் இப்படி ப்ரமாணமுண்டாகையாலே, அதி3திக்கு த்3வாத3ஶபுத்ரனுய்க் கொண்டு அவதரித்த அவதாரத்தோடும், a "தயரதன் பெற்ற மரதக மணித்தடம்" என்கிற ராமாவதாரத்தோடும், b "மண்ணின் பாரம் நீக்குதற்கே வடமதுரைப் பிறந்தான்" என்கிறபடியே தே3வகார்யார்த்த2மாக அவதரித்தருளின ராமக்ருஷ்ணாத்3யவதாரங்களோடும் வாசியற.

(தாந்யாஹு: ஸ்வைரநுரூபரூபவிப4வைர் கா3ட4ோபகூ3ட4ாநி தே) 73. "राघवत्वेऽभवत्सीता रुक्मिणी कृष्णजन्मनि। अन्येषु चावतारेषु विष्णोरेषाऽनपायिनी॥" (ராக4வத்வேऽப4வத் ஸீதா ருக்மிணீ க்ருஷ்ணஜந்மநி। அந்யேஷு சாऽவதாரேஷு விஷ்ணோரேஷாऽநபாயிநீ ॥) என்கிறபடியே அவ்வோ அவதாரவிக்3ரஹங்களுக்கு அநுரூபமான உன்னுடைய அவ்வோ அவதாரங்களிலுண்டான தி3வ்யமங்க3ளவிக்3ரஹத்தாலே, 74. "उपेतं सीतया भूयश्चित्रया शशिनं यथा" (உபேதம் ஸீதயா பூ4யஶ் சித்ரயா ஶஶிநம் யதா2) என்றும், 75. "भर्तारं परिषस्वजे" (ப4ர்த்தாரம் பரிஷஸ்வஜே) என்றும் இப்படி ப்ரமாணமுண்டாகையாலே கா3ட4மாக ஆலிங்க3நம் பண்ணும்படியிறே இருப்பது. ஆக, இந்நாலு ஶ்லோகத்தால் லக்ஷ்மீவிஶிஷ்டமான வஸ்துவே உபேயமாகக்கடவது என்றத்தை அருளிச்செய்கிருர் ஆளவந்தார்.

ஆளவந்தார் திருவடிகளே ஶரணம்.

பெரியவாச்சான் பிள்ளை திருவடிகளே ஶரணம்.

பரமகாருணிகரான பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்த சதுஶ்ஶ்லோகீ வ்யாக்2யாநம் முற்றிற்று.

a திருவாய் 10-1-8. b திருவாய் 9-1-10.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை
அருளிச்செய்த

# ஜிதந்தே ஸ்தோத்ர வ்யாக்யானம்

श्रीमत्कृष्णसमाह्वाय नमो यामुनसूनवे ।
यत्कटाक्षैकलक्ष्याणां सुलभः श्रीधरस्सदा ॥

ஸ்ரீமத்க்ருஷ்ணஸமாஹ்வாய நமோ யாமுநஸூநவே।
யத்கடாக்ஷைகலக்ஷ்யாணாம் ஸுலப4: ஸ்ரீத4ரஸ் ஸதா3॥

அவதாரிகை:— ‘ஜிதந்தே’யாவது ருக்3வேத3கி2லம்; தத்வப்ரதிபாத3நபரமான ஸ்ரீ புருஷஸூக்தம் ஸர்வஶ்ருதிகளிலும் ஓதிப்போருமாபோலே, இதுவும் ஸ்ரீ ஶாஸ்த்ரத்திலும், இதிஹாஸ புராணங்களிலேயும் மஹாமந்த்ரமென்று திருமந்த்ரத்தோபாதி பரமரஹஸ்யமாகச் சொல்லிப்போருமதொன்று. வேதா3க்ஷரராஶியைப் பௌருஷேயமான இதிஹாஸபுராணங்களிலே எழுதிப்படித்துப் போருவானென்னென்னில்: கி2லமாகிறது அப்ரஹதம் ஸ்தா2நம்; ஸூத்ரகாரர்கள் கி2லஸஹிதமாகத் தாங்கள் அத்4யயனம் பண்ணிப் போந்தவர்களாகையாலே ஸ்மார்த்தவித4ாநங்களிலே, மந்த்ரமாக விநியோகி3த்துப் போராநின்றார்களிறே. இப்படி இதிஹாஸபுராணங்களிலே, ஸ்ரீ ஶாஸ்த்ரத்திலே 1. “**जितन्त इति मन्त्रेण**” (ஜிதந்த இதி மந்த்ரேண) என்று மந்த்ரமாக விநியோகி3த்துப் போருமதொன்று.

ஶ்வேதத்3வீபவாஸிகள் க்ஷீராப்3தி4 நாத2னுடைய ஸௌந்த3ர்யாதி3களிலே தோற்று ஈடுபட்டுச் சொல்லும் ஸ்தோத்ரம்; இதுக்கு ஸ்தோத்ரத்வமும் ஸ்தவப்ரியனுக்கு ப்ரியதமத்வமாகை. ப்3ரஹ்மாதி3களுக்கு து3ஷ்ப்ராபமான ஸ்த2லத்திலே தோன்றின இது இதிஹாஸபுராணங்களிலே



எழுதிப்படிக்கும்படி ஸுலப4மானபடி என்னென்னில்: இம்மந்த்ரத்துக்கு ப்ரதிபாத்3யனான க்ஷீராப்3தி4நாத2னைத் திருவடித்தொழ ஆத3ரித்து ஸ்ரீநாரத3ப4க3வான் ஶ்வேதத்3வீபத்திலே சென்றவளவிலே, ஏகத த்3வித த்ரிதர்கள் தபஸ் பண்ணிக்கொண்டிருக்க, ‘இவர்களுக்கும் கிட்டவொண்ணாத விஷயத்தை நம்மால் காணமுடியாது’ என்று மீண்டு, அவர்களைக் குறித்து “எனக்குச் செய்ய அடுப்பதென்?” என்று கேட்க, “இத்திருமாளிகைக்குள்ளே ஶ்வேதத்3வீப வாஸிகள் க்ஷீராப்3தி4நாத2னைக்கண்டு பண்ணும் ஸ்தோத்ரம்,நெடுநாளே நாங்கள் தபஸ் பண்ணுகிறோமாகையால் ஜ்ஞாத(வ்ய)மாயிற்று; எங்கள்பக்கல் இத்தை லபி4த்து அனுஸந்தி4” என்ன, அவனும் அவர்கள் பக்கலிலே ஜிதந்தே ஸ்தோத்ரத்தை லபி4த்துப்போராநிற்க, ஜயந்தம் என்கிற பர்வதத்திலே ப4க3வது3பாஸனம் பண்ணுகிற ப்3ரஹ்மாவை வந்து அனுவர்த்தித்து, பிறந்த வ்ருத்தாந்தத்தை அவனுக்கு விஜ்ஞாபிக்க, “எனக்கு அந்த ஸ்தோத்ரத்தைச் சொல்” என்று ஸ்ரீநாரத3 ப4க3வான்பக்கலிலே க்3ரஹித்தான் குடும்பி3. அவன்பக்கலிலே புக்கதாகையாலே இதிஹாஸபுராணங்களிலே எழுதப்பட்டு ப4க3வத்பரராயிருப்பார் எல்லார்க்கும் லபி4க்கும்படி ஸுலப4மாயிற்று. இது ஜிதந்தேயினுடைய அவதாரம்.

இதுதன்னுடைய உள்வாயை அனுஸந்தி4த்தால் ப்ரபத்திக்கு வ்யாக்2யானமாயிருக்கிறது; ப்ராப்யப்ராபகங்கள் இரண்டையும் சொல்லுகிறது. “ப்ரபத்திக்கு அதி4காரிகள் அஜ்ஞரும், ஸர்வஜ்ஞரும் ப4க்திபரவஶரும் என்று த்ரிவித4ர்” என்று ப4ட்டர் அருளிச்செய்தாரிறே. 2. “**अविद्यातो देवे परिबृढतया वा विदितया, स्वभक्तेर्भूम्ना वा जगति गतिमन्यामविदुषाम् । गतिर्गम्यश्चासौ हरिरिति जितन्ताह्वयमनोः, रहस्यं व्याजह्रे स खलु भगवान् शौनकमुनिः ॥**” (அவித்3யாதோ தே3வே பரிப்3ருட4தயா வா விதி3தயா, ஸ்வப4க்தேர் பூ4ம்நா வா ஜக3தி க3திமந்யாமவிது3ஷாம்। க3திர் க3ம்யஶ்சாஸௌ ஹரிரிதி ஜிதந்தாஹ்வயமநோ:, ரஹஸ்யம் வ்யாஜஹ்ரே ஸ க2லு ப4க3வாந்

ஶௌநகமுநி:॥)—அஜ்ஞனகிறன்,— ப4க3வல்லாப4த்துக்குத் தன் பக்கலிலே ஜ்ஞானஶக்த்யாதி3கள் இல்லாதவன். ஸர்வஜ்ஞனகிறன்,— "தே3ஶகாலவஸ்துக்களாலே பரிச்சே2தி3க்கவொண்ணத வைப4வத்தையுடையவன் ஈஶ்வரன்" என்றிருக்கையாலே, அநந்யஸாத்4யனென்று இருக்குமவன். ப4க்திபரவஶனகிறன்,— ஜ்ஞாநஶக்த்யாதி3கள் உண்டாயிருக்கச்செய்தேயும் அடைவுபட அனுஷ்டி2க்க மாட்டாதவன். இவர்கள் மூவரும் ப4க3வத்3விஷயமொழிய வேறு உபாயம் உண்டென்று அறியாதவர்கள். " 'இவர்களுக்கு ப்ராபகனுமாய், ப்ராப்யனுமாய் இருக்கும் ஸர்வேஶ்வரன்' என்று, 'ஜிதந்தே' என்று பேரை உடைத்தான மந்த்ரரஹஸ்யத்தை ஸர்வஜ்ஞன ஶௌநகப4க3வான் வ்யாக்2யானம் பண்ணப் பெறுவதே!" என்கிறர். 3. **"स्वत्वमात्मनि सञ्जातं"** (ஸ்வத்வமாத்மநி ஸஞ்ஜாதம்) என்றும், 4. **"आत्मदास्यं हरेः स्वाम्यं स्वभावं च"** (ஆத்மதா3ஸ்யம் ஹரே: ஸ்வாம்யம் ஸ்வப4ாவஞ்ச) என்றும் சொல்லுகிறபடியே, த்3வயத்துக்கு அதி4காரியாவான், ஈஶ்வரனுக்கே அநந்யார்ஹஶேஷபூ4தனவானிறே. இப்படிப்பட்ட ஶேஷத்வத்தை உடைய இவ்வாத்மாக்கள், அநாதி3யான ப்ரக்ருதி ஸம்ப3ந்த4த்தாலே அறியாதே, ஈஶ்வரனுடைய ஸ்வாமித்வ ஸ்வாதந்த்ர்யங்களைத் தங்கள் தலையிலே ஏறிட்டுக்கொண்டு ஆத்மாபஹாரிகளாய் வர்த்திப்பார்கள். ஆத்மாபஹாரமாவது, — அஹங்காரமமகாரங்கள்; 5. **"द्व्यक्षरस्तु भवेन्मृत्युः"** (த்3வ்யக்ஷரஸ்து ப4வேந்ம்ருத்யு:) என்றும், 5. **"ममेति द्व्यक्षरो मृत्युः"** (மமேதி த்3வ்யக்ஷரோ ம்ருத்யு:) என்றும் சொல்லுகிறபடியே. a "யானே என்னை அறியகிலாதே யானே என்றனதே என்றிருந்தேன்" என்றிறே அபி4யுக்தர் வார்த்தையும். பாபங்களிலே தலையான பாபமும் இவ்வாத்மாபஹாரமே; 6. **"योऽन्यथा सन्तमात्मानं"** (யோऽந்யதா2ஸந்தமாத்மாநம்) இத்யாதி3களிலே ஸ்பு2டம். பாபத்துக்கு ப்ராயஶ்சித்தம் — இவ்வாத்மா ப4க3வச்சே2ஷமென்றல்

a திருவாய் 2-9-9.



விவாத3ம் பண்ணுதிருக்கை. 7. **"तेन चेदविवादस्ते"** (தேந சேத3விவாத3ஸ்தே) என்றும், a "உம்முயிர் வீடுடையானிடை வீடுசெய்ம்மினே" என்றும், 8. **"क्षेत्रज्ञस्येश्वर-ज्ञानाद्विशुद्धिः परमा मता"** (க்ஷேத்ரஜ்ஞஸ்யேஶ்வரஜ்ஞாநாத் விஶுத்3தி4: பரமா மதா) என்றும் சொல்லக்கடவதிறே. ஈஶ்வரன், இப்படி அஹங்காரமமகாரக்3ரஸ்தராய், ஶப்3த3ாதி3விஷயப்ரவணராய், அதிலே, 9. **"परमेश्वरसंज्ञोऽज्ञ! किमन्यो मय्यवस्थिते"** (பரமேஶ்வரஸம்ஜ்ஞோऽஜ்ஞ! கிமந்யோ மய்யவஸ்தி2தே) என்றும், 10. **"द्विधा भज्येयमप्येवं न नमेयं तु कस्यचित्"** (த்3விதா4 ப4ஜ்யேயமப்யேவம் ந நமேயம் து கஸ்யசித்) என்றுமிருக்கும் ஹிரண்யராவணதி3களைப் போலே தன்னோடே எதிரம்பு கோத்து நிற்கிற ஆத்மாக்களைப் பார்த்தருளி, "இவை ஶாஸ்த்ரமார்க்க3த்தாலே திருத்த ஒருப்பட்டதல்ல; இவர்களுடைய விஷயப்ராவண்யமே பற்றுசாக நம்முடைய அழகுகளையும், ஶீலாதி3 கு3ணங்களையும் காட்டித்திருத்துவோம்" என்று வழியிட்டு, ப்ரத2மத்திலே ருசிஜனகனய், ருசிபிறந்தார்க்கு உபாயமுமாய், அதிலே நிஷ்டா2ரானர்க்கு ப்ராப்யனுமாய் இருக்கும்படியைச் சொல்லுகிறது இப்ரப3ந்த4ம்.

"ப்ராப்யப்ராபகங்களை முதல் ஶ்லோகத்தாலே ஸங்க்3ரஹமாகச் சொல்லி, மேலில் ஶ்லோகங்களாலே விஸ்தரிக்கிறது" என்று ப4ட்டர் நிர்வாஹம். முதல் இரண்டு ஶ்லோகத்தாலே ப்ராப்யப்ராபகங்களைச் சொல்லி, மேலில் ஶ்லோகங்களாலே அதுக்கு அடியான ஶரண்யதையைச் சொல்லுகிறதாகவுமாம. ஶரண்யதையை முதலில் சொல்லி, உபாயோபேயங்களைச் சொல்ல ப்ராப்தமாயிருக்க, பின்னே ஶரண்யதையைச் சொல்லுவானென்? என்னில்: " b'முனியே நான்முக'னிலே திருவாணையிட்டுப் பின்பு அது பெருவாணையல்லாமை ஸாதி4த்தாப்போலே இது" என்று திருநறையூர் அரையர் நிர்வாஹம்.

**அவதாரிகை ஸம்பூர்ணம்.**

a திருவாய் 1-2-1. b திருவாய் 10-10.

## ஜிதந்தே ஸ்தோத்ரம்

जितन्ते पुण्डरीकाक्ष! नमस्ते विश्वभावन!।
नमस्तेऽस्तु हृषीकेश! महापुरुष! पूर्वज!॥ १॥

1. ஜிதந்தே புண்ட$_{3}$ரீகாக்ஷ! நமஸ்தே விஶ்வப$_{4}$ாவந!।
நமஸ்தேऽஸ்து ஹ்ருஷீகேஶ! மஹாபுருஷ! பூர்வஜ!॥

---

1. **பதவுரை:— புண்ட$_{3}$ரீகாக்ஷ**—செந்தாமரைக்கண்ணா! **ஜிதம் தே**—உன்னால் (இவ்வாத்மவஸ்து) ஜயிக்கப்பட்டது; **நம:**—(இது) என்னுடையதல்லவே; **தே**—உன்னுடையதாயிற்றே; **விஶ்வப$_{4}$ாவந**–உலகையெல்லாம் உண்டாக்கினவனே! **ஹ்ருஷீகேஶ** — இந்திரியங்களை நியமிப்பவனே! **மஹாபுருஷ**—கொடுப்பதில் சிறந்தவனே! **பூர்வஜ**—முற்பாடனாகப் பிறப்பவனே! **நம: தே அஸ்து** — (இவ்வாத்மவஸ்து) எனக்காகை தவிர்ந்து உனக்கே ஆகவேணும்.

**அவ:—** முதல் ஶ்லோகத்தாலே, ப்ராப்யநிஷ்கர்ஷபர்யந்தமாக இவன் ப்ரார்த்தி$_{2}$க்கும்படியாக ஈஶ்வரன் தன் அழகாலே தோற்பித்துக் கொண்டபடியைச் சொல்லுகிறது.

**வ்யா:— (ஜிதந்தே)** a "யாதானும் பற்றி நீங்கும் விரதம்" என்கிறபடியே, விஷயாந்தரங்களைப் பற்றி, 'எம்பெருமான் முகத்தில் விழியேன்' என்று இவன் வ்ரதம் கொண்டிருக்க, ஈஶ்வரன் b "தானொட்டி வந்து" என்கிறபடியே விஷயாந்தரங்களில் துவக்கை அறுத்து, ஸ்வரூபஜ்ஞானத்தை உண்டாக்கி, 'அவஶ்யம் உம்மைக் கொண்டல்லது விடேன்' என்று வ்ரதம் கொண்டு, யாத்$_{3}$ருச்சி$_{2}$கமாக இவன் விஷயாந்தரங்களிலே நெகிழ நின்றவளவிலே, c "இருந்தான் கண்டுகொண்டு" என்கிறபடியே தன் அழகைக் காட்டி ஜயித்து, இவன் தோற்றமை கண்டு ப்ரீதனாய், "தோற்றார்

---

a திருவிருத்தம்-95. b திருவாய் 1-7-7. c திருவாய் 8-7-2.



ஆர்?" என்று கேட்டருள, a "தோற்றோம் மடநெஞ்சம் எம்பெருமான் நாரணற்கு" என்கிறபடியே "ஜயஸ்தவ" என்கிறான். த்ருதீயார்த்தே$_{2}$ ஷஷ்டி$_{2}$யாய் உன்னாலே ஜயம் என்னுதல்; ப$_{4}$ாவே நிஷ்டை$_{2}$யாய் உன்னுடைய ஜயம் என்னுதல். ப$_{3}$ந்த$_{4}$மடியான ஸங்கல்பம் அவனது; அதின் ஸந்நிதி$_{4}$யிலே கர்மமடியாக வந்த இவன் ஸங்கல்பம் ஜீவிக்கவோ? ஸர்வஶக்தி ஸங்கல்பத்தை விஷயசபலனுடைய ஸங்கல்பம் அழிக்கவோ? 'நாம் என்கொண்டு உம்மை வெல்ல?' என்ன: **(புண்ட$_{3}$ரீகாக்ஷ)** அழகிய கண்களாகிற ப்$_{3}$ரஹ்மாஸ்த்ரத்தை உடைய உனக்கு வெல்லவொண்ணாதது உண்டோ? சேதனர் சேதனங்களை அகப்படுத்துவது கண்வழியாலேயாகையாலே, திருக்கண்களாலே ஜயித்தாய் என்கை. ஸ்வதந்த்ரனை முறையைக் காட்டி மீட்கலாம்; விஷயப்ரவணனை மீட்க அழகல்லது பரிகரமுண்டோ? **(நமஸ்தே)** 'ஆரதை ஆர் வென்றார்?' என்னில்: ஆராய்ந்தவாறே உன்னதை நான் அபஹரிக்க, என்னை ஜயித்து, நீயே உன்னதைக் கைக்கொண்டாயாயிருந்தது. **11. "अहमपि न मम। भगवत एवाहमस्मि।"** (அஹமபி ந மம। ப$_{4}$க$_{3}$வத ஏவாஹமஸ்மி।) என்னக்கடவதிறே. நமஶ்ஶப்$_{3}$த$_{3}$ம் ஶரணபர்யாயமாகையால் ப்ரபத$_{3}$னமென்னவுமாம். எங்ஙனேயென்னில்: கண்ணழகிலே ஈடுபட்டு மிடுக்கறுகையாலே அஶக்தாதி$_{4}$காரமான உபாயத்தைப் பற்றுகிறான். ப்ராப்யத்தில் ருசி பிறந்தால், அத்தை லபி$_{4}$க்கும் ஸாத$_{4}$னமிறே அனந்தரம் தேட்டம். அத்தைச் சொல்லுகிறது. 'விஷயாந்தரங்களில் துவக்கை அறுத்த உபகாரத்துக்கு ப்ரத்யுபகாரமாக என் ஆத்மாவைத் தந்தேன்' என்று ஆத்மஸமர்ப்பணத்தைச் சொல்லுகிறது என்றுமாம். b "எனதாவி தந்தொழிந்தேன்" என்னுமாபோலே. இது வகைப்பொருள். **(நமஸ்தேऽஸ்து)** அப்படி எனக்காகை தவிர்ந்து உனக்கேயாம்படி பண்ணியருளவேணும். c "மனக்காராமை மன்னி உண்டிட்டாய் இனி

---

a திருவாய் 2-1-7. b திருவாய் 2-3-4. c திருவாய் 10-10-6.

உண்டொழியாய்'' என்னுமாபோலே. 'ருசியைப் பிறப்பித்துத் தன் பேருக உபகரியாநிற்க, மேல் விழுந்து அர்த்தி2ப்பானென் ?' என்னில் : ருசியை விளைப்பித்து ஸ்வரூபஜ்ஞானத்தை உண்டாக்கினவாறே ஸ்வரூபானுகு3ணமான அடிமையை ப்ரார்த்தி2க்கிருன். கூனி கூன் நிமிர்ந்து யோக்3யதை பெற்றவாறே 12. **''वस्त्रे प्रगृह्य गोविन्द! मम गेहं व्रजेति वै''** (வஸ்த்ரே ப்ரக்3ருஹ்ய கோ3விந்த3! மம கே3ஹம் வ்ரஜேதி வை) என்று மடிபிடித்தாப்போலே இங்கும். ஆத்மாவினுடைய * கோணையாலே கண்ணழகாலே நிமிர்த்துக் கொண்டான் என்கை. அஹங்காரமமகாரமாகிற * கோண் போய், பாரதந்த்ர்யம் ப்ரகாஶித்தாலிறே கைங்கர்யரஸத்துக்கு யோக்3யமாவது. ஸ்ரீமாலாகாரரை அழகாலே ருசியைப் பிறப்பித்து, 13. **''पुनः पुनः प्रणम्याह मालाकारोऽतिविस्मितः''** (புந: புந: ப்ரணம்யாஹ மாலாகாரோऽதி விஸ்மித:) என்று திருவடிகளிலே விழும்படி பண்ணி அடிமை கொண்டானிறே. **(விஶ்வப4ாவந)**மேல் அபேக்ஷிதம் செய்கைக்கு ப்ராப்தி சொல்லுகிறது. விஶ்வம் ப4ாவயதீதி விஶ்வப4ாவந: ; உரு மாய்ந்து கிடந்த இந்த ஜக3த்தை உண்டாக்கினவனல்லையோ? இல்லாததை உண்டாக்கினவனுக்கு உள்ளதுக்கு ஒரு கு3ணம் விளைப்பிக்கைக்குப் பணியுண்டோ? முமுக்ஷுஸிஸ்ருக்ஷயாவன்றோ ப4க3வத்ஸ்ருஷ்டி. **(ஹ்ருஷீகேஶ)** 'ஸ்ருஷ்டிகாலத்தில் விலக்கும் பரிகரமில்லை; இப்போது உன் இந்த்3ரியங்களைத் திருத்தவொண்ணுமையாலே விலக்கும் பரிகரம் உண்டே' என்னில்: அவையும் நீ இட்டவழக்கன்றோ? 14.**''हृषीकाणीन्द्रियाण्याहुस्तेषामीशो यतो भवान्। हृषीकेश इति ख्यातः''** (ஹ்ருஷீகாணீந்த்3ரியாண்யாஹுஸ் தேஷாமீஶோ யதோ ப4வாந்। ஹ்ருஷீகேஶ இதி க்2யாத:) என்றும், a ''இருடீகேசன் எம்பிரான் இலங்கை அரக்கர் குலம் முருடு தீர்த்த பிரான்'' என்றும் சொல்லக்கடவதிறே. இந்த்3ரியங்களுக்கு என்னேடு உண்டான ஸம்

* கோண்—கூன்; வளைவு. a திருவாய் 2.7.10.



ப3ந்த4ம் கர்மோபாதி4கம்; 15. **''यश्चक्षुषि तिष्ठन् — वाचि तिष्ठन्''** (யஶ் சக்ஷுஷி திஷ்ட2ந் — வாசி திஷ்ட2ந்) என்கிறபடியே நிருபாதி4கஸம்ப3ந்த4ம் உன்பாடேயன்றோ? **(மஹாபுருஷ)** 'ஶக்தி உண்டானாலும் வல்லதெல்லாம் செய்வாருண்டோ?' என்னில் : **(புருஷ)** '' புரு-ப3ஹு, ஸநோதீதி புருஷ: '' என்னும்படியே மறித்து உன்பாடு வரவேண்டாதபடி அபேக்ஷிதங்களை மிகவும் கொடுக்கவல்ல பரமோதா3ரனல்லையோ? அன்றிக்கே, உன்னையும், உன் உடைமையையும் ''ப4க்தாநாம்'' (ஶ்லோ-5) என்கிறபடியே அர்த்தி2யாய்க்கொடுக்கை. 16. **''स सर्वानर्थिनो दृष्ट्वा समेत्य प्रतिनन्द्य च''** (ஸ ஸர்வாநர்த்தி2நோ த்3ருஷ்ட்வா ஸமேத்ய ப்ரதிநந்த்3ய ச) என்னக்கடவதிறே. **(பூர்வஜ)** கீழ்ச்சொன்ன ஔதா3ர்யந் தன்னை அனுஷ்ட2ானத்தாலே விவரிக்கிறது. ஸ்ருஷ்டியோடு அவதாரத்தோடு உபாயத்தோடு வாசியற இழவு பேறு தொடக்கமான எல்லாத்துக்கும் முற்பாடனல்லையோ? 17. **'' बहु स्यां ''** ( ப3ஹு ஸ்யாம் ) என்று ப்ரயோஜனமும் அபி4மானமும் தன்னதானவோபாதி 18. **''स एकाकी न रमेत''** ( ஸ ஏகாகீ ந ரமேத ) என்னும் இழவும் தன்னதாகச் சொல்லிற்றிறே. அவதாரத்திலும், 'ஸ்ருஷ்டமான ஜக3த்திலே நம்மை அபி4முகி2களாகக்கடவார்' என்னும் நோயாசையாலே, 19. **'' संभवाम्यात्ममायया ''** (ஸம்ப4வாம் யாத்மமாயயா) என்று ஸ்வேச்சை2யாலேயாயிருப்பது. 20. **'' स हि देवैरर्थितो जज्ञे ''** (ஸ ஹி தே3வைரர்த்தி2தோ ஜஜ்ஞே) என்று தே3வர்களுடைய அர்த்தி2த்வம் இல்லையோ? என்னில்: அது வ்யாஜம்; ஸாது4பரித்ராணமே ப்ரயோஜனம். 21. **'' परित्राणाय साधूनां ''** ( பரித்ராணய ஸாதூ4நாம்) என்று தொடங்கி 21. **''धर्मसंस्थापनार्थाय संभवामि युगे युगे''** (த4ர்மஸம்ஸ்த2ாபநார்த்த2ாய ஸம்ப4வாமி யுகே3 யுகே3) என்ருனிறே. அர்ஜுனனுடைய யுத்3த4ப்ரோத்ஸாஹநவ்யாஜமாக ஸ்வவிஷயப4க்தியோக3த்தை அவதரிப்பித்தாப்போலே. 22. **''उपायोपेयत्वे तदिह तव तत्त्वं''** (உபாயோபேயத்வே ததி3ஹ தவ தத்த்வம்) என்று உபேயப4ாவத்

देवानां दानवानां च सामान्यमधिदैवतम्।
सर्वदा चरणद्वन्द्वं व्रजामि शरणं तव॥२॥

2. தே3வாநாம் தா3நவாநாம் ச ஸாமாந்யமதி4தை3வதம் ।
ஸர்வதா3 சரணத்3வந்த்3வம் வ்ரஜாமி ஶரணம் தவ ॥

---

தோபாதி உபாயபா4வமும் நித்யமிறே. ஒருத்தன் ஸ்வீகரித்த போதாக உபாயமாகிறானன்றிறே. பே4ாக3வேளையிலும் பஞ்சலக்ஷம் குடியில் பெண்களிற்காட்டில் தன்னுடைய முற்பாடு தோற்றுகைக்காகவிறே திருக்குழலை வாய் வைத்தருளிற்று. இந்த பே4ாக3ந்தான் அவிச்சி2ந்நமாகவேணுமென்று அபி4நிவேஶம் பிறந்தவனுக்கு, அப்போது அவிச்சி2ந்நபே4ாக3ஸ்தா2நம் எங்கேயோ என்று தேடவேண்டாதபடி 23. "**श्रिया सार्धं जगत्पतिः — आस्ते**" (ஶ்ரியா ஸார்த்த4ம் ஜக3த்பதி: — ஆஸ்தே) என்கிறபடியே நித்யவிபூ4தியிலே இவனுடைய வரலாறு பார்த்திருக்கிறானிறே. 1.

2. **பதவுரை:**— **தே3வாநாம்**—விஷ்ணுப4க்தியுடையவர்களுக்கும், **தா3நவாநாம் ச**—ப4க3வத்3ப4க்தியற்றவர்களுக்கும், **ஸர்வதா3**—எப்போதும், **ஸாமாந்யம் அதி4தை3வதம்**—ஸமானமாகப் பற்றலாம்படியிருக்கும், **தவ**—உன்னுடைய, **சரணத்3வந்த்3வம்**—திருவடியிணையை, **ஶரணம்**—உபாயமாக, **வ்ரஜாமி**—நிச்சயிக்கிறேன்.

**அவ:**— (தே3வாநாம் இத்யாதி3) கீழ் ஶ்லோகத்திலே உபேயத்தை நிர்ணயித்து, தத்ஸித்3த்4யர்த்த2மாக உபாயத்தை அத்4யவஸிக்கிறான். உபேயத்திலும் தலையான உபேயத்தை லபி4த்தாப்போலே, உபாயத்திலும் தலையான உபாயத்தை லபி4க்கப்பெற்றபடி. புத்ரபஶ்வந்நாதி3களையே ப்ராப்யமென்று இருப்பாரும், தே3வர்களைப்பற்றி ஸ்வர்க்க3த்தை லபி4க்கையே புருஷார்த்த2ம் என்றிருப்பாரும், ஈஶ்வரனையே பற்றி வைத்து, இந்த்3ரபத3ம் முதலான பத3ங்களையே புருஷார்த்த2மென்று அவன் பக்கலிலே



லபி4க்கவிருப்பாருமாயிருக்கிற ஸம்ஸாரத்திலே, ஸர்வாதி4கனாய், ஸமஸ்தகல்யாணகு3ணாத்மகனாய், உப4யவிபூ4திநாயகனாயிருக்கிற ஸர்வேஶ்வரன் திருவடிகளிலே நித்யகைங்கர்யத்தையே புருஷார்த்த2மென்று இருக்கையாகிற இது, ஒருத்தருக்கும் கிட்டுவதொன்றன்றிறே. 24. "**मनुष्याणां सहस्रेषु**" (மநுஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு) என்றும், 25. "**स महात्मा सुदुर्लभः**" (ஸ மஹாத்மா ஸுது3ர்லப4:) என்றும் அவன்தனக்கும் து3ர்லப4மாயிறே இருப்பது. அதுபோலே, உபாயங்களிலும் வந்தால்—கர்மயோகா3த்3யுபாயங்களைப் பற்றுவாரும், 26. "**किं जपन् मुच्यते जन्तुर्जन्मसंसारबन्धनात्**" (கிம் ஜபந் முச்யதே ஜந்துர் ஜந்மஸம்ஸாரப3ந்த4நாத்) என்கிறபடியே திருநாமங்களைப் பற்றுவாரும், 27. "**देशोऽयं सर्वकामधुक्**" (தே3ஶோऽயம் ஸர்வகாமது4க்) என்கிறபடியே தே3ஶவிஶேஷங்களைப் பற்றுவாருமாக, இப்படிச் சேதநபே4த3த்தோபாதி உபாயபே4த3மும் அஸங்க்2யாதமாகச் செ(ா)ல்லுகிற ஸம்ஸாரத்திலே, ஸுஶகமாய், நிரபாயமாயிருக்கிற ஸித்3தே4ாபாயபரிக்3ரஹம் கிடைப்பதொன்றன்றிறே. அப்படிப்பட்ட உபாயபரிக்3ரஹத்தைச் சொல்லுகிறது. 'த்3வயத்துக்கு வ்யாக்2யானம் பண்ணுகிறதாகில், அதில் க்ரமமொழிய, முற்பட ப்ராப்யநிஷ்கர்ஷம் பண்ணுவானென்?' என்னில்: இப்ராப்யம்தான் இத்தலையில் ருசியால் வந்ததன்றிக்கே ருசியே தொடங்கி அத்தலையால் வந்ததாகையாலே, முற்பட நிஷ்கர்ஷித்து, அனந்தரம், உபாயஸ்வீகாரத்தைப் பணணுகிறான்.

**வ்யா:**— "தே3வாநாம் தா3நவாநாம் ச ஸாமாந்யமதி4தை3வதம்" என்று இவ்வுபாயஸ்வீகாரத்துக்கு அதி4காரிநியதியில்லை என்கிறது. தே3வர்களாகிறார்,— ஈஶ்வரனுக்கு அனுகூலகோடியிலுள்ளார். தா3நவராகிறார்,— ப்ராதிகூல்யத்திலே வ்யவஸிதராயிருக்குமவர்கள். 28. "**विष्णुभक्तिपरो देवो विपरीतस्तथाऽसुरः**" (விஷ்ணுப4க்திபரோ தே3வோ விபரீ-

தஸ்தத$_2$ாऽஸுர:) என்னக்கடவதிறே. 29. "द्वौ भूतसर्गौ लोकेऽस्मिन् दैव आसुर एव च" (த்$_3$வெள பூ$_4$தஸர்க்கௌ$_3$ லோகேऽஸ்மிந் தை$_3$வ ஆஸுர ஏவ ச) என்று இரண்டுக்குள்ளே அந்தர்ப்பூ$_4$தையிறே ஸ்ருஷ்டி. (ஸாமாந்யமதி$_4$ தை$_3$வதம் சரணத்$_3$வந்த்$_3$வம்) ஸர்வஸாத$_4$ாரணமான திருவடிகளை. இத்தால் ஸம்ப$_3$ந்த$_4$ஸாமாங்யத்தைச் சொல்லுகிறதன்று. ஆஶ்ரயணீயத்வே ஸமமாயிருக்கிறபடியைச் சொல்லுகிறது. இப்படி விஶேஷிக்கிறது எத்தாலே? என்னில்: விமுக$_2$ரான காலத்தில் ஆஶ்ரிதவிரோதி$_4$களை என்றிட்டு அழியச்செய்யுமவனுகையாலே. [a] "அவுணர்க்கென்றும் சலம் புரிந்தங்கருளில்லாத் தன்மையாளன்" என்னக்கடவதிறே. நிஹீன ஜன்ம கு$_3$ண வ்ருத்தரோடு இவற்றுல் உத்க்ருஷ்டரோடு வாசியற எல்லார்க்கும் ஆதி$_3$த்யோத$_3$யம்போலே எனக்கென்று பற்றலாம்படியான திருவடிகளென்கை. ராவணன் எச்சிலைத் தின்று வந்த ஸ்ரீவிபீ$_4$ஷணுழ்வான், 30. "सर्वलोकशरण्याय" (ஸர்வலோகஶரண்யாய) என்று வழக்குப்பேசிப் பற்றலாம்படியிறே இருப்பது. 31. "समोऽहं सर्वभूतेषु" (ஸமோऽஹம் ஸர்வபூ$_4$தேஷு) என்றிறே ஶரண்யன் வார்த்தை. 32. "व्यसनेषु मनुष्याणां भृशं भवति दुःखितः" (வ்யஸநேஷு மநுஷ்யாணும் ப்$_4$ருஶம் ப$_4$வதி து$_3$:க்கி$_2$த:) என்று ஆஶ்ரயணயோக்$_3$யமான மனுஷ்யஸாமாங்யத்திலே க்ருபை மிக்கிறே இருப்பது. பரது$_3$:க்க$_2$ாஸஹிஷ்ணுத்வமிறே க்ருபையாவது. ஆஶ்ரயணவேளையில் 33. "यदि वा रावणः स्वयं" (யதி$_3$ வா ராவணஸ்ஸ்வயம்) என்றுனிறே. [b] "எல்லா உலகும் தொழும் ஆதிமூர்த்தி" என்றும், [c] "பொது நின்ற பொன்னங்கழல்" என்றுமிறே அபி$_4$யுக்தர் வார்த்தை. (ஸர்வத$_3$ா) ப்ராதிகூல்யம் பண்ணுகிற வேளையேயானுலும் ரக்ஷகாபேக்ஷையே வேண்டுவதாக விஷயீகரிக்கும் திருவடிகள். 34. "पापानां वा ... कार्यं करुणमार्येण" (பாபாநாம் வா...கார்யம் கருணமார்

[a] திருநெடுந்தாண்டகம்.6. [b] திருவாய் 3-3-5. [c] மூன்ரும்-திரு 88.



யேண) என்னக்கடவதிறே. [a] "ஈடுமெடுப்புமிலீசன்" என்று ஆழ்வாரும் அருளிச்செய்ததுக்கும் அடி இதுவிறே. 35. "अनालोचितविशेषाऽशेषलोकशरण्य" (அநாலோசிதவிஶேஷாऽஶேஷலோகஶரண்ய) என்றதுக்கும் முதல் இதுவிறே. (சரணத்$_3$வந்த்$_3$வம்) அங்யோங்யம் சேர்த்தியழகைச் சொல்லுகிறது. உபாயமாக அனுஸந்தி$_4$க்குமளவிலே வேறொரு ப்ரயோஜனமும் வேண்டா. ப்ரயோஜனமும் இதுவே போருமென்றிருக்கை. (ஶரணம் வ்ரஜாமி) உபாயமாக அடைகின்றேன். கீழ்ச்சொன்ன ஸர்வாதி$_4$காரத்வம் ஸித்$_3$தே$_4$ாபாயத்தைக் குறித்து என்கை. ஸாத$_4$நாந்தரங்கள் அதி$_4$க்ருதாதி$_4$காரங்களாயிறே இருப்பது. "வ்ரஜ — க$_3$தௌ" என்கிற க$_3$த்யர்த்த$_2$ம் பு$_3$த்$_3$த்$_4$யர்த்த$_2$மாய் 'அத்$_4$யவஸிக்கிறேன்' என்றபடி. இத்தால் ஶரண்யன் ஸந்நிதி$_4$ வேண்டா; ப்ராப்தியே அமையுமென்கை. ஆசார்ய ருசிபரிக்$_3$ருஹீதமான வாக்யத்தில் க்ரியாபத$_3$த்தில் வர்த்தமான நிர்த்தே$_3$ஶத்துக்கும் அடி "வ்ரஜாமி" என்கிற வர்த்தமான நிர்த்தே$_3$ஶமே. அதை கௌ$_3$ணமாக உபதே$_3$ஶித்துப்போருகிறதும், அவனுடைய 36. "सकृदेव प्रपन्नाय" (ஸக்ருதே$_3$வ ப்ரபந்நாய) என்கிற வாக்யத்தைப் பற்ற. ஆக, ஸக்ருத்$_3$வித$_4$ாநம் ஈஶ்வரவிஷயீகாரத்தைப் பற்ற. ப்ராப்யருசியாலே ப்ராப்தியளவும் செல்ல அனுவர்த்திக்கக்கடவது ராக$_3$த்தாலே. (வ்ரஜாமி) வ்ரீஹிஸ்வீகாரம், தே$_3$வதாமுத்$_3$தி$_3$ஶ்ய த்$_3$ரவ்யத்யாக$_3$ரூபமான யாக$_3$முமன்றிக்கே, தத$_3$ங்க$_3$மான ப்ரயாஜாதி$_3$களுமன்றிக்கே இருக்கிறுப்போலே, உபாயஸ்வீகாரமும் உபாயமன்று; அதுக்கு அங்க$_3$முமன்றிக்கே அதி$_4$காரி விஶேஷணமாய்க் கிடக்கிறது. (தவ) 37. "अप्यहं जीवितं जह्यां" (அப்யஹம் ஜீவிதம் ஜஹ்யாம்) என்றும், 38. "कपोतो वानरश्रेष्ठ! किं पुनर्मद्विधो जनः" (கபோதோ வாநரஶ்ரேஷ்ட$_2$! கிம் புநர் மத்$_3$விதே$_4$ா ஜந:) என்றும் தன்னை அழியமாறி

[a] திருவாய் 1-6-3.

एकस्त्वमसि लोकस्य स्रष्टा संहारकस्तथा।
अध्यक्षश्चानुमन्ता च गुणमायासमावृतः ॥ ३ ॥

3. ஏகஸ்த்வமஸி லோகஸ்ய ஸ்ரஷ்டா ஸம்ஹாரகஸ் தத2ா।
அத்4யக்ஷஶ்சாநுமந்தா ச கு3ணமாயாஸமாவ்ருத: ॥

---

ஶரணாக3தபரித்ராணம் பண்ணின கபோதோபாக்2யானமும் அருளிச்செய்த தேவருடைய. "சரணத்3வந்த்3வம் வ்ரஜாமி" என்று அந்வயம்.

முதல் ஶ்லோகம் ப்ராப்யஸங்க்3ரஹமானபோது, இந்த ஶ்லோகம் "நமஸ்தே" என்கிற பத3த்துக்கு விவரணமாகிறது. விவரணாபேக்ஷை என்னென்னில்: 39. "**मद्याजी मां नमस्कुरु**' (மத்3யாஜீ மாம் நமஸ்குரு) என்று நமஶ்ஶப்3த3ம் ஸாத்4நாந்தரத்துக்கும் ஸாத4ாரணமாகையாலே, ஶரணஶப்3த3பர்யாயம் நமஶ்ஶப்3த3த்தினுடைய விவரணமாகிறது. 40. "**गच्छध्वमेनं शरणं शरण्यं पुरुषर्षभाः**" (க3ச்ச2த்4வமேநம் ஶரணம் ஶரண்யம் புருஷர்ஷப4ா:) என்று விதி4த்த ஶரணாக3தியினுடைய அனுஷ்ட2ானவேளையிலே 41. "**द्रौपद्या सहितास्सर्वे नमश्चक्रुर्जनार्दनम्**" (த்3ரௌபத்3யா ஸஹிதாஸ் ஸர்வே நமஶ்சக்ருர் ஜநார்த்த3நம்) என்று நமஸ்ஸைப் பண்ணினர்கள். ஆகையாலே ஸ்த2ாநப்ரமாணத்தாலே ஶரணஶப்3த3பர்யாயம் நமஶ்ஶப்3த3ம். 2.

3. **பதவுரை:— லோகஸ்ய**—எல்லா உலகங்களையும், **ஸ்ரஷ்டா**—ஸ்ருஷ்டித்தவன், **த்வம் ஏக: அஸி**—(ஸஹாயாந்தரத்தை எதிர்பாராத) நீ ஒருவனேயாகிறாய்; **தத2ா**—அப்படியே, **ஸம்ஹாரக:**—ஸம்ஹரிப்பவனும் (நீ ஒருவனே); **அத்4யக்ஷஶ்ச**—ரக்ஷிப்பதற்குக் காலத்தை எதிர்பார்த்திருப்பவனாகவும். **அநுமந்தா ச**—(ப3ந்த4த்தைத் தரும் கர்மங்களில் ஈடுபடுபவனைத் தடுக்காமல்) அனுமதிப்பவனாகவும். **கு3ணமாயாஸமாவ்ருத:**—ஸத்வரஜஸ்தமோ கு3ணங்களுடன் கூடிய ப்ரக்ருதியால் மறைக்கப்பட்டவனாகவும் இருக்கிறாய்.



**அவ:**—(ஏகஸ்த்வமஸீத்யாதி3) கீழ் இரண்டு ஶ்லோகத்தாலே ப்ராப்யப்ராபகங்களைச் சொல்லிற்றாய், அந்த உபாய ஸ்வீகாரத்துக்கு அடியான ஶரண்யதையைச் சொல்லுகிறது மேலில் ஶ்லோகங்கள். அதில் இந்த ஶ்லோகத்தில், அநந்தரம் ஶரண்யதைக்கு உறுப்பாக அவனுடைய ஜக3த்காரணத்வப்ரயுக்தமான ஸர்வஜ்ஞத்வாதி3 மஹாகு3ணங்களைச் சொல்லுகிறது. 42. "**कारणन्तु ध्येयः**" (காரணந்து த்4யேய:) என்கிறபடியே உபாஸ்யம் ஜக3த்காரணவஸ்துவானவோபாதி ஶரண்யமும் ஜக3த்காரணவஸ்துவேயிறே. எங்ஙனேயென்னில்: 43. "**यो ब्रह्माणं विदधाति पूर्वं यो वै वेदांश्च प्रहिणोति तस्मै**" (யோ ப்3ரஹ்மாணம் வித3த4ாதி பூர்வம் யோ வை வேத3ாம்ஶ்ச ப்ரஹிணோதி தஸ்மை) என்று ஜக3த்காரணவஸ்துவைச் சொல்லி, 43. "**मुमुक्षुर्वै शरणमहं प्रपद्ये**" (முமுக்ஷுர்வை ஶரணமஹம் ப்ரபத்3யே) என்று மோக்ஷஸித்3தி4க்காக அவன் திருவடிகளில் பண்ணும் ப்ரபத்தியை ஸோபாநமாக விதி4த்ததிறே.

**வ்யா:**—(**லோகஸ்ய ஸ்ரஷ்டா த்வம் ஏக: அஸி**) "லோக ஶப்3த3த்தாலே, "லோக்யத இதி லோக:" என்கிற வ்யுத்பத்தியால் ப்ரத்யக்ஷஸித்3த4மாயும், ஶ்ருதிஸித்3த4முமாயுள்ள ஸகலபத3ார்த்த2ங்களுக்கும் ஸ்ரஷ்டாவென்கை. "த்வம்" என்கிற ஏகவசனத்தாலே ஸ்ரஷ்ட்ரந்தரவ்யாவ்ருத்தியைச் சொல்லுகிறது. 44. "**आकाशाद्वायुः। वायोरग्निः। अग्नेरापः। अद्भ्यः पृथिवी।**" (ஆகாஶாத்3வாயு:। வாயோரக்3நி:। அக்3நேராப:। அத்3ப்4ய: ப்ருதி2வீ।) என்று அசேதனங்களுக்கும், 45. "**ब्रह्माऽसृजत्**" (ப்3ரஹ்மாऽஸ்ருஜத்) இத்யாதி3களிலே சேதனர்க்கும் ஶ்ருதிஸ்ம்ருதிகளிலே கர்த்ருத்வம் சொல்லாநிற்க, ஈஶ்வரனே ஸர்வஸ்ரஷ்டா என்றபடியென்? என்னில்: சேதநாசேதநஶரீரியானவன் ஸர்வஸ்ரஷ்டாவாகையால் ஸர்வஸ்ரஷ்டா ஈஶ்வரனே. 46. "**स्वात् शरीरात् सिसृक्षुर्विविधाः प्रजाः**" (ஸ்வாத் ஶரீராத் ஸிஸ்ருக்ஷுர் விவித4ா: ப்ரஜா:) என்று மனு. 47. "**स एव सृज्यस्स च**

**सर्गकर्ता, स एव पात्यत्ति च पाल्यते च। ब्रह्माद्यवस्थाभिरशेषमूर्तिर्विष्णुर्वरिष्ठो वरदो वरेण्यः॥**" (ஸ ஏவ ஸ்ருஜ்யஸ்ஸ ச ஸர்க்க3கர்த்தா ஸ ஏவ பாத்யத்தி ச பால்யதே ச। ப்3ரஹ்மாத்3யவஸ்த2ாபி4ர ஶேஷமூர்த்திர் விஷ்ணுர் வரிஷ்டே2ா வரதே3ா வரேண்ய:||) இதி பராஶர:. 48. "**तदभिध्यानादेव तु तल्लिङ्गात् सः**" (தத3பி4த்4யாநாதே3வ து தல்லிங்க3ாத் ஸ:) இதி ஸூத்ரம். 'ஏக' பத3த்தாலே ஸஹாயாந்தரநிரபேக்ஷதையைச் சொல்லுகிறது. 18. "**एकाकी न रमेत**" (ஏகாகீ ந ரமேத) என்று இழவு தன்னதானபடி சொல்லுகிறது. 17. "**बहु स्यां प्रजायेय**" (ப3ஹு ஸ்யாம் ப்ரஜாயேய) என்று இவனுடைய ப்ரயோஜனமும் அபி4மானமும் தன்னதென்கிறது. 49. "**एकमेवाद्वितीयं**" (ஏகமேவாத்3விதீயம்) என்று ஸஹகாரிநைரபேக்ஷ்யம் சொல்லுகிறது. இந்த ஸஹாயாந்தரநைரபேக்ஷ்யந்தன்னை [a] "தனிமாப்புகழே எஞ்ஞான்றும்" என்கிற பாட்டிலே ஆழ்வார் அருளிச்செய்தாரிறே. இத்தால் அர்த்தி2த்வநிரபேக்ஷமாக இவற்றை உண்டாக்கினவன், அர்த்தி2த்வமும் உண்டானால் ரக்ஷிக்கச் சொல்லவேண்டாவிறே என்கை. சரமஶ்லோகத்தில் ஏகபத3ம் உபாயநைரபேக்ஷ்யத்தைச் சொல்லுகிறது. இந்த ஏகபத3ம் உத்பாத3கத்வத்தில் நைரபேக்ஷ்யத்தைச் சொல்லுகிறது. (**தத2ா ஸம்ஹாரக:**) ஸ்ருஷ்டியோபாதியும் ஹிதகாமனாய் ஸம்ஹரிக்கிறாய் நீ ஒருவனுமேயன்றோ. புருஷார்த்தே2ாபயோகி3யாக ஶரீரத்தைக் கொடுக்க, இத்தைக்கொண்டு பரஹிம்ஸாதி3களிலே இழிந்து அதிப்ரவ்ருத்தனாய்த் தன்னை நஶிப்பித்துக்கொள்ளுமளவிலே, அந்த ஶரீரத்தையும் அழியச்செய்கை ஹிதமேயிறே. இத்தாலும் ஶரண்யதையைச் சொல்லுகிறது. இவன் தன்னை இவன் கையில் காட்டிக்கொடாமையால். (**அத்4யக்ஷஶ்ச**) "ஸ்ருஷ்டிப்ரயோஜனமான மோக்ஷருசி இவர்களுக்கு உண்டாகவற்றேறே?" என்று அவஸரப்ரதீக்ஷனாயிருக்கிறபடியைச் சொல்லுகிறது. [b] "ஆள் பார்த்து உழிதருவாய் கண்டுகொள்" என்னக்கடவதிறே. "புருஷார்த்த2ஸாத4னமான ஸ்வஶரீரங்கொண்டு புருஷார்த்த2த்தில் இழிகையன்றிக்கே, ஸ்ருஷ்டிஸம்ஹாரத்துக்கே விஷயமாவதே இவை" என்று இவற்றினுடைய அனர்த்த2த்தை அனுஸந்தி4த்திருக்கிறபடியைச் சொல்லுகிறதென்றுமாம். 32. "**व्यसनेषु मनुष्याणां भृशं भवति दुःखितः**" (வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்4ருஶம் ப4வதி து3:க்கி2த:) என்னக்கடவதிறே. இப்படியிருக்கிறவன் புருஷார்த்த2த்தை அபேக்ஷித்தால் ரக்ஷிக்கச் சொல்ல வேண்டாவிறே. (**அநுமந்தா ச**) விஷயாந்தரங்களில் ப்ராவண்யத்தால் தத்ஸாத4னமான ப3ந்த4ககர்மங்களிலே ப்ரவர்த்தியாநின்றாலும் அங்கண்ணனாய்க்கொண்டு நிஷேதி4க்கமாட்டாதே நிற்கும். எத்தாலே யென்னில்: "க்ஷுத்3ரப்ரயோஜனத்துக்காகவாகிலும் நம் பக்கலிலே வரப்பெற்றோம்; ஸர்வஶக்தியான நாம் உளோமிறே; இடம் வந்தவிடத்திலே ரக்ஷிக்கிறோம்" என்னும் நினைவாலே. 'இப்படி வத்ஸலனானவன் இத்தலை இசைந்தால் ஹிதகாமனென்னுமிடம் சொல்லவேணுமோ?' என்று கருத்து. (**கு3ணமாயாஸமாவ்ருத:**) 'இப்படி இவர்கள் ப3ஹிர்முக2ராகைக்கு அடியென்?' என்னில்: கு3ணமயியான மாயையால் மறைக்கப்படுகையாலே. 50. "**भगवत्स्वरूपतिरोधानकरीं**" (ப4க3வத்ஸ்வரூபதிரோதா4நகரீம்) என்கிறபடியே இச்சேதனனை மாயை மறைக்கையால் அவனையும் மறைத்ததாமிறே. தன் உடைமையான இவன் கு3ணவஶ்யனாய், [a] 'பொய்ந்நின்ற ஞான'த்திலே கலங்கினால், இக்கு3ணஸம்ப3ந்த4மின்றிக்கே ஸர்வஜ்ஞனானவனே ஶரண்யனாகவேணும் என்று கருத்து. 51. "**सत्त्वादयो न सन्तीशे यत्र च प्राकृता गुणाः**" (ஸத்த்வாத3யோ ந ஸந்தீஶே யத்ர ச ப்ராக்ருதா கு3ணா:) என்னக்கடவதிறே.

[a] திருவாய் 8-10-7. [b] நான்-திருவ-60.



[a] திருவிருத்தம்-1.

संसारसागरं घोरमनन्तक्लेशभाजनम् ।
त्वामेव शरणं प्राप्य निस्तरन्ति मनीषिणः ॥ ४ ॥

4. ஸம்ஸாரஸாக3ரம் கே4ாரமநந்தக்லேஶப4ாஜநம் ।
த்வாமேவ ஶரணம் ப்ராப்ய நிஸ்தரந்தி மநீஷிண: ॥

---

முதல் ஶ்லோகம் ஸர்வஸங்க்3ரஹமானபோது, இஶ்லோகம் "விஶ்வப4ாவந" என்கிற பத3த்தினுடைய விவரணமாகிறது. ஜநிஸ்தி2திலயங்களுக்கு ஆஶ்ரயமாகையும் ஸஹகாரிநைரபேக்ஷ்யமுமிறே ப4க3வல்லக்ஷணம்; அது இஶ்லோகத்தில் சொல்லுகிறது. 3.

4. பதவுரை:— மநீஷிண:—மனஸ்ஸை ஜயித்திருப்பவர்கள், த்வாமேவ—உன்னையே, ஶரணம்—உபாயமாக, ப்ராப்ய — அடைந்து, அநந்தக்லேஶப4ாஜநம்—கணக்கற்ற து3:க்க2ங்களுக்குப் பிறப்பிடமாய், கே4ாரம்—மிகக்கொடிதாயிருக்கும், ஸம்ஸாரஸாக3ரம்—ஸம்ஸாரமாகிய ஸமுத்3ரத்தை, நிஸ்தரந்தி—தாண்டுகிறார்கள்.

அவ:—(ஸம்ஸாரஸாக3ரமித்யாதி3) கீழ்ச்சொன்ன ப4க3வத்காரணத்வம், 42. "कारणन्तु ध्येयः" (காரணந்து த்4யேய:) என்றும், 43. "यो ब्रह्माणं विदधाति पूर्वं" (யோ ப்3ரஹ்மாணம் வித3த4ாதி பூர்வம்) என்றும், 43. "मुमुक्षुर्वै शरणमहं प्रपद्ये" (முமுக்ஷுர்வை ஶரணமஹம் ப்ரபத்3யே) என்றும் உபாஸனத்துக்கும் ஸாத4ாரணமாகையாலும், ப்ரபத்தி உபாஸனத்துக்கு அங்க3மாவதொழிய ஸ்வதந்த்ரோபாயமென்கைக்கு அனுஷ்டா2னமுண்டோ? என்ன: "ஸ்ருஷ்டியில் கர்மீப4வித்தவர்களிலே தந்தாமுடைய மனஸ்ஸுக்கு நிர்வாஹகராயிருப்பார் சிலர் உன்னையே உபாயமாகப்பற்றி ஸம்ஸாரத்தைக் கடவாநிற்பார்கள்" என்கிறது. இத்தால் 'ப்ரபத்திக்கு ப்ரமாணப்ரஸித்3தி4யேயன்று உள்ளது; ஶிஷ்டாசாரமும் உண்டு' என்கிறது.



வ்யா:—ஸம்ஸாரமாகிறது:— அவித்3யா கர்ம வாஸநா ருசி ப்ரக்ருதிஸம்ப3ந்த4ங்களும், ஷட்3ப4ாவவிகாரங்களும். புத்ர மித்ர களத்ராதி3களும் தத்கார்யமாகையாலே ஸம்ஸாரஶப்3த3வாச்யங்களாகிற இத்தனை. 26. "जन्मसंसारबन्धनात्—मुच्यते" (ஜந்மஸம்ஸாரப3ந்த4நாத்—முச்யதே) என்று ஜன்மாதி3களைக் கார்யவர்க்க3ங்களாகவும், அவித்3யாதி3களைக் காரணவர்க்க3மாகவும் சொல்லிற்றிறே. பரிச்சே2தி3க்கவொண்ணாமையாலும், தன்பக்கல் இழிந்தாரைக் கொண்டு இழியுமதாகையாலும், புகலாமித்தனைபோக்கி, புக்கால் தந்தாமால் கரையேறவொண்ணாமையாலும், இத்தை ஸாக3ரமாக நிரூபிக்கிறது. (கே4ாரம்) கொடிதாயிருக்கை. அதாகிறது:—ஸர்வர்க்கும் து3:க்க2மென்று மீளலாம் நரகாதி3களைப்போலன்றிக்கே, ஆத்மாவுக்கு விநாஶஹேதுவாய் இருக்கச்செய்தேயும் a "இன்னமுதெனத் தோன்றி" என்று முகப்பிலே ஆகர்ஷகமாயிருக்கும் தன்மையை உடைத்தாயிருக்கை. அஹங்காரஸித்3தி4க்கும் விஷயாந்தர பே4ாக3த்திற்கும் ஸம்ஸாரிகள் உபாயானுஷ்டா2னம் பண்ணுகிறார்களிறே. (அநந்தக்லேஶப4ாஜநம்) தாபத்ரயது3:க்க2த்தாலே தொகையற்ற க்லேஶத்துக்கெல்லாம் உத்பத்திஸ்தா2னமாயிருக்கை. b "நலமந்தமில்லதோர் நாடு" என்று ஒரு தே3ஶவிஶேஷத்தில் ஸுக2த்திற்கு முடிவில்லாதாப்போலே, இதில் து3:க்க2த்துக்கு முடிவில்லை என்கை. (த்வாமேவ ஶரணம் ப்ராப்ய) தாரதம்யத்தை உடைத்தான ஸம்ஸாரத்தினுடைய கொடுமை சொல்லிற்று கீழ்; இத்தைக் கடப்பிக்கும் உபாயத்தினுடைய ஸௌலப்4யததைச் சொல்லுகிறது. (த்வாம்) "ஏகஸ்த்வமஸி" என்கிற ஶ்லோகத்தில் ஜக3த்காரணத்வப்ரயுக்தமான மஹாகு3ணங்களை உடைய உன்னை. அவத4ாரணத்தாலே—ஜக3த்ஸ்ருஷ்டியில் ஸஹாயாந்தரநைரபேக்ஷ்யம்போல, உபாயப4ாவத்திலும் ஸஹகாரிஸாபேக்ஷனல்லனென்கிறது.

---

a திருவாய் 7-1-8. b திருவாய் 2-8-4.

न ते रूपं न चाकारो नायुधानि न चास्पदम्।
तथाऽपि पुरुषाकारो भक्तानां त्वं प्रकाशसे॥ ५॥

5. ந தே ரூபம் ந சாகாரோ நாயுத4ாநி ந சாஸ்பத3ம் ।
தத2ாऽபி புருஷாகாரோ ப4க்தாநாம் த்வம் ப்ரகாஶஸே ॥

---

52. **"त्वमेवोपायभूतो मे भव"** (த்வமேவோபாயபூ4தோ மே ப4வ) என்கிற இதினுடைய உபப்3ரும்ஹணமான ஶாஸ்த்ரத்திலும் இந்த நைரபேக்ஷ்யம் உக்தமிறே. 53. **"मामेव ये प्रपद्यन्ते"** (மாமேவ யே ப்ரபத்3யந்தே) என்றிறே ஶரண்யன் வார்த்தையும். ஆசார்யஸேவையும் இவ்வவத4ாரணத்துக்குத் தாத்பர்யமறிகை. "ஶரணம்" என்று உபாஸனத்தை வ்யாவர்த்திக்கிறது. "வ்ரஜாமி ஶரணம் தவ" என்கிறவிடத்திலே 'வ்ரஜாமி'யினுடைய ஸ்த2ானத்திலே "ப்ராப்ய" என்கிறது,—ப4க3வல்லாப4த்தோபாதி உபாயப4ாவமும் ஸுலப4மென்று தோற்றுகைக்காக. [a]"ஆறெனக்கு நின் பாதமே சரணுகத் தந்தொழிந்தாய்" என்று இவ்வுபாயப்ரஸித்3தி4யை ப4க3வத்ப்ரஸாத3 கார்யமாக ஆழ்வார் அருளிச்செய்தாரிறே. (நிஸ்தரந்தி) உன்னலே இத்தைக் கடப்பார்கள். (மநீஷிண:) "மநோஜேதார:—மநீஷிண:"; விஷயாந்தரப்ரவணமான மனஸ்ஸையும், ஸாத4நாந்தரப்ரவணமான மனஸ்ஸையும் ஜயித்திருக்குமவர்கள். 54. **"संसारार्णवमग्नानां"** (ஸம்ஸாரார்ணவமக்3நாநாம்) என்று ஶாஸ்த்ராந்தரத்திலே இத்தை உபப்3ரும்ஹித்ததிறே.

முதல் ஶ்லோகம் ஸங்க்3ரஹமான பக்ஷத்தில், "நமஸ்தே" என்கிற பத3த்தைப்பற்றி உதி3க்கிறது இஶ்லோகம். இரண்டாம் ஶ்லோகமும், அதனுடைய அனுஷ்ட2ான ப்ரகாரம் சொல்லுகிறது. அதனுடைய ப்ராவண்யத்துக்காகப் ப2லபர்யந்தமான ஶிஷ்டாசாரம் சொல்லுகிறது இஶ்லோகம்.



---

[a] திருவாய் 5-7-10.



5. **பதவுரை:**—ரூபம்—(உன்னுடைய) தி3வ்யாத்மஸ்வரூபமானது, தே—உனக்காக, ந—இராது; (ஸ்வதந்த்ரமான அது ஆஶ்ரிதர்களுக்காகப் பரதந்த்ரமாகவும் ஆகும் என்று தாத்பர்யம்) **ஆகார:** ச—தி3வ்யமங்க3ளவிக்3ரஹமும், தே ந—உனக்காயிராது; **ஆயுத4ாநி**—தி3வ்யாயுத4ங்களும், தே ந—உனக்காயிருக்கவில்லை; **ஆஸ்பத3ம் ச**—இருப்பிடமான வைகுண்ட2ம் முதலியவைகளும், தே ந—உனக்காயிருக்கவில்லை; (இவையெல்லாம் உன் அடியார்களுக்காயிருக்கும் என்று பொருள்) **ப4க்தாநாம் த்வம்** — ப4க்தர்களுடைய உடைமையான நீ, **தத2ாபி** — இப்படி ஆஶ்ரிதபரதந்த்ரமான ஸ்வரூப ரூப கு3ண விபூ4திகளை உடையனுயிருந்தபோதிலும், **புருஷாகார:** — புருஷஸூக்தத்தில் சொல்லப்பட்ட ஸர்வாதி4கனுயிருக்கும் தன்மையுடன், **ப்ரகாஶஸே**—விளங்குகிறுய்.

**அவ:**— (ந தே ரூபம் இத்யாதி3) "த்வாமேவ ஶரணம் ப்ராப்ய நிஸ்தரந்தி" என்று உன்னையே உபாயமாகப்பற்றி ஸம்ஸாரத்தைக் கடக்குமவர்களுக்கு உன்னையும், உன் உடைமையையும் அனுகூலமாக்கிவைப்புதி — என்கிறது இத்தால். ஆஶ்ரிதர் தங்களையும், தங்கள் உடைமையையும் ஈஶ்வரனுக்கு ஆக்கிவைக்கிறது ஸ்வரூபத்தாலே; அவன் தன்னையும் தன் உடைமையையும் அவர்களுக்கு ஆக்கிவைக்கிறது — வாத்ஸல்யஸௌஶீல்யாதி3களாலே. ஆகையாலே, இத்தால் வாத்ஸல்யஸௌஶீல்யாதி3களைச் சொல்லுகிறது. இத்தாலும் ஶரண்யதையைச் சொல்லுகிறது; கீழ் "ஏகஸ்த்வமஸி" என்கிற ஶ்லோகத்திற் சொன்ன ஸ்வாமித்வஸௌலப்4யங்களோபாதி வாத்ஸல்யஸௌஶீல்யங்களும் ஶரண்யலக்ஷணமாகையாலே.

**வ்யா:**— (ந தே ரூபம்) "ரூபம்" என்பது தி3வ்யாத்மஸ்வரூபத்தைச் சொல்லுகிறது; "**ஆகார:**" என்று தி3வ்யவிக்3ரஹத்தை மேலே சொல்லுகையாலே. 'இஶ்லோகத்தால் ஸ்வரூபாதி3கள் இவனுக்கு இல்லையென்கிறது எங்

ஙனே?' என்னில்: 'தே' என்று நிர்த்தே3ஶித்துவைத்து ஸ்வரூபாதி3களை நிஷேதி4க்கையாலே, நிஷேதி4க்கிறது எவ்வாகாரத்தாலேயென்னில், ஸ்வரூபாதி3களாலே தேவர் கொள்ளுவதொரு கார்யமில்லையென்று ஸ்வார்த்த2த்தை நிஷேதி4க்கிறது. (தே ரூபம் ந தே) உன்னுடைய தி3வ்யாத்மஸ்வரூபமும் உனக்காயிராது. ஆஶ்ரிதரக்ஷணத்துக்கு அனுகூலமாயிருக்கில், ஸ்வதந்த்ரமாயிருக்கிற அது பரதந்த்ரமாயிருக்கிலும் இருக்கும். 55. "**मयि भृत्ये स्थिते देवानाज्ञापयत किं नृपैः**" (மயி ப்4ருத்யே ஸ்தி2தே தே3வாநாஜ்ஞாபயத கிம் ந்ருபை:), 56. "**किङ्करौ समुपस्थितौ**" (கிங்கரௌ ஸமுபஸ்தி2தௌ) என்று சொல்லக்கடவதிறே. ஸர்வநியந்தாவானவன் ஒரு ஸம்ஸாரிக்குப் புத்ரனுனிறே. இதிறே ஆஶ்ரிதார்த்த2மான ஸ்வரூபாந்யதா2பா4வம். இந்த ஸ்வரூபஶப்3த3த்தாலே ஸ்வரூபாஶ்ரயமான ஜ்ஞானஶக்த்யாதி3களையும் உபலக்ஷிக்கிறது. எத்தாலேயென்னில்; இஶ்லோகத்தை விவரிக்கிற கூரத்தாழ்வான் 57. "**प्रवरगुणगणाश्च ज्ञानशक्त्यादयस्ते**" (ப்ரவரகு3ணக3ணாஶ்ச ஜ்ஞாநஶக்த்யாத3யஸ்தே) என்ருனிறே. 58. "**यस्सर्वज्ञस्सर्ववित्**" (யஸ் ஸர்வஜ்ஞஸ் ஸர்வவித்) என்று ஶ்ருதிஸித்3த4மான ஸர்வஜ்ஞதையை உடையவன், ஆஶ்ரிதார்த்த2மாக 59. "**अविज्ञाता**" (அவிஜ்ஞாதா) என்று அஜ்ஞனுமாய், ஆயுத4ம் எடேனென்று ஆயுத4மெடுத்து அஸத்யஸங்கல்பனுனிறே. 60. "**अनन्याधीनत्वं तव किल जगुर्वैदिकगिरः पराधीनं त्वां तु प्रणतपरतन्त्रं मनुमहे। उपालंभोऽयं भोः श्रयति बत सार्वज्ञ्यमपि ते यतो दोषं भक्तेष्विह वरद! नैवाकलयसि॥**" (அநந்யாதீ4நத்வம் தவ கில ஜகு3ர் வைதி3ககி3ர: பராதீ4நம் த்வாம் து ப்ரணதபரதந்த்ரம் மநுமஹே। உபாலம்பே4ாऽயம் போ4: ஶ்ரயதி ப3த ஸார்வஜ்ஞ்யமபி தே யதோ தே3ாஷம் ப4க்தேஷ்விஹ வரத3! நைவாகலயஸி॥) என்று ஆழ்வானும் ஆஶ்ரிதவிஷ்யத்தில் பாரதந்த்ர்யத்தையும், தத்3க3ததே3ாஷத்தில் அஜ்ஞதையையும் சொன்னுனிறே. * தி3வ்யவிக்3ரஹமும் ஆஶ்ரிதரக்ஷணத்துக்கு அனுகூலமான ப்ரகாரத்தை உடைத்தாயிருக்கும்; பரமபத3த்தில்

* (ந சாகார:) என்னும் ப்ரதீகம் விடப்பட்டுள்ளது.



ஸூரிகளுக்கு போ4க3யோக்3யமாயிருக்கும்; வ்யூஹங்களில் வந்தால் ஶ்வேதத்3வீபவாஸிகளுக்கு போ4க3யோக்3யமாயிருக்கும்; ப்3ரஹ்மாதி3களுக்கு ஆஶ்ரயணீயமாயிருக்கும்; விப4வங்களில் வந்தால் அதீந்த்3ரியமான விக்3ரஹத்தை ஸாது4பரித்ராணர்த்த2மாக இந்த்3ரியகோ3சரமாக்கி அனுப4விப்பிக்கப்பார்த்தால் அனுப4விக்கலாயிருக்கும்: இந்த 'ஆகார' ஶப்3த3த்தாலே ஆகாராஶ்ரயமான தி3வ்யாப4ரணங்களையும் உபலக்ஷிக்கிறது. 57. "**भूषणान्यायुधानि**" (பூ4ஷணாந்யாயுத4ாநி) என்ருனிறே ஆழ்வானும். 61. "**वस्त्राण्याभरणानि च। तं विना कैकयीपुत्रं भरतं धर्मचारिणम्॥**" (வஸ்த்ராண்யாப4ரணாநி ச। தம் விநா கைகயீபுத்ரம் ப4ரதம் த4ர்மசாரிணம்) என்றவையும் ஆஶ்ரிதார்த்த2மாயிறே இருப்பது. (நாயுத4ாநி) இவை ஆஶ்ரித விரோதி4நிரஸனத்துக்கு ஆயுத4மாயும், வினையற்று அனுப4விப்பார்க்கு ஆப4ரணமாயுமிருக்கும். a "எப்போதும் கைகழலா நேமியான் நம்மேல் வினை கடிவான்" என்றும், b "கூராராழி வெண் சங்கேந்திக் கொடியேன்பால் வாராய்" என்றும், c "சங்கென்னும் சக்கரமென்னும் துழாயென்னும்" என்றும் சொல்லக்கடவதிறே. 57. "**परिजनपरिबर्हा भूषणान्यायुधानि**" (பரிஜநபரிப3ர்ஹா பூ4ஷணாங்யாயுத4ாநி) என்கிறபடியே பரிஜந பரிச்ச2த3ங்களுக்கு உபலக்ஷணமாய், 62. "**यत्र पूर्वे साध्याः सन्ति देवाः**" (யத்ர பூர்வே ஸாத்4யாஸ் ஸந்தி தே3வா:) d "அடியார்கள் குழாங்களை—உடன்கூடுவது என்றுகொலோ?" என்று, ஆஶ்ரிதர்க்கு ப்ராப்யமாயிறே பரிஜனமிருப்பது. பரிச்ச2த2ங்களும் ஸூரிகோடியிலே அந்தர்ப்பூ4தமாயிருக்கச்செய்தேயும், நித்யஸூரிகளுக்குக் கைங்கர்யோபகரணமாயிறே இருப்பது. (ந சாஸ்பத3ம்) பரமபத3ம் முதலான போ4க3ஸ்த2ானங்களும் தனக்கு போ4க3ஸ்த2ானமன்றிக்கே ஆஶ்ரிதர்க்காக நின்ற நிலைகளிலே காட்டி அனுப4விக்கச் சமைந்தவையாயிருக்கும். (தத2ாபி புருஷா

a பெரிய திருவந்-87. b திருவாய் 6-9-1.
c திருவாய் 4-2-9. d திருவாய் 2-3-10.

காரः) இப்படியிருக்கச்செய்தேயும் புருஷப்ரகாரனையிருக்கிற இருப்பு எப்போதும் குலையாதேயிருக்கும். 63. "**पुरुष एवेदँ सर्वं**" (புருஷ ஏவேத3ம் ஸர்வம்), 64. "**सहस्रशीर्षा पुरुषः**" (ஸஹஸ்ரஶீர்ஷா புருஷ:) என்னும் வேதா3ந்தங்களிலே ஸர்வாதி4கனாக ஓதிப்போருகிறவன், இப்படி ஆஶ்ரிதாதீ4நன் ஆனான் என்கிற மஹாகு3ணம் தோற்றுகைக்காக, (**ப4க்தாநாம் த்வம்**) ப4க்தர்களுக்காயிருப்பது: அவர்கள் உனக்காயிருக்கும் இருப்பு ஸ்வரூபத்தாலே; நீ அவர்க்காயிருக்கும் இருப்பைக் குறித்து உன்னுடைய தாத3ர்த்2யம் ஆஶ்ரிதஸங்கல்பத்தாலேயாயிருக்கும். இத்தை 57. "**सकलमेतत्संश्रितार्थं चकर्थ**" (ஸகலமேதத் ஸம்ஶ்ரிதார்த்த2ம் சகர்த்த2) என்றானிறே ஆழ்வானும். 57. "**परिजनपरिबर्हाभूषणान्यायुधानि प्रवरगुणगणाश्च ज्ञानशक्त्यादयस्ते। परमपदमथाण्डान्यात्मदेहस्तथात्मा वरद! सकलमेतत् संश्रितार्थं चकर्थ॥**" (பரிஜந பரிப3ர்ஹா பூ4ஷணாந்யாயுதா4நி ப்ரவரகு3ணக3ணாஶ்ச ஜ்ஞாந ஶக்த்யாத3யஸ்தே। பரமபத3மதா2ண்டா3ந்யாத்மதே3ஹஸ் ததா2த்மா வரத3! ஸகலமேதத் ஸம்ஶ்ரிதார்த்த2ம் சகர்த்த2 ||). (ப்ரகாஶஸே) 'ஸ்வதந்த்ரனுக்குத் தத்3விருத்3த4மான பாரதந்த்ர்யம் அனுபபன்னமன்றோ?' என்னில்: இதிஹாஸ புராணங்களிலே 65. "**यद्विना भरतं त्वां च शत्रुघ्नं चापि मानद। भवेन्मम सुखं किञ्चित् भस्मसात्कुरुतां शिखी॥**" (யத்3விநா ப4ரதம் த்வாஞ்ச ஶத்ருக்4நஞ்சாபி மாநத3। ப4வேந்மம ஸுக2ம் கிஞ்சித் ப4ஸ்மஸாத் குருதாம் ஶிகீ2 ||) என்றும், 66. "**निसृष्टात्मा सुहृत्सु च**" (நிஸ்ருஷ்டாத்மா ஸுஹ்றுத்ஸு ச) என்றும் இத்யாதி3களிலே ஆஶ்ரிதபரதந்த்ரனாய் ப்ரகாஶியாநின்றாயென்னுதல்; ஆஶ்ரயிப்பாருக்கு எளியனாக உஜ்ஜ்வலியாநின்றாயென்னுதல்.

முதல் ஶ்லோகம் ஸங்க்3ரஹமான பக்ஷத்தில் "ஹ்ருஷீகேஶ" என்கிற பத3த்தின் விவரணமாயிருக்கிறது இஶ்லோகம்; அப்ராப்தமான விஷயாந்தரங்களில் நின்றும் மீட்டுத் தன்னையே விஷயமாக்குகையாலே; அப்ராப்தங்களில் நின்றும் மீட்டு ப்ராப்தங்களிலே அந்வயிப்பிக்கை நிர்வாஹகக்ருத்யமிறே. 5.



नैव किञ्चित्परोक्षन्ते प्रत्यक्षोऽसि स कस्यचित्।
नैव किञ्चिदसिद्धन्ते न च सिद्धोऽसि कस्यचित्॥६॥

6. நைவ கிஞ்சித் பரோக்ஷந்தே ப்ரத்யக்ஷோऽஸி ந கஸ்யசித்।
நைவ கிஞ்சித3ஸித்3த4ந்தே ந ச ஸித்3தோ4ऽஸி கஸ்யசித்||

---

6. பதவுரை:—தே—உனக்கு, பரோக்ஷம்—அப்ரத்யக்ஷமாயிருப்பது, ந கிஞ்சித்—ஒன்றுமில்லை; கஸ்யசித்—ஒருவர்க்கும், ப்ரத்யக்ஷ:—கண்ணால் காணக்கூடியவனாக, ந அஸி—(நீ) ஆகிறாயல்லை; தே—உனக்கு, அஸித்3த4ம்-செய்யமுடியாதது, ந கிஞ்சித்—சிறிதும் இல்லை; கஸ்யசித்—ஒருவருக்கும், ஸித்3த4:—(ஸ்வயத்னத்தாலே) அடையக்கூடியவனாக, ந அஸி—(நீ) ஆகிறாயல்லை.

அவ:—(நைவ கிஞ்சிதி3த்யாதி3) "ஏகஸ்த்வமஸி" என்கிற ஶ்லோகத்தில், ஜக3த்காரணத்வப்ரயுக்தமான ஸ்வாமித்வ ஸௌலப்4யங்கள் உண்டானாலும், கீழ் ஶ்லோகத்தில் தன்னையும் தன் உடைமையையும் ஆஶ்ரிதார்த்த2மாக்கின வாத்ஸல்யஸௌஶீல்யங்கள் உண்டானாலும், ஜ்ஞான ஶக்த்யாதி3கள் இல்லையாகில் ஶரண்யனாகக்கூடாது. அதுக்காக ஜ்ஞானஶக்த்யாதி3களைச் சொல்லுகிறது இஶ்லோகம். முன்பு உக்தமான கு3ணங்கள் ஆஶ்ரிதர்க்கு அவனை விஷயீகரிக்கைக்கு உறுப்பாமித்தனையொழிய அபி4மதஸித்3தி4க்கு ஜ்ஞானஶக்திகள் வேணுமிறே.

வ்யா:—(நைவ கிஞ்சித் பரோக்ஷம் தே) "தே பரோக்ஷம் ந கிஞ்சிதே3வ"; உனக்கு அப்ரத்யக்ஷமாயிருப்பது ஒன்றுமில்லை. 58. "**यस्सर्वज्ञस्सर्ववित्**" (யஸ்ஸர்வஜ்ஞஸ் ஸர்வவித்) என்கிறபடியே ஸர்வஜ்ஞனென்றும், 67. "**स्वाभाविकी ज्ञानबलक्रिया च**" (ஸ்வாபா4விகீ ஜ்ஞாநப3லக்ரியா ச) என்று

ஸ்வதஸ்ஸர்வஜ்ஞத்வம் ஸத்தாப்ரயுக்தமென்றும, 68. **"यो वेत्ति युगपत्सर्वं प्रत्यक्षेण सदा स्वतः"** (யோ வேத்தி யுகபத் ஸர்வம் ப்ரத்யக்ஷேண ஸதா ஸ்வத:) என்று யுகபத் ஸாக்ஷாத்காரமும் ப்ரமாணஸித்தமிறே. அப்படிப்பட்ட தேவர்க்கு என்னுடைய ஸ்வரூபயாதாத்ம்யத்தையும், ஸ்வரூபானுரூபமான ப்ராப்யஸ்வரூபத்தையும், தத்விரோதி ப்ரக்ருதிஸம்பந்தம் என்னுமிடத்தையும், 'ப்ரக்ருதிஸம்பந்தத்தாலே நான் புகாத நரகமில்லை; நான் நுழையாத கர்ப்பமில்லை' என்றும் வாயாலே விண்ணப்பம் செய்ய வேண்டுவதொன்று உண்டோ? இன்னமும் நான் அறிந்த வளவன்றோ விண்ணப்பம் செய்யலாவது. ப்ரவாஹ ரூபேண அநாதியாய்ப்போந்த என்னுடைய அக்ருத்ய கரணாதிபூர்வவ்ருத்தம் பழகிப்போந்த தேவரையொழிய மற்று அறிவாருண்டோ? அறிந்து விண்ணப்பம் செய்யலான விஜ்ஞாபனப்ரகாரம்தான் வேறு அறிவார் உண்டோ? இவற்றில் எனக்கு ஒரு ஜ்ஞானமில்லாதாப்போலே தேவர்க்கும் அஜ்ஞாதமாயிருப்பதொன்றுமில்லை. **(கஸ்யசித் ந ப்ரத்யக்ஷோऽஸி)** 69. **"न सन्दृशे तिष्ठति रूपमस्य न चक्षुषा पश्यति कश्चनैनं"** (ந ஸந்த்ருஶே திஷ்டதி ரூபமஸ்ய ந சக்ஷுஷா பஶ்யதி கஶ்சநைநம்) என்று ஒருவர்க்கும் சக்ஷுர்விஷயனல்லை; அந்வய வ்யதிரேகத்தாலே தேவருடைய அதீந்த்ரியத்வத்தை த்ருடீகரிக்கிறதிறே ஶ்ருதி தான்; இப்படிப்பட்ட தேவரை ப்ரத்யக்ஷிக்கும்போது ஆனைக்கு உதவினப்போலே ஆவிர்ப்பவித்துக் காட்டக் காணுதல், அவதரித்துக் காட்டக்காணுதலிறே. a மயர்வற மதிநலமருளப்பெற்ற ஆழ்வாரும் b "வாசத் தடம்போல் வருவானே ஒரு நாள் காண வாராயே" என்று காண ஆசைப்பட்டாரித்தனையிறே; தாம் காண யத்நம் பண்ணிற்றிலர். 70. **"कदा नु साक्षात्करवाणि चक्षुषा"** (கதா நு ஸாக்ஷாத் கரவாணி சக்ஷுஷா) என்றிறே ஆளவந்தார் வார்த்தையும்.

---

a திருவாய் 1-1-1. b திருவாய் 8-5-1.



(தே அஸித்தம் ந கிஞ்சிதேவ) 67. **"पराऽस्य शक्तिर्विविधैव श्रूयते"** (பராऽஸ்ய ஶக்திர் விவிதைவ ஶ்ரூயதே) என்கிற படியே ஸர்வஶக்தியான தேவர்க்கு ஆஶ்ரிதரக்ஷணத்தில் அகடிதமென்று கைவாங்கவேண்டுவதொன்று உண்டோ? ஸங்கல்பமடியாக ஸர்வமும் ஸித்தமன்றோ. 71. **"संजीवयन्नपि मृतं सुतमुत्तरायाः, सान्दीपिनेश्चिरमृतं सुतमानयंश्च। धाम्नो निजात् द्विजसुतान् पुनरानयन्वा स्वामेव तां तनुमहो कथमानयस्त्वम्॥"** (ஸஞ்ஜீவயந்நபி ம்ருதம் ஸுதமுத்தராயாஸ் ஸாந்தீபிநேஶ் சிரம்ருதம் ஸுதமாநயம்ஶ்ச। தாம்நோ நிஜாத் த்விஜ ஸுதாந் புநராநயந் வா ஸ்வாமேவ தாம் தநுமஹோ கதமா நயஸ்த்வம்॥) என்று இப்படி அகடிதங்களை கடிப்பிக்கும் தேவரே நித்யஸம்ஸாரியான என்னை நித்யஸூரிகள் பரி மாற்றத்திலே அந்வயிப்பிக்கத் தட்டில்லை என்று கருத்து. **(கஸ்யசித் ந ஸித்தோऽஸி)** ஒருவர்க்கும் ஸ்வஸாமர்த்யத் தாலே ப்ராபிக்க அரியையாகாநின்றாய். க்ருதக்ருத்யனுலும், ப்ராப்திக்கு 72. **"नयासि परमां गतिं"** (நயாமி பரமாம் கதிம்) என்கிறபடியே அவன் கை பார்த்திருக்கவேணு மென்கை. ஆக, பேற்றுக்கு 'உறுப்பான ஜ்ஞானஶக்த்யாதிகள் உள்ளது உனக்கே; உன்னையொழிந்தாரடங்கலும் அஜ்ஞரும் அஶக்தரும். கண்ணும் காலும் உடையாய் நீயே; உன்னையொழிந்தாரடங்கலும் குருடும், முடமும். சேதனனுடைய ஜ்ஞானஶக்திகளுக்கு விநியோகம், ப்ரதமத்தில் உபாயஸ்வீகாரத்திலே ஜ்ஞானமும், அத்யவஸாயத்திலே ஶக்தியுமாகக்கடவது. இந்த ஜ்ஞான ஶக்த்யாதிகள் இரண்டும் போகத்திலேயாகக்கடவது. இத்தால் சொல்லிற்றாய்த்து, — இத்தலை இசைவே அடியாகக்கொண்டு ஸ்வஸம்பந்தத்தாலே ரக்ஷியாவிடில் தேவர்க்குப் பழியென்றதாயிற்று. ரக்ஷணதர்மத்தில் ஈஶ்வரனுடைய ஜ்ஞானஶக்த்யாதிகளே தாரகம். "ஆத்மாவுக்கு ஈஶ்வரப்ராப்தியன்று; ஈஶ்வரனுக்கு ஆத்ம ப்ராப்திகாண் நினைவு" என்று ஜீயர் அருளிச்செய்வர்.

**कार्याणां कारणं पूर्वं वचसां वाच्यमुत्तमम्।**
**योगानां परमां सिद्धिं परमं ते पदं विदुः॥७॥**

7. **கார்யாணும் காரணம் பூர்வம் வசஸாம் வாச்யமுத்தமம்।**
**யோக3ாநாம் பரமாம் ஸித்3தி4ம் பரமம் தே பத3ம் விது3: ॥**

---

73. "**अहमन्न**" (அஹமந்நம்) என்கிற இதுவே அர்த்த2ம்; 73. "**अन्नादः**" (அந்நாத3:) என்று இத்தலையில் போ4க்த்ருத்வம் ஸ்வலாப4த்தால் ஈஶ்வரனுக்குப் பேருன ஹர்ஷம் தனக்குப் புருஷார்த்த2மாகை. ஸங்க்3ரஹ பக்ஷத்தில் இஶ்லோகம் "ஜிதந்தே" என்கிற பத3த்தினுடைய விவரணமாகக்கடவது. 6.

7. **பதவுரை:**— **கார்யாணும்**—கார்யங்களான எல்லாப் பொருள்களுக்கும், **பூர்வம் காரணம்**—ஆதி3காரணமாகவும், **வசஸாம்** — சொற்களுக்கு, **உத்தமம் வாச்யம்** — மேலான சொற்பொருளாகவும், **யோக3ாநாம்** — யோக3ங்களுக்கு, **பரமாம் ஸித்3தி4ம்** — மேலான ப்ராப்யமாகவும், **தே** — உன்னுடைய, **பரமம் பத3ம்**—மேலான திருவடிகளை, **விது3:**— (பெரியோர்கள்) அறிகிருர்கள்.

**அவ:**— **(கார்யாணும் காரணமித்யாதி3)** கீழ் ஶ்லோகத்தில் சொன்ன ஜ்ஞானஶக்த்யாதி3களை அனுஸந்தி4த்து, அந்த ஶக்திகாரிதமான ப4க3வத3னுப4வத்துக்கு வர்த்த4கமான பரமபத3த்தே என்னைப் போகவிடவேணும் என்கிறது. "முக்தப்ராப்யமான பூ4மியைத் தருவானிறே ஶரண்யனுவான்" என்று பட்டர் நிர்வாஹம்; "நித்யானுப4ாவ்யமான தேவர் திருவடிகளை லபி4க்கவேணுமென்கிறது" என்னவுமாம். இது பூர்வர்கள் நிர்வாஹம்.

**வ்யா:**— **( கார்யாணும் காரணம் பூர்வம் )** அந்யோந்ய கார்யகாரணப4ாவங்களை வ்யாவர்த்திக்கிறது. 74. "**प्रधान पुंसोरजयोः कारणं कार्यभूतयोः**" (ப்ரத4ாநபும்ஸோரஜயோ: காரணம் கார்யபூ4தயோ:) என்கிறபடியே ப்ரத4ானபுருஷர்களும் ஈஶ்வரனைக் குறித்துக் கார்யங்களாகக் கடவதிறே. 75. "**यतः प्रसूता जगतः प्रसूती तोयेन जीवान् व्यससर्ज भूम्यां**" (யத: ப்ரஸூதா ஜக3த: ப்ரஸூதீ தோயேந ஜீவாந் வ்யஸஸர்ஜ பூ4ம்யாம்) என்றதிறே. அந்த ப்ரக்ருதிபுருஷர்களைக் காரணமாக உடைத்தாயிறே மஹத3ாதி3கார்யங்களிருப்பது. அவற்றைக் காரணமாக உடைத்தாயிறே அண்ட3மிருப்பது. அண்ட3ாந்தர்வர்த்தியான ப்3ரஹ்மாவைக் காரணமாக உடைத்தாயிறே தே3வாதி3சதுர்வித4சேதனரும், தத்3 போ4க்3ய போ4கோ3பகரண போ4க3ஸ்த2ானங்களும் இருப்பது. ஆக, ப3ஹுமுக2மான காரணங்களுக்கெல்லாம் ப்ரத2மகாரணமாயிறே ஸர்வேஶ்வரன் இருப்பது. "கார்யாணும் காரணம் பூர்வம்" என்று தே3ஶபரமானபோது அவனுக்கு ப்ரக்ருதி நித்யவிஶேஷணமாகையாலே அத்தை ஜக3த்காரணமென்றுப்போலே, பரமபத3ம் அவனுக்கு நித்ய விஶேஷணமாகையாலே பூர்வக்ஷணவர்த்தியாய், பூர்வ காரணமென்னலாம். இத்தால் பரமபத3த்தினுடைய நித்யதை சொல்லுகிறது. 76. "**तदक्षरे परमे व्योमन्**" (தத3க்ஷரே பரமே வ்யோமந்) என்றும், a "கலங்காப் பெருநகரம்" என்றும் சொல்லக்கடவதிறே. **(வசஸாம் வாச்யமுத்தமம்)** லௌகிகமாயும், வைதி3கமாயுமுள்ள ஸர்வ ஶப்3த3ங்களுக்கும் ப்ரத4ாநவாச்யன் ஈஶ்வரன் என்கிறது. 77. "**अनेन जीवेनात्मनाऽनुप्रविश्य नामरूपे व्याकरवाणि**" (அநேந ஜீவேநாத்மநாऽநுப்ரவிஶ்ய நாமரூபே வ்யாகரவாணி) என்றும், 78. "**तत्सृष्ट्वा तदेवानुप्राविशत्**" (தத் ஸ்ருஷ்ட்வா ததே3வாநுப்ராவிஶத்) என்று தொடங்கி, 78. "**सत्यञ्चानृतञ्च सत्यमभवत्**" (ஸத்யம் சாந்ருதம் ச ஸத்யமப4வத்) என்றும் சொல்லக்கடவதிறே. 79. "**चराचरव्यपाश्रयस्तु स्यात्तद्व्यपदेशो भाक्तस्तद्भावभावित्वात्**" (சராசரவ்யபாஶ்ரயஸ்து ஸ்யாத் தத்3வ்யபதே3ஶோபா4க்தஸ் தத்3ப4ாவப4ாவித்வாத்) என்கிற ஸூத்ரமும் ப்ரத4ானதயா வாச்யன் ஈஶ்வரனென்றதிறே. இத்தால் ஸ்ருஷ்டமான பத3ார்த்த2ங்களில் ஆராத்4யரான

---

a மூன்-திருவ 51.

தே3வதைகளோடு ஆராத4கரான மனுஷ்யரோடு ஆராத4னோபகரணங்களான திர்யக்ஸ்த2ாவரங்களோடு வாசியற ஸர்வாந்தராத்மாவாய் இருக்கிறபடியைச் சொல்லுகிறது. "வசஸாம் வாச்யமுத்தமம்" என்கிறது தே3ஶபரமானபோது ப்ராத4ாந்யத்தை லக்ஷிக்கிறது. 76. **"परमे व्योमन्"** (பரமே வ்யோமந்) என்றும், a "தனியுலகு" என்றும் சொல்லக் கடவதிறே. **(யோக3ாநாம் பரமாம் ஸித்3தி4ம்)** என்று ப்ராப்யாந்தர்க்க3தமான ஸம்ஸாரவிமோசனத்தை வ்யாவர்த்திக்கிறது. "த்வாமேவ ஶரணம் ப்ராப்ய நிஸ்தரந்தி மநீஷிண:" (ஶ்லோ-4) என்றதிறே. இத்தால் நிரவதி4க போ4க்3யமான திருவடிகளைச் சொல்லுகிறது. b "நலமந்தமில்லதோர் நாடு" என்று தே3ஶமும் நிரதிஶயபோ4க்3யமாயிறே இருப்பது. **(தே பரமம் பத3ம்)** ஸர்வகாரணனுமாய், ஸர்வஶப்3த3வாச்யனுமாய், ஸர்வோபாய ஸாத்4யனுமாயிருந்துள்ள உன்னுடைய, ஸர்வாதி4கமாய், நிரதிஶய போ4க்3யமான திருவடிகளை என்னுதல்; உன்னுடைய நிரதிஶயபோ4க்3யமான ஸ்த2ானத்தை என்னுதல். **(விது3:)** ஜ்ஞாநாதி4கராயிருக்குமவர்கள் அறியாநிற்பர்கள்; நித்யமாய், ப்ரத4ாநாத் அதி4கமாய், நிரதிஶயபோ4க்3யமாயிருப்பதொரு நாடு உண்டென்றும், அந்த தே3ஶத்தே 23. **"श्रिया सार्धं जगत्पतिः—आस्ते"** (ஶ்ரியா ஸார்த்த4ம் ஜக3த்பதி:-ஆஸ்தே) என்கிறபடியே இருப்பதொரு விக்3ரஹமுண்டென்றும் அறிவார் ஸகலவேத3ாந்ததாத்பர்யம் கைப்பட்ட ஸர்வஜ்ஞரிறே. அபேக்ஷிக்கிறவன், தன் சிறுமையைப் பார்த்தும், அவனுடைய நிருபாதி4கஸ்வாதந்த்ர்யத்தைப் பார்த்தும், அர்த்தி2யாதே இங்குத்தை வைலக்ஷண்யத்தைக் கொண்டாடுகிறுன், கருத்தறிந்து அங்கே போகவிடுகைக்காக. ஒருத்தன் கையிலே எலுமிச்சம்பழம் இருந்தால், அதன் நன்மையாலே ஒருத்தன் அதைக்கொண்டாடினுல் உதா3ரனனவன் எதிர்த்தலையில் நினைவறிந்து கொடுக்குமா

---

a பெரியாழ்-திரு. 5-4-9.  b திருவாய் 2-8-4.



**अहं भीतोऽस्मि देवेश! संसारेऽस्मिन् भयावहे।**
**पाहि मां पुण्डरीकाक्ष! न जाने शरणं परम्॥८॥**

8. **அஹம் பீ4தோ஽ஸ்மி தே3வேஶ! ஸம்ஸாரே஽ஸ்மிந் ப4யாவஹே।**
**பாஹி மாம் புண்ட3ரீகாக்ஷ! ந ஜாநே ஶரணம் பரம்॥**

---

போலே. ஸங்க்3ரஹபக்ஷத்தில் "மஹாபுருஷ" என்கிற பத3த்தினுடைய வ்யாக்2யானமாயிருக்கிறது. 7.

8. **பதவுரை :— தே3வேஶ** — நித்யஸூரிகளுக்குத் தலைவனே!, **ப4யாவஹே**—ப4யத்தைக் கொடுக்கும், **அஸ்மிந் ஸம்ஸாரே** — இந்த ஸம்ஸாரத்தில், **அஹம்** — அடியேன், **பீ4தோ஽ஸ்மி**— ப4யப்படாநின்றேன்; **புண்ட3ரீகாக்ஷ!**—செங்கண்மாலே! **மாம்**—அடியேனை, **பாஹி**—காத்தருள்வாயாக; **பரம் ஶரணம்**—(உன்னைத்தவிர) வேருெரு உபாயத்தை, **ந ஜாநே**—அறிகின்றிலேன்.

அவ:—**(அஹம் பீ4தோ஽ஸ்மீத்யாதி3)** கீழ் ஶ்லோகத்திலே பரமபத3த்தில் போ4க்3யதையை அனுஸந்தி4த்தான்; அந்த போ4க்3யதானுஸந்த4ானத்தாலே ஸம்ஸாரத்திலே பொருந்தாதபடியான ப4யம் பிறந்தது. அந்த ப4யநிவ்ருத்தியைப் பண்ணியருளவேணுமென்று அபேக்ஷிக்கிறது இஶ்லோகம். ஸம்ஸாரப4யநிவர்த்தகனிறே ஶரண்யனுவான். ஸம்ஸாரத்தை உள்ளபடி அறிந்தவனுக்கும், ஸம்ஸாரம் ப4யஸ்த2ானமாயிருக்கும். ஸ்வரூபத்தை உள்ளபடி அறிந்தவனுக்கும் அது ப4யஸ்த2ாநமாயிருக்கும். அவ்வோபாதி ப்ராப்யபூ4மியில் போ4க்3யதையை அனுஸந்தி4த்தாலும் ப4யஸ்த2ானமாயிருக்குமிறே.

**வ்யா :— (ப4யாவஹே அஸ்மிந் ஸம்ஸாரே அஹம்)** 'ஸம்ஸாரமாகிறதேது? அது ப4யாவஹமாயிருக்கிறபடி எங்ஙனே?' என்னில்: அவித்3யா கர்ம வாஸநா ருசி ப்ரக்ருதிஸம்ப3ந்த4ங்கள் ஸம்ஸாரமாகிறது. அவித்3யை யாகிறது அஜ்ஞானம்; அதாகிறது,— புக்க ஶரீரத்தில்

அஹம்பு3த்3தி4யும், ஶரீராநுப3ந்தி4யான பதா3ர்த்த2த்தில் மமதாபு3த்3தி4யும். 80. "अनात्मन्यात्मबुद्धिर्या, अस्वे स्वमिति या मतिः" (அநாத்மந்யாத்மபு3த்3தி4ர் யா, அஸ்வே ஸ்வமிதி யா மதி:) என்றுனிறே ஸ்ரீபராஶரப4க3வான். a "யானே என்னை அறியகிலாதே யானே என்றனதே என்றிருந்தேன்" என்றும், பிறர்க்கு உபதே3ஶிக்கிற இடத்திலும், b "நீர் நுமது" என்றும் அருளிச்செய்தாரிறே ஆழ்வாரும். அஹங்காரம், ஶேஷத்வத்தை அழிக்கையாலே ப4யாவஹம். மமதை, ப4க3வத்3விஷயத்தில் போ4க்3யதையை அழிக்கையாலே ப4யாவஹம். புண்யபாபரூபமாயாய்த்து கர்மமிருப்பது. பாபம் நரகாத்3யனுப4வத்துக்கு ஹேதுவாகையாலே ப4யாவஹம்; புண்யம் ப4யாவஹமானபடியென்? என்னில்: புண்யப2லமாவது ஸ்வர்க்கா3த்3யனுப4வங்களிறே. அவை ஸ்வரூபத்தை நஶிப்பிக்கக்கடவ அஹங்காரமமகாரத்தை வர்த்தி4ப்பிக்கையாலே ப4யாவஹம்; அநர்த்த2ஹேதுவான ஶப்3தா3தி3களிலே மூட்டுகையாலே ப4யாவஹம், தே3ஹ ஸம்ப3ந்த4ம், ஆதி4ரூபத்தாலும், வ்யாதி4ரூபத்தாலும், பரபரிப4வரூபத்தாலும், ஶீதோஷ்ணாதி3களாலும் ப4யாவஹம். இப்படிகளால் ருசிவாஸனைகளும ப4யாவஹங்கள். எங்ஙனேயென்னில்: ஆதி3ப4ரதன் ஸமாதி4த3ஶையிலே மானின் பக்கலிலே ருசி பிறந்து மானாய்ப் பிறந்தானிறே. அதுதனக்கு அடி விஷயாந்தரப்ராவண்யமன்று; ரக்ஷகத்வவாஸனையாலேயிறே. ஆகையாலே வாஸநாருசிகளும் ப4யாவஹங்கள். த்3ருஷ்டிவிஷம்போலே ருசிதானே ப4யாவஹமாயிருக்கிறபடி. அதாகிறது,—ஸம்ஸாரிகளுக்கு, விட்டில் போலே அஹங்காரத்தை ஆத3ரித்து மேல்விழுந்து வர்த்திக்கையாலே, காண்கைதானே ப4யாவஹமாயிருக்குமிறே. 81. "भूमौ निपात्यमानोऽद्रेरन्तरास्ते स्वपन्निव" (பூ4மௌ நிபாத்யமானோऽத்3ரேரந்தராஸ்தே ஸ்வபந்நிவ) என்று மலையினின்றும் பூ4மியில் விழுகிறவன் நடுவே உறங்கு

a திருவாய் 2-9-9. b திருவாய் 1-2-3.



கிருப்போலேயிறே ஸம்ஸாரிகள் வருகிற அநர்த்த2த்தைப் பற்றி பு3த்3தி4பண்ணாதே ஸுகி2க்கிறபடி. a "நலமந்தமில்லதோர் நாடு" என்று ஒரு விபூ4தியாக முற்றடங்கி ஸுக2மாயிருக்குமாபோலேயிறே இங்கும் கட்டடங்க ப4யாவஹமாயிருக்கும்படி. **(அஹம் பீ4தோऽஸ்மி)** ஸம்ஸாரத்தை அநந்தக்லேஶபா4ஜனமாக அனுஸந்தி4த்த நான் ப4யப்படாநின்றேன். வர்த்தமானநிர்த்தே3ஶத்தாலே ப4யநிவ்ருத்திக்கு ஓர் அவகாஶம காண்கிறிலேன். ஸம்ஸாரத்தில் பய4நிவ்ருத்திக்கு அவகாஶமுண்டோ? என்னில்: ஈஶ்வரன் பக்கலிலே ந்யஸ்தப4ரனாயிருக்குமவன் நிர்ப்ப4யனாயிருக்குமிறே. அதுவும் எனக்கு அப4யஸ்தா2னமாகிறதில்லை. ப்ராப்யத்தில் அதிப்ராவண்யத்தாலே த்வரை பிறந்தவனுக்கு அத்4யவஸாயத்தாலே த4ரிக்கவொண்ணாதிறே. b "களைகண் மற்றிலேன்" என்றும், c "நாகணை மிசை நம்பிரான் சரணே சரண் நமக்கு" என்றும் அத்4யவஸிதரான ஆழ்வார் d "அந்தமில் பேரின்பத்தடியரோடிருந்தமை" என்று அத்தே3ஶவிஶேஷத்தில் போ4க்3யதையை ஸாக்ஷாத்கரித்து, அநந்தரம் e "முனியே! நான்முகனே!" என்று கூப்பிட்டாரிறே. **(தே3வேஶ)** f "அயர்வறுமமரர்கள்" என்கிறபடியே நீயும் அவர்களுமாய் அங்கே களித்துத் திரியாநிற்க, அவர்களோபாதி போ4க3த்துக்கும் யோக்3யனாயிருக்கிற நான் இங்கே க்லேஶப் படுகை தேவர்க்குப் போருமோ? பிராட்டியும், ப4யஸ்தா2னமான லங்கையிலே இருந்தவிடத்திலே 82. "हा राम! हा लक्ष्मण!" (ஹா ராம! ஹா லக்ஷ்மண!) என்றுளிறே. g "இமையோர் தலைவா" என்றும், h "விண்ணுளார் பெருமானேயோ" என்றும் அருளிச்செய்தாரிறே ஆழ்வார். **(மாம் பாஹி)** "யோக3னாம் பரமாம் ஸித்3தி4ம்" என்கிறபடியே அத்தே3ஶத்தில் போ4க்3யதையை அனுஸந்தி4த்து மேல்விழுந்த தன்னை. 83. "एहि पश्य शरीराणि" (ஏஹி

a திருவாய் 2-8-4. b திருவாய் 5-8-8. c திருவாய் 5-10-11.
d திருவாய் 10-9-11. e திருவாய் 10-10-1. f திருவாய் 1-1-1.
g திருவிரு-1. h திருவாய் 7-1-5.

कालेष्वपि च सर्वेषु दिक्षु सर्वासु चाच्युत!।
शरीरे च गतौ चापि वर्तते मे महद्भयम्॥ ९॥

9. காலேஷ்வபி ச ஸர்வேஷு தி3க்ஷு ஸர்வாஸு சாச்யுத!।
ஶரீரே ச க3தௌ சாபி வர்த்ததே மே மஹத்3ப4யம்॥

---

பஶ்ய ஶரீராணி) என்னுமாபோலே வடிவைக் காட்டுகிறுன் என்றுமாம். (பாஹி) ஶரீரஸம்ப3ந்த4த்தை அறுத்து அர்ச்சிராதி3மார்க்க3த்தாலே நிர்ப்ப4யமான தே3ஶத்திலே கொண்டுபோகவேணும். (புண்ட3ரீகாக்ஷ) உன்னுடைய ஆகர்ஷகமான திருக்கண்களாலே என்னைக் குளிரநோக்கியருளவேணும். நான் என்னுடைய ப4யநிவ்ருத்திக்கு யத்னம் பண்ணுமன்றன்றே நேர்த்தியுள்ளது. தேவர் செய்தருளுமிடத்தில் அநாயாஸமன்றே. கீழ்ச்சொன்ன ஆஶ்ரயணீயமான வாத்ஸல்யாதி3களும், ப2லஸித்3தி4க்கு உடலான ஜ்ஞானஶக்த்யாதி3களும் வேணுமோ என்னை ரக்ஷிக்கைக்கு? முதல் "ஜிதங்தே புண்ட3ரீகாக்ஷ" என்று எனக்குப் புறம்புள்ள அந்யபரதையைத் தவிர்த்தாப்போலே ப4யத்தையும் போக்கி ரக்ஷித்தருளவேணும். (ந ஜாநே ஶரணம் பரம்) "பரம் ஶரணம் ந ஜாநே"; உன்னையொழிய வேறொரு உபாயம் அறிகிறிலேனே. 84. "निदिध्यासितव्यः" (நிதி3த்4யாஸிதவ்ய:) என்று ஶ்ருதிகள் சொன்னலும், 85. "मन्मना भव मद्भक्तः" (மந்மநா ப4வ மத்3ப4க்த:) என்று ரக்ஷகரான தேவரீர் அருளிச்செய்தாலும், நான் வேறோர் உபாயம் அறிகிலேனே. "அதுக்கு ஹேது என்?' என்னில்: சேதநனோடு அவனுக்கு உபகரணமான கரணங்களோடு வாசியற தேவர் அதீ4னமாகையாலே. "நமஸ்தேऽஸ்து" என்றும், "ஹ்ருஷீகேஶ" என்றும் அனுஸந்தி4த்தவனிறே. 86. "मत्तः स्मृतिर्ज्ञानमपोहनं च" (மத்த: ஸ்ம்ருதிர் ஜ்ஞாநமபோஹநம் ச) என்றிறே தேவர் வார்த்தையும். ஸங்க்3ரஹபக்ஷத்தில் இஶ்லோகம் "புண்ட3ரீகாக்ஷ"என்கிற பத3த்தினுடைய விவரணம். 8.



9. பதவுரை:— அச்யுத—அடியவர்களை நழுவவிடாதவனே! ஸர்வேஷு காலேஷு அபி ச—எல்லாப் புண்ய காலங்களிலும், ஸர்வாஸு தி3க்ஷு ச—எல்லா திசைகளிலுமுள்ள புண்யக்ஷேத்ரங்களிலும், ஶரீரே ச—(த4ர்மஸாத4னமான) ஶரீரத்திலும், க3தௌ அபி ச—ஶரீராந்தரக3தியிலும், மே—அடியேனுக்கு, மஹத் ப4யம்—அதி4கமான ப4யம், வர்த்ததே—உள்ளது.

அவ:— (காலேஷ்வபி சேத்யாதி3) "ந ஜாநே ஶரணம் பரம்" என்னலாமோ? ஆத்மாவுக்கு உஜ்ஜீவனஹேதுவான உபாயங்களை ஶாஸ்த்ரமுக2த்தாலே உண்டாக்கிவைத்து, அதுக்குமேல் அல்பவ்யாபாரத்தினலே ஸகலது3ரிதங்களும் நஶிக்கும்படியாகப் புண்யகாலம், புண்யக்ஷேத்ரம் முதலானவற்றை உண்டாக்கி வைத்திலோமோ? வேறு உபாயாந்தரங்களும் உண்டாக அறிகிறிலேன் என்னலாமோ? என்னில்: "அவற்றினுடைய ஸத்3பா4வத்தை இல்லை என்கிறேனல்லேன்; அவற்றிலே இழிந்த நான் நித்யஸம்ஸாரியான நானகையாலே, முன்பு நின்ற நிலையும் கெடுமென்று சொன்னேன்" என்கிறுன். இத்தால், உபாயாந்தரபரித்யாக3 பூர்வகமாயிருக்கும் ஸித்3தோ4பாயபரிக்3ரஹம் என்னுமத்தைச் சொல்லுகிறது. இப்படி நிரபேக்ஷாபாயபூ4தனிறே ஶரண்யனுவான்.

வ்யா:—(காலேஷ்வபி ச) புண்யமான அயநவிஷ்வாதி3களிலும், அவற்றை விஶேஷிக்கிற அர்த்தோ4தயாதி3 காலங்களிலும். அதாகிறது— இவ்விலக்ஷணகாலங்களிலே ஸேதுத3ர்ஶன ஸங்க3மங்களிலே பண்ணும் தீர்த்த2 தா3னாதி3களைச் சொல்லக்கடவதிறே.87."कृतघ्नोऽपि विशुद्ध्यति" (க்ருதக்4நோऽபி விஶுத்3த்4யதி)88.' गोघ्ने चैव सुरापे च चोरे भग्नव्रते तथा। निष्कृतिर्विहिता सद्भिः कृतघ्ने नास्ति निष्कृतिः॥" (கோ3க்4நே சைவ ஸுராபே ச சோரே ப4க்3நவ்ரதே தத2ா। நிஷ்க்ருதிர் விஹிதா ஸத்3பி4: க்ருதக்4நே நாஸ்தி நிஷ்க்ருதி:॥)

என்கிறபடியே ப்ராயஶ்சித்தமில்லை என்கிற க்ருதக்4னனுடைய பாபமுட்படப்போமென்றது. **(ஸர்வேஷ்வபி)** 89. **"अश्वत्थं सिन्धुराजञ्च सदा सेवेत न स्पृशेत्। मन्दवारे स्पृशेत्पूर्वमपरं पर्वणि स्पृशेत्॥"** (அஶ்வத்த2ம் ஸிந்து4ராஜம் ச ஸதா3 ஸேவேத ந ஸ்ப்ருஶேத்। மந்த3வாரே ஸ்ப்ருஶேத் பூர்வமபரம் பர்வணி ஸ்ப்ருஶேத்॥) என்று அபர்வணி கடல் தீண்டலாகாது என்னும் நியமமின்றிக்கே ஸர்வகாலமும் ஸேவிக்கலாயிருக்கும் க3ங்கா3தி3 தீர்த்த2ங்களை ஸமுச்சயிக்கிறது. **(தி3க்ஷு)** ஸகலபாவனங்களாகச் செய்துவைத்த இவையொழிய, 27. **"देशोऽयं सर्वकामधुक्"** (தே3ஶோऽயம் ஸர்வகாமது4க்) என்கிறபடியே ப்ரத2மத்திலே பாவனமாய், பின்பு ப4க3வத்ப்ராப்திக்கு ஸாத4னமுமாய், பின்பு போ4க்3யமுமாயிருக்கும் புண்யதே3ஶம் முதலான தே3ஶங்களை ஸமுச்சயிக்கிறது. 90. **"मथुरा नाम नगरी पुण्या पापहरी शुभा"** (மது2ரா நாம நக3ரீ புண்யா பாபஹரீ ஶுப4ா) என்னக்கடவதிறே. **(ஸர்வாஸு ச)** இத்தால் — அவதரித்தருளின தே3ஶங்களையொழிய ப4க3வத்ஸந்நிதி4 மாருத ஸாளக்3ராமமண்ட3லம் முதலான தே3ஶங்களை ஸமுச்சயிக்கிறது. **(ஶரீரே ச)** கீழ்ச்சொன்ன தே3ஶங்களில் பண்ணும் உபாயாநுஷ்ட2ானத்துக்காக 91. **"शरीरमाद्यं खलु धर्मसाधनं"** (ஶரீரமாத்3யம் க2லு த4ர்மஸாத4நம்) என்றும், 92. **"विचित्रा देहसंपत्तिरीश्वराय निवेदितुम्"** (விசித்ரா தே3ஹஸம்பத்திரீஶ்வராய நிவேதி3தும்) என்றும் சொல்லப்படுகிற இந்த ஶரீரம் எனக்கு வ்யர்த்த2மாகாநின்றதாகை. **(க3தௌ ச)** 93. **"स्वधर्मे निधनं श्रेयः परधर्मो भयावहः"** (ஸ்வத4ர்மே நித4நம் ஶ்ரேய: பரத4ர்மோ ப4யாவஹ:) என்கிறபடியே, ஸாத4நாநுஷ்ட2ானமத்4யே மரணமுண்டானாலும், ஶரீராந்தரத்திலே தலைக்கட்டும்படியான ஶரீராந்தரக3தியும் எனக்கு வ்யர்த்த2ம். **(க3தௌ)** ஶரீராந்தரக3தௌ. 'அபி'ஶப்3த3த்தாலே அநுஷ்டே2யமான கர்ம ஜ்ஞான ப4க்த்யாதி3களைச் சொல்லிற்று என்னுதல்; முன்பு போன ஶரீரங்களை ஸமுச்சயிக்கிறது என்னுதல். முன்பு பரிக்3ரஹித்துப் பொகட்ட ஶரீரங்கள் வ்யர்த்த2மானவோபாதி வர்த்தமான ஶரீரமும் வ்யர்த்த2மென்று கருத்து. **(மே மஹத்3ப4யம்)** இவை வ்யர்த்த2மான அளவேயல்ல. தே3ஶ கால ஶரீரங்களிலும், இவற்றைப் பற்றிநின்று அனுஷ்டி2க்கும் கர்மயோகா3த்3யுபாயங்களிலும் ப4யம் வர்த்தியாநின்றது. 'ப4யம் வர்த்திப்பானென்?' என்னில்: முன்பு தேவர் திருவடிகளை உபாயமாகப் பற்றி வர்த்திக்கையாலே, தேவருடைய இரக்கமும் கெடுமென்று இவை ப4யாவஹமாகாநின்றன. 'அனுகூலமானவை ப4யஸ்த2ானமாவானென்?' என்னில்: ஸ்வீகரித்த உபாயம் வேறொன்றை ஸஹியாமையாலே. முதலிலே "த்வாமேவ ஶரணம் ப்ராப்ய" (ஶ்லோ-4) என்றவனிறே; 94. **"तमेव"** (தமேவ) என்றிறே ஶாஸ்த்ரவித4ாநமும்; 95. **"मामेकं"** **(மாமேகம்)** என்றிறே ஶரண்யனுடைய வாக்யமும். **(மஹத் ப4யம் வர்த்ததே)** "ப4யாவஹே" (ஶ்லோ-8) என்கிற ஸம்ஸாரப4யத்தளவன்று இந்த ப4யம். விஷயாந்தரப்ராவண்யத்தால் வந்த ப4யத்தளவன்றிறே ஸாத4நாந்தராநுஷ்ட2ானத்தால் வந்த ப4யம் என்கை. விஷயாந்தர ப்ராவண்யத்தால் வந்த ப4யத்துக்கு ஈஶ்வரன் க்ருபையைப் பற்றலாம். அத்தையும் நழுவும்படி பண்ணுகிறதிறே ஸாத4நாந்தரபரிக்3ரஹம். **(அச்யுத)** இப்படி ஸர்வோபாயஶூந்யராயிருப்பாரையும் நழுவவிடாத ஸ்வப4ாவத்தாலேயிறே தேவர்க்கு "அச்யுத:" என்கிற திருநாமம் உண்டாயிற்று. "யஸ்மாத் ப்ராப்தா ந ச்யவந்தே, ஸோऽச்யுத:" என்றிறே திருநாமத்துக்கு நிர்வாஹம். 96. **"द्वारकानिलयाच्युत !"** (த்3வாரகாநிலயாச்யுத!) என்று தேவரை விஶ்வஸித்துக் கையை விட்டவளை அத்த3ஶையில் விடாதவரிறே தேவர். 97. **"त्वत्प्रसादान्मयाच्युत !"** (த்வத்ப்ரஸாதா3ந் மயாச்யுத!) என்று சொல்லக்கடவதிறே. ஸர்வஸங்க்3ரஹபக்ஷத்தில் "நமஸ்தே" என்கிற பத3த்துக்கு ஶேஷமாகக்கடவது. அந்த ப்ரபத3னமும் உபாயாந்தரநிவ்ருத்திபூர்வகமாகையாலே.

त्वत्पादकमलादन्यन्न मे जन्मान्तरेष्वपि।
निमित्तं कुशलस्यास्ति येन गच्छामि सद्गतिम्॥१०॥

10. த்வத்பாத3கமலாத3ந்யந்ந மே ஜந்மாந்தரேஷ்வபி।
நிமித்தம் குஶலஸ்யாऽஸ்தி யேந க3ச்ச2ாமி ஸத்3க3திம்॥

---

10. பதவுரை:— யேந—எந்த உபாயத்தினால், ஸத்3க3திம்—நற்கதியை, க3ச்ச2ாமி—அடியேன் அடைவேனோ, தஸ்ய குஶலஸ்ய—அப்படிப்பட்ட உபாயத்துக்கு, நிமித்தம்—காரணமான ப்ரத2மஸுக்ருதம், த்வத் பாத3 கமலாத் அந்யத்—உம்முடைய திருவடித் தாமரைகளிற்காட்டிலும் வேறான து, மே—அடியேனுக்கு, ஜந்மாந்தரேஷ்வபி நாஸ்தி—எப்பிறப்பிலும் இல்லை.

அவ:–(த்வத்பாத3கமலாதி3த்யாதி3) "உபாயோபேயங்கள் இரண்டும் நாமேயானாலும், அநாதி3காலம் இப்படி விஷய ப்ரவணனாய் நம் பக்கலிலே விமுக2னாய்ப்போந்த ஸம்ஸாரிக்கு விஷயவைமுக்2யபூர்வகமாக நம் பக்கலிலே ஆபி4முக்2யம் பிறக்கைக்கு அடியான ப்ரத2மஸுக்ருதம் இவன் தலையிலே ஆகவேண்டாவோ? இஸ்ஸுக்ருதத்தாலே ஆபி4முக்2யம் பிறந்தால் பின்பன்றோ யதா2ர்த்த2ஜ்ஞானம் பிறப்பது? அந்த ஜ்ஞானத்தாலேயன்றோ த்யாஜ்யோபாதே3ய விபா4க3ம் பிறப்பது? த்யாஜ்யநிவ்ருத்திபூர்வகமான ப்ராப்யஸித்3தி4க்கு உபாயம் அபேக்ஷிதமாவது பின்பன்றோ? அத்தாலேயன்றோ ப்ராப்யஸித்3தி4? இதெல்லாத்துக்கும் அடியான ப்ரத2ம ஸுக்ருதம் இவன் கையாலே ஆகவேண்டாவோ?" என்னில்: "அந்த ஸுக்ருதமும் தேவர் திருவடிகளே; எனக்கு வேறில்லை" என்கிறது. ப்ராப்யப்ராபகங்கள் அவனே யென்று கீழ் உக்தமான அர்த்த2த்தை நிக3மிக்கிறது என்னவுமாம். "தவ சரணத்3வந்த்3வம் வ்ரஜாமி" என்றும், "யோக2ாநாம் பரமாம் ஸித்3தி4ம் பரமம் தே பத3ம் விது3:" என்றும் ப்ராப்யப்ராபகங்கள் கீழே உக்தமிறே.



வ்யா:— (த்வத்பாத3கமலாத3ந்யத் குஶலஸ்ய நிமித்தம் மே நாஸ்தி) தேவர் திருவடிகள் ப்ராப்யமுமாய், ப்ராபகமுமானவோபாதி ப்ரத2மஸுக்ருதமும் எனக்கு தேவர் திருவடிகளையொழிய வேறில்லை. "த்வத3ந்யத் குஶலஸ்ய நிமித்தம் மே நாஸ்தி" என்னவுமாயிருக்க, "பாத3 கமலம்" என்கிற பத3த்3வயங்கள் ப்ராப்யப்ராபகங்களை ஸ்மரிப்பிக்கின்றன. கமலபத3ம் போ4க்3யதையை ஸ்மரிப்பிக்கிறவோபாதி பாத3பத3ம் உபாயத்தை ஸ்மரிப்பிக்கிறது. "சரணத்3வந்த்3வம் ஶரணம் வ்ரஜாமி" என்று திருவடிகளையிறே உபாயமாகச் சொல்லிற்று. (குஶலஸ்ய நிமித்தம்) மங்க3ளரூபமான உபாயஸித்3தி4க்கு ஹேதுவான ப்ரத2மஸுக்ருதம். சேதனனுக்கு மங்க3ளரூபமாயிறே இவ்வுபாயம் ரஸித்திருப்பது. 98. "बहूनां जन्मनामन्ते ज्ञानवान् मां प्रपद्यते" (ப3ஹூநாம் ஜந்மநாமந்தே ஜ்ஞாநவாந் மாம் ப்ரபத்3யதே) என்கிறபடியே உபாயஸித்3தி4ஹேதுவாய், அநேக ஜன்மஸுக்ருதஸாத்4யமாயிருக்கிற ப4க3வத்3 ஜ்ஞானமாகிற ப்ரத2மஸுக்ருதம் "த்வத்பாத3கமலாத3ந்யந்நாஸ்தி" என்னக்கடவதோ? என்னில்: (மே நாஸ்தி) *அஜ்ஞாநியானாலும் எனக்குத் திருவடியொழிய வேறில்லை. 'அதுவென்?' என்னில்: ஸுக்ருத கார்யமாவது ஶப்3தா3தி3விஷயப்ராவண்யத்தினின்றும் மீட்டு இவ்வாத்மாவுக்கு ப4க3வதா3பி4முக்2யத்தைப் பிறப்பிக்கையிறே அது. "ஜிதந்தே புண்ட3ரீகாக்ஷ" என்கிறபடியே, இவ்வர்த்த2ம் தேவர் அழகாலே பிறந்த பின்பு, அந்த ஸுக்ருதம் எனக்கு தேவர் திருவடிகளே. (ஜந்மாந்தரேஷ்வபி) அழகைக் காட்டி மீட்டதுவும், ஜந்மாந்தரங்களில் ஒரு ஸுக்ருதவிஶேஷம் உண்டாய், அதன் ப2லமானலோவென்னில்: விஷயப்ரவணனை மீட்கைக்கு ஒரு ஸுக்ருதாபேக்ஷை இல்லாமையாலே, அதுவும் வேண்டுவதில்லை. a "என் ஆவியை நடுவே வந்துய்யக் கொள்கின்ற நாதனை" என்று ஆழ்வார் அருளிச்செய்ததுக்கும்

---

* அஜ்ஞாநி – அந்த ஜ்ஞாநி a திருவாய் 1-7.5.

विज्ञानं यदिदं प्राप्तं यदिदं स्थानमार्जितम्।
जन्मान्तरेऽपि मे देव! माभूत्तस्य परिक्षयः॥ ११॥

11. விஜ்ஞாநம் யதி3த3ம் ப்ராப்தம் யதி3த3ம் ஸ்தா2நமார்ஜிதம்।
ஜந்மாந்தரேऽபி மே தே3வ மாபூ4த் தஸ்ய பரிக்ஷய: ॥

---

அடி இதுவிறே. (யேந குஶலேந ஸத்3க3திம் க3ச்ச2ாமி) ஸத்3க3தி என்கிறது விலக்ஷணமான ப்ராப்யம். அதாவது:— "யோக3ிநாம் பரமாம் ஸித்3தி4ம் பரமம் தே பத3ம் விது3:" என்கிற பரமபத3ம். "யேந குஶலேந ஸத்3க3திம் க3ச்ச2ாமி, தஸ்ய குஶலஸ்ய நிமித்தம் ஜந்மாந்தரேஷ்வபி த்வத்பாத3கமலாத3ந்யத் மே நாஸ்தி" என்று அந்வயம். நிக3மனபே4த3த்திலே "யேந உபாயேந ஸத்3க3திம் க3ச்ச2ாமி, தஸ்ய தத்3க3திரூபஸ்ய ஹேதுபூ4தம் உபாயம் ஜந்மாந்தரேஷ்வபி த்வத்பாத3கமலாத3ந்யத் மே நாஸ்தி" என்றபடி. ஸங்க்3ரஹபக்ஷத்தில் "பூர்வஜ" என்கிற பத3த்தினுடைய விவரணமாயிருக்கிறது. 10.

11. பதவுரை:— தே3வ—எம்பிரானே! மே—அடியேனுக்கு, யத் இத3ம் விஜ்ஞாநம்—(நீயே உபாயமும் உபேயமும் என்கிற) யாதொரு ஜ்ஞானமானது, ப்ராப்தம்—கிடைத்திருக்கிறதோ, யத் இத3ம் ஸ்தா2நம்—(இந்த ஜ்ஞான விஷயமான அத்4யவஸாயமாகிற) யாதொரு நிலை, ஆர்ஜிதம்—(அடியேனால்) ஸம்பாதி3க்கப்பட்டிருக்கிறதோ, தஸ்ய—அவற்றுக்கு, பரிக்ஷய:—குறைவானது, ஜந்மாந்தரே அபி—எப்பிறப்பிலும், மாபூ4த்—ஏற்படவேண்டாம்.

அவ:— (விஜ்ஞாநமித்யாதி3) "ப்ராப்யப்ராபகங்களும், அதுக்கு அடியான ஸுக்ருதமும் நாமேயாகிலும் உபாயபூ4தனான நான் மேலே செய்யவேண்டுவதென்?" என்னில்; "பிறந்த விஜ்ஞானமும், ஜ்ஞானமடியாகப் பிறந்த அத்4யவஸாயமும் நஶியாதொழியப்பெறில் 'யோக3ிநாம் பரமாம் ஸித்3தி4ம் பரமம் தே பத3ம் விது3:' என்கிற ப்ராப்யபூ4மியிலே போகவும் வேண்டா; ப4யாவஹமான ஸம்ஸார



நிவ்ருத்தியும் வேண்டா; எனக்கு என்றுமொக்க இதுவே அமையும்" என்கிறது.

வ்யா:—(விஜ்ஞாநம்) விலக்ஷணமான ஜ்ஞானம்; ஸர்வாதி4கமான ப்ராப்யவிஷயமாகவும், ஸர்வாதி4கமான ப்ராபகவிஷயமாகவும் பிறந்த ஜ்ஞானம். ப்ராப்யங்களில் ப4க3வத் ப்ராப்திக்கு அவ்வருகாயிருப்பதொரு ப்ராப்யமில்லாதாப்போலே ஸாத4னங்களிலும் ஸித்3தே4ாபாயத்துக்கு அவ்வருகாயிருப்பதொன்று இல்லையிறே. (யதி3த3ம் விஜ்ஞாநம்) ப்ரமாண ஸித்3த4முமாய், ஹ்ருத3யகமலத்திலே ஸந்நிஹிதமுமாயிருக்கிற ஜ்ஞானம். வேதா3ந்தங்களிலே ப்ராப்யமும், ப்ராபகமும் ஈஶ்வரனேயென்று ப்ரஸித்3த4மிறே. 99. "आनन्दमयः" (ஆநந்த3மய:) என்றும், 100. "रसो वै सः" (ரஸோ வை ஸ:) என்றும், 101. "सर्वगन्धस्सर्वरसः" (ஸர்வக3ந்த4ஸ் ஸர்வரஸ:) என்றும் ப்ராப்யமாக ப்ரஸித்3த4மிறே. 43. "यो ब्रह्माणं विदधाति पूर्वं" (யோ ப்3ரஹ்மாணம் வித3தா4தி பூர்வம்) என்று தொடங்கி, 43. "मुमुक्षुर्वै शरणमहं प्रपद्ये" (முமுக்ஷுர்வை ஶரணமஹம் ப்ரபத்3யே) என்றும், 102. "तस्मान्न्यासमेषां तपसामतिरिक्तमाहुः" (தஸ்மாந் ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தமாஹு:) என்றும், 100. "एष ह्येवानन्दयाति" (ஏஷ ஹ்யேவாநந்த3யாதி) என்றும் உபாயமாகவும் ப்ரஸித்3த4மிறே. (ப்ராப்தம்) ப்ரயோஜநாந்தரபரர்க்கும் ஸாத4நாந்தரநிஷ்ட2ர்க்கும் உட்பட உன்னாலே ப்ராபிக்கப்பட்டது. (யதி3த3ம் ஸ்தா2நமார்ஜிதம்) ஸ்தா2நம் என்று ஸ்தி2தி; அதாகிறது:—இந்த ஜ்ஞாந விஷயமான அத்4யவஸாயம். (யதி3த3ம்) என்று ப்ரதே3ஶாந்தரத்தில் ப்ரஸித்3தி4யையும், ஸ்வஹ்ருத3ய ஸந்நிதி4யையும் சொல்லுகிறது. 106. "व्यवसायादृते ब्रह्मन्! नासादयति तत्परम्" (வ்யவஸாயாத்3ருதே ப்3ரஹ்மந்! நாஸாத3யதி தத்பரம்) என்னக்கடவதிறே. [a] "நாகணை மிசை நம்பிரான் சரணே சரண் நமக்கு" என்றாரிறே ஆழ்வாரும். (ஆர்ஜிதம்) ப4க3வத் ப்ரஸாத3 ஸித்3த4மாகையாலே ஜ்ஞானத்தை

---

a திருவாய் 5-10-11.

ப்ராப்தமென்கிறது. அதி4காரிவிஶேஷணமாய், ஈஶ்வரனை அர்த்தி2த்தே நாம் புருஷார்த்த2மாகப் பெறவேண்டுவ தொன்றுகையாலே அத்4யவஸாயத்தை ஆர்ஜிக்கப்பட்டது என்கிறது. (ஜந்மாந்தரேऽபி) இஜ்ஜந்மம் நஶித்தாலும், இந்த ஜ்ஞாநாத்4யவஸாயங்கள் நஶியாதொழியவேணும் என்கிறது. ‘இத்தைப் புருஷார்த்த2மாக அபேக்ஷிப்பாரைக் கண்டறியோமே’ என்ன: (மே) எனக்கு இதுவே புருஷார்த்த2ம்; தாம் தாம் அர்த்தி2த்ததன்றோ புருஷார்த்த2மாவது. (தே3வ) ‘அர்த்தி2ப்பார் உண்டானாலும் நாம் புருஷார்த்த2மாகக் கொடுத்துப் போருவதொன்றன்றே’ என்ன: (தே3வ) ஸம்ஸாரிகளைப்போலே என்னைக்கொண்டு அறியாதொழியவேணும். லீலாரஸம் அனுப4விக்கைக்கு விஷயபூ4தர் ஸம்ஸாரிகளன்றோ. (தஸ்ய) ஜ்ஞாநாத்4யவஸாயங்களுக்குண்டான ஐககண்ட்2யத்தாலே, ஏகவசநத்தாலே சொல்லுகிறது. (பரிக்ஷயோ மாபூ4த்) ஜ்ஞானத்துக்குப் பரிக்ஷயமாகிறது விஸ்ம்ருதி. அத்4யவஸாயத்துக்குப் பரிக்ஷயமாகிறது விநாஶம். ஜ்ஞாநவிஸ்ரம்ப4ங்களுக்கு விஸ்ம்ருதி விநாஶமின்றிக்கே ஒழியவேணும் என்கிறது. கீழ் பரமபத2த்தே கொடுபோகவேணுமென்று அபேக்ஷித்தும், ப4யாவஹமான ஸம்ஸாரத்தைத் தவிர்த்துத் தரவேணுமென்று அபேக்ஷித்தும் வைத்து, ஜ்ஞாநாத்4யவஸாயங்களே அமையுமென்றேன் என்றது இவற்றினுடைய ரஸ்யதையாலே. உபகாரஸ்ம்ருதியாலே ஆசார்யன்பக்கல் பிறந்த பே4ாக்3யதாதிஶயத்தாலே [a]“தேவு மற்றறியேன்” என்னப் பண்ணிற்றிறே. ஸம்ஸாரிகளை த3ர்ஶித்தால் ஜ்ஞாநாத்4யவஸாயங்கள் முக்தப்ராப்யஸ்த2லம் போலேயிறே இருப்பது. [b]“மேலால் பிறப்பின்மை பெற்று அடிக்கீழ்க் குற்றேவலன்று மறப்பின்மை – யான் வேண்டும் மாடு” என்னும் ஆழ்வாருடைய வார்த்தைக்கும் அடி இதுவிறே. ஸங்க்3ரஹபக்ஷத்தில் இஶ்லோகம் “நமஸ்தே” என்கிற பத2த்தை ஸ்மரித்துக் கிடக்கிறது. 11.

[a] கண்ணிநுண்சிறுத்தாம்பு-2. [b] பெரியதிருவ-58.



दुर्गतावपि जातायां त्वद्गतो मे मनोरथः।
यदि नाशं न विन्देत तावताऽस्मि कृती सदा ॥ १२॥

12. து3ர்க்க3தாவபி ஜாதாயாம் த்வத்3க3தோ மே மநோரத2:।
யதி3 நாஶம் ந விந்தே3த தாவதாऽஸ்மி க்ருதீ ஸதா3॥

12. பதவுரை:—த்வத்3 க3த:—தேவரீரிடத்தில் ஈடுபட்டிருக்கிற, மே—என்னுடைய, மநோரத2:—மநோரத2மானது, து3ர்க்க3தௌ ஜாதாயாம் அபி—மிகவும் கீழான நிலை ஏற்பட்டபோதிலும், நாஶம் ந விந்தே3த யதி3 — அழியாதிருக்குமேயாகில், தாவதா—அவ்வளவாலே, ஸதா3—எப்பொழுதும், க்ருதீ அஸ்மி— க்ருதக்ருத்யனாயிருக்கிறேன்.

அவ:—(து3ர்க்க3தாவபீத்யாதி3) து3:க்க2ரூபமான ஸம்ஸார நிவ்ருத்தியும், ஸுக2ரூபமான தே3ஶப்ராப்தியும் வேண்டா; அதி4காரிவிஶேஷணமான ஜ்ஞாந விஸ்ரம்ப4 ஸித்3தி4யாலே புருஷார்த்த2ம் தலைக்கட்டிற்றாமோ? இன்னும் “ஜந்மாந்தரேऽபி” என்று ப4க3வத்ப்ராப்தி விரோதி4யான ஜந்மத்தை அநுமதி பண்ணுகையும் விருத்3த4மன்றோ? என்னில்: ‘கீழ் அபேக்ஷித்தவை ஒன்றும் வேண்டா; ஸம்ஸாரியுமாய், அது தன்னிலும் து3ர்க்க3தியுமாய்ச் செல்லாநிற்கிலும்,தேவர் திருவடிகளில் உபாயோபேயங்கள் முதலான ஸகலலாப4ங்களும் கிடையாதே மநோரத2மாத்ரமேயானாலும்,ஸ்வவஶர் போலே என்றுமொக்க க்ருதக்ருத்யனாகாநின்றேன்’ என்கிறது.

வ்யா:—(து3ர்க்க3தாவபி ஜாதாயாம்) து3ர்க்க3தியாவது:— மநஸ்ஸையொழிய இதர கரணங்கள் உதவாத த3ஶை. அதாகிறது:— அஶக்தியாலே [a]“ஐயார் கண்டமடைக்கிலும்” என்கிற உத்க்ரமணத3ஶையிலும், ஸ்வாபத்தாலே பா3ஹ்யகரணங்களடங்க உபஸம்ஹ்ருதமான ஸ்வப்ந த3ஶையிலும். இத்த3ஶையிலேயாய்ச் செல்லாநின்றாலும். (த்வத்3க3த:) ஸ்வரூபரூபகு3ணவிபூ4திகளெல்லாம் தனித்தனியேயாகப் பரமமான தேவர் திருவடிகளிலே அடையப்

 [a] திருவாய் 2-9-3.

பட்ட மநோரத2மாத்ரமென்கை. (மே மநோரத2:) இழிந்த துறையிலே சபலனுமாய், அவ்வருகு போ4க3க்ஷமனன்றிக்கே இருக்கிற என்னுடைய மநோரத2ம். மநோரத2மாவது:—அபேக்ஷிதமான புருஷார்த்த2ம் ஸித்3தி4யாதொழிந்தாலும், அதில் நசையாலே அவற்றை எண்ணுநிற்கை. 'ஸித்3தி4யின்றிக்கேயிருக்க மநோரத2மாத்ரமே புருஷார்த்த2மாகக்கூடுமோ ?' என்னில்: ஊர்வசியோடே அநுப4வித்துப் புண்யக்ஷயத்தாலே விஶ்லேஷித்துப் போந்தவனுக்கு, வேறு சில விஷயங்களை அநுப4வயோக்3யமாக்கினாலும், அவற்றில் நெஞ்சு செல்லாதே, அவள்தன்னையே நினைத்திருக்கை புருஷார்த்த2மாமாபோலே இதுவும் கூடும். அவிலக்ஷணவிஷயத்தில் போ4க3ங்களைக்காட்டில் விலக்ஷண விஷயத்தில் மநோரத2மாத்ரமே ரஸிக்குமிறே. ப4க3வத்3 விஷயத்தில் மநோரத2மாவது:— 104. "पिता त्वं माता त्वं" (பிதா த்வம் மாதா த்வம்) என்கிறபடியே ஸர்வவித4 ப3ந்து4வும் அவனேயாகவேணுமென்றும், a 'உண்ணும் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம்' அவனேயாகவேணுமென்றும், அவனைப் பெறுகைக்கு உபாயம் அவனேயாகவேணுமென்றும் இவையிறே. (யதி3 நாஶம் ந விந்தே3த) இம்மநோரத2ம் விஷயாந்தரஸம்ஸர்க்க3த்தாலே விச்சே2த3த்தை அடையாதாகில். 'யதி3' என்கிறது விஷயாந்தரங்கள் ஸாம்ராஜ்யம் பண்ணுகிற ஸம்ஸாரத்தில் ப4க3வந்மநோரத2த்துக்கு விச்சே2த3மின்றிக்கேயொழிகையாகிற இது கிடைப்பதொன்றன்றிறே. ஒரு தே3ஶலாப4த்தாலே வந்த ஸுக2ஸித்3தி4யோபாதியும், ஸாம்ஸாரிகமான து3:க2நிவ்ருத்தியோபாதியும், ஜ்ஞாநஸித்3தி4யோபாதியும், இம்மநோரத2ஸித்3தி4யும் ப4க3வத்ப்ரஸாதா3யத்தம் என்று கருத்து. (தாவதாऽஸ்மி க்ருதீ ஸதா3) இம்மநோரத2மாத்ரத்தாலே க்ருதக்ருத்யனுகா நின்றேன் ; என்றுமொக்க க்ருதக்ருத்யனுகாநின்றேன். ஸ்வஸ்த2ஶரீரனான போதோடு ருக்3ணஶரீரனான போதோடு

a திருவாய் 6-7-1.



வாசியற 105. "आसीना वा शयाना वा तिष्ठन्तो यत्र कुत्र वा" (ஆஸீநா வா ஶயாநா வா திஷ்ட2ந்தோ யத்ர குத்ர வா) என்கிற ந்யாயத்தாலே ஸ்தி2திஶயநாத்3யவஸ்தா2 விஶேஷங்களோடு ஜன்மாந்தரங்களோடு வாசியற ப்ராப்ய ஸித்3தி4யிற்போலே இம்மநோரத2ஸித்3தி4மாத்ரத்தாலே க்ருதக்ருத்யனுகாநின்றேன் என்கை. கீழ் ஶ்லோகத்தில் ப்ராப்யஸித்3தி4யில் ஸாரஸ்யம் போலே ஜ்ஞானமாத்ரமே ரஸிக்கும் என்கிறது. இதில் 'அந்த ஸித்3தி4யும் வேண்டா; தத்ஸித்3த்4யர்த்த2மான மநோரத2மாத்ரமே அமையும்' என்று அந்த ஸாரஸ்யத்தினுடைய எல்லையைச் சொல்லுகிறது. ஸ்மர்த்தவ்யவிஷயஸாரஸ்யமிறே ஸ்ம்ருதிக்கு ஸாரஸ்யம். ஆகையாலே, ஸ்மர்த்தவ்யப4க3வத்3விஷய ஸாரஸ்யத்தினுடைய அவதி4யில்லாமையைச் சொல்லிற்றாய்த்து. a "நினைந்தென்னுள்ளே நின்று நெக்குக் கண்கள் அசும்பொழுக, நினைந்திருந்தே சிரமம் தீர்ந்தேன் நேமி நெடியவனே" என்று பெரியாழ்வார் அருளிச்செய்ததற்கு முதல் இதுவேயிறே. 106. "नाहन्तु सख्यो भजतोऽपि जन्तून् भजाम्यमीषामनुवृत्तिवृत्तये। यथाऽधनो लब्धधने विनष्टे तच्चिन्तयान्यन्निभृतो न वेद॥ एवं मदर्थोज्झितलोकवेदस्वानां हि वो मय्यनुवृत्तयेऽबलाः। मया परोक्षं भजता तिरोहितं मासूयितुं मार्हथ तत्प्रियं प्रियाः॥ न पारयेऽहं निरवद्यसंयुजां सुसाधु कर्तुं विबुधायुषाऽपि वः। या मा भजन् दुर्जरगेह-शृङ्खलां संवृश्च्य तद्वः प्रतियातु साऽधुना॥" (நாஹம் து ஸக்2யோ ப4ஜதோऽபி ஜந்தூந் ப4ஜாம்யமீஷாமநுவ்ருத்திவ்ருத்தயே। யதா2ऽத4நோ லப்3த4த4நே விநஷ்டே தச்சிந்தயாந்யந் நிப்4ருதோ ந வேத3॥ ஏவம் மத3ர்த்தோ2ஜ்ஜி2தலோகவேத3 ஸ்வாநாம் ஹி வோ மய்யநுவ்ருத்தயேऽப3லா:। மயா பரோக்ஷம் ப4ஜதா திரோஹிதம் மாஸூயிதும் மார்ஹத2 தத் ப்ரியம் ப்ரியா:। ந பாரயேऽஹம் நிரவத்3யஸம்யுஜாம் ஸுஸாது4 கர்த்தும் விபு3தா4யுஷாऽபி வ:। யா மா ப4ஜந் து3ர்ஜரகே3ஹஶ்ருங்க2லாம் ஸம்வ்ருஶ்ச்ய தத்3 வ: ப்ரதியாது ஸாऽது4நா॥) என்றிறே ஶேஷிவார்த்தையும். 12.

a பெரியாழ்-திரு 5-4-8.

**न कामकलुषं चित्तं मम ते पादयोः स्थितम्।**
**कामये वैष्णवत्वं तु सर्वजन्मसु केवलम्॥१३॥**

**13. ந காமகலுஷம் சித்தம் மம தே பாத3யோஸ்ஸ்தி2தம்।**
**காமயே வைஷ்ணவத்வந்து ஸர்வஜந்மஸு கேவலம்॥**

---

13. பதவுரை:— தே—தேவரீருடைய, பாத3யோ:—திருவடிகளில், ஸ்தி2தம்—நிலைநின்ற, மம சித்தம்—அடியேனுடைய மனம், காம கலுஷம் ந—மற்ற ஆசைகளினால் கலங்கவில்லை; ஸர்வ ஜந்மஸு—எல்லாப் பிறப்புகளிலும், வைஷ்ணவத்வம் து கேவலம் — வைஷ்ணவனாயிருக்கும் தன்மையை மட்டுமே, காமயே—ஆசைப்படுகிறேன்.

அவ:— ( ந காமகலுஷமித்யாதி3 ) இஶ்லோகத்தால் நான் உனக்கேயாயிருக்கும் பாரதந்த்ர்யஸுக2மே எனக்கு ப்ராப்யமென்கிறது. " கீழே, பரமபத3த்தை ப்ராப்யமென்றும், ஸம்ஸாரப4யத்தைப் போக்கித்தரவேண்டுமென்றும், 'இவை ஒன்றும் வேண்டா, ஜ்ஞானமே அமையும்' என்றும், 'அதுதானும் வேண்டா; மநோரத2மாத்ரமே அமையும்' என்றும், ப்ராப்யவிரோதி4யான ஜன்மத்தை அனுமதி பண்ணியும் இப்படி வ்யாஹதப4ாஷணம் பண்ணிற்றென் ? ஒன்றே புருஷார்த்த2மாக நிர்ணயித்து அபேக்ஷிக்கவேண்டாவோ ?" என்னில்: "அவை வ்யாஹதப4ாஷணமல்ல ; அடிமைக்கு ஏகாந்ததே3ஶமான பரமபத3த்தை ஆசைப்பட்டேன்; அடிமைக்கு விரோதி4யென்று ஸம்ஸாரத்தை வேண்டாமென்கிறது; உன்னுடைய போ4க்3யதாதிஶயத்தாலே த்வத்3விஷயஜ்ஞானமே அமையுமென்றேன்; ஜந்மத்தை இசைந்ததும் ஜ்ஞானத்தினுடைய ஸாரஸ்யாதிஶயத்தாலே; இவையெல்லாம் ப்ராஸங்கி3கம்; முதலிலே 'நமஸ்தேऽஸ்து' என்று சொன்ன பாரதந்த்ர்ய ஸுக2மே எனக்குக் காமவிஷயம்" என்று புருஷார்த்த2த்தை நிர்ணயித்துத் தலைக்கட்டுகிறது.



வ்யா:— (தே பாத3யோ: ஸ்தி2தம் மம சித்தம் ந காம கலுஷம்) நிருபாதி4கஶேஷியாய், நிரதிஶயபோ4க்3யனுயிருந்துள்ள உன்னுடைய திருவடிகளிலே ஸ்தி2தமான என்னுடைய சித்தம் வேறொன்றை ஸ்வயம் புருஷார்த்த2மாக நினைத்துக் கலங்குகிறதன்று. "ஜிதம் தே புண்டரீகாக்ஷ" என்கிறபடியே நான் இருந்தவிடத்தே வந்து முகம் காட்டி, ருசியைப் பிறப்பித்துப் புகுரநிறுத்தினபடியாலே நிருபாதி4கஶேஷித்வமும், நிரதிஶயபோ4க்3யத்வமும் எனக்கு அனுபூ4தமிறே. ( ஸ்தி2தம் ) ஸம்ஸ்தி2தம். 107. "**यस्याऽस्मि**" ( யஸ்யாऽஸ்மி ) என்கிறபடியே வந்தேறியன்றிக்கே, 108. "**गुणैर्दास्यमुपागतः**" (கு3ணைர் தா3ஸ்யமுபாக3த:) என்கிறபடியே அழகுக்குத் தோற்று இழிந்த என்னுடைய நெஞ்சாகையாலே விஷயாந்தரம் கண்டு போகுவதொன்றன்று என்கை. (மம சித்தம்) உ"என் மனனே" என்னுமாபோலே நெஞ்சினுடைய ப4வ்யதையைக் கண்டு உகக்கிறுன். (வைஷ்ணவத்வம் து) 'து'ஶப்3த3த்தாலே அவதா4ரணத்தைச் சொல்லுகிறது. வைஷ்ணவத்வமாவது,—ப4க3வத்பாரதந்த்ர்ய ஸுக2மாதல், தத3நுகூலவ்ருத்தியாதல். 109. "**एतमानन्दमयमात्मानमुपसंक्रामति**" (ஏதமாநந்த3மயமாத்மாநமுபஸங்க்ராமதி), 110. "**अनुसञ्चरन्**" (அநுஸஞ்சரந்) என்றும், 111. "**येन येन धाता गच्छति, तेन तेन सह गच्छति। छाया वा सत्त्वमनुगच्छेत्॥**" (யேந யேந தா4தா க3ச்ச2தி, தேந தேந ஸஹ க3ச்ச2தி। ச2ாயா வா ஸத்த்வமநுக3ச்சே2த்॥) என்றும் வேதா3ந்தங்கள் பாரதந்த்ர்யத்தையே புருஷார்த்த2மாகச் சொல்லிற்றினவிறே. 112. "**कुरुष्व मामनुचरं**" (குருஷ்வ மாமநுசரம்) என்னக்கடவதிறே. 13.

---

உ திருவாய் 1-1-1.

**தெலுங்கு லிபியில் அச்சிடப்பட்டிருக்கும் ஜிதந்தே ஸ்தோத்ர வ்யாக்2யாந ஸ்ரீகோஶத்தில், 13-வது ஶ்லோக வ்யாக்2யாநத்தின் கடைசியில் காணப்படும் அதி4கபாட2ம்**

(காமயே) ஸங்க3த்தளவன்று என்கை. "தவ பரிஜந பா4வம் காமயே" [ஸ்தோ-ர 47] என்று அருளிச்செய்ததுக்கும் முதலிறே இது. கேவலபத3த்தாலே இத்தலைக்கு ரஸித்திருக்கும்படியன்றிக்கே ஸ்ரக்சந்த3நாதி3களைப்போலே அத்தலைக்கே போ4க்3யமாயிருக்குமென்கை, ௨ "தனக்கேயாக எனைக்கொள்ளுமீதே எனக்கே கண்ணனை யான் கொள் சிறப்பே" என்னக்கடவதிறே. பாரதந்த்ர்யமே ஸ்வரூபமாயிருக்குமவனுக்கு அனுகூலவ்ருத்தியில் வந்தால் ஸ்வபா4வ நியதியில்லை; 111. "தத்3யதா2 தருணவத்ஸா வத்ஸம் வத்ஸோ வா மாதரம்" என்று ரக்ஷ்யரக்ஷகத்வநியதி கண்டிலோமிறே. "ப்4ராதா ப4ர்த்தா ச ப3ந்து4ஶ்ச பிதா ச மம ராக4வ:" என்று இளையபெருமாளும் ஒரு முறையிலே வ்யவஸ்தி2தராய் நின்றிலரிறே. தேரிலே ஏறினபோது ச2த்ரசாமரதா4ரிகளாய் நின்றாப்போலே, காட்டிலே போகிறபோதும் க2நித்ர பிடகாத4ரரானாரிறே. தலைநீர்ப்பாட்டிலே பரிமாறுகிற பிராட்டியும் "தே3வத்வே தே3வதே3ஹேயம் மநுஷ்யத்வே ச மாநுஷீ" என்று அபி4மதனுக்கு அனுரூபமான ரூபமே தனக்கும் ரூபமாகப் பரிக்3ரஹித்தாளிறே. 272. "யதா3 யதா3 ஹி கௌஸல்யா" என்கிறபடியே கௌஸலையாரும் ஒரு முறையிலே நின்றிலளிறே சக்ரவர்த்தியைக் குறித்து. (ஸர்வஜந்மஸு) நித்யனான ஆத்மாவுக்கு ஜந்மமாவது,— ஶரீர ஸம்யோக3மிறே. ஶேஷத்வரஸம் அவிச்சி2ந்நமாய்ச் செல்லுமாகில், ஜந்மபரம்பரைகளை அனுமதி பண்ணினாலும் விரோத4மில்லையென்கை. "ஸம்ஸாரேऽஸ்மிந் ப4யாவஹே மாம் பாஹி" [8] என்கிற இதுவும் தா3ஸ்யரஸத்துக்கு விரோதி4 என்றிறே. இத்தால் ஜந்மஸம்ப3ந்த4மறுகை ஸ்வயம்புருஷார்த்த2மன்றென்கை. அத2வா, (ஸர்வஜந்மஸு) 80. "அஜாயமாநோ ப3ஹுதா4 விஜாயதே" என்றும், "ப3ஹூநி மே வ்யதீதாநி ஜந்மாநி" என்றும் ஜக3த்3ரக்ஷணார்த்த2மாக அவதரிக்கும் அவதாரங்கள்தோறும் தொடர்ந்து அடிமை செய்யவேணும் என்றானென்றுமாம்.

---

௨ திருவாய் 2-9-4.



इत्येवमनया स्तुत्या स्तुत्वा देवं दिने दिने।
किङ्करोऽस्मीति चात्मानं देवायैवं निवेदयेत्॥ १४॥

14. இத்யேவமநயா ஸ்துத்யா ஸ்துத்வா தே3வம் தி3நே தி3நே।
கிங்கரோऽஸ்மீதி சாத்மாநம் தே3வாயைவம் நிவேத3யேத்॥

---

14. பதவுரை:— இதி ஏவம் — இம்மாதிரியாக, அநயா ஸ்துத்யா — இந்த ஸ்தோத்ரத்தாலே, தே3வம் — எம்பெருமானை, தி3நே தி3நே—தினந்தோறும், ஸ்துத்வா—துதித்து, கிங்கர: அஸ்மி இதி ச—(அடியேன்) உனக்கு அடிமையாக ஆகவேணும் என்று, தே3வாய—ஸர்வேஶ்வரன் பொருட்டு, ஏவம்—இம்மாதிரியாக, நிவேத3யேத்—(ஆத்மாவை) ஸமர்ப்பிக்கக்கடவன்.

அவ:—(இத்யேவமித்யாதி3) இதில் ஓடின பா4வவ்ருத்தியின்றிக்கே ஒழிந்தவன் இப்பாசுரத்தை நாடோறும் படித்து, 'அடியேனாகவேணும்' என்று ஆத்மஸமர்ப்பணத்தைப் பண்ணுவான்.

வ்யா:—(இத்யேவம்) 'இதி' என்றும், 'ஏவம்' என்றும் அர்த்த2த்தினுடையவும் ஶப்3த3த்தினுடையவும் ஸ்வரூபம் சொல்லுகிறது. இத்தால் அல்லாத ஜிதந்தைகளிற்காட்டில் இதுக்கு உண்டான ஏற்றம் சொல்லுகிறது. (அநயா ஸ்துத்யா) 1. "जितन्त इति मन्त्रेण" (ஜிதந்த இதி மந்த்ரேண) என்று ப்ரதே3ஶாந்தரத்திலே மந்த்ரமாகச் சொல்லிற்று; இங்கு ஸ்தோத்ரமாகச் சொல்லிற்று; இதுக்கு அடி என்? என்னில்: "மந்தாரம் த்ராயத இதி மந்த்ர:" என்கிறபடியே அநுஸந்தா4தாவை உத்3த4ரிப்பிக்குமென்றிட்டு மந்த்ரமென்கிறது. ஸ்தவ்யனாய், ஸ்தவப்ரியனான ஈஶ்வரன் திருச்செவி சாற்றினால் முகமலருமதாகையாலே ஸ்தோத்ரமென்கிறது. (தே3வம்) 113. "साक्षाद्देवः पुराणोऽसौ" (ஸாக்ஷாத் தே3வ: புராணோऽஸௌ) என்று நிருபாதி4க தே3வனாகச் சொல்லக்கடவதிறே. (தி3நே தி3நே) அர்த்த2

ஜ்ஞானம் உடையவனுக்கு இந்த ஶப்3தோ3ச்சாரணம் காதூ4சித்கமாகவுமாம்; இந்தப் பாசுரத்தைப் பற்றுமவனுக்கு நாள்தோறும் உச்சரிக்கவேணும். ( கிங்கரோऽஸ்மீத்யாதி3 ) நான் கிங்கரனாகவேணுமென்று ஸர்வேஶ்வரன் திருவடிகளிலே ஆத்மஸமர்ப்பணம் பண்ணுவான். ‘இவ்வித அநுஷ்டா2னத்துக்கு ப்ரயோஜனமென்?’ என்னில்: விலக்ஷணராயிருப்பார் சொன்ன பாசுரத்தை தே3ஹாத்மாபி4மானிகள் சொன்னாலும், அவர்களை நினைத்து, அவர்களைப்போலே ஈஶ்வரன் விஷயீகரிக்கும் என்று கருத்து. ‘எது போல?’ என்னில்: ஓரீற்று நல்ல கன்றிட்டுக் கறந்த பசு, பின்பு அசல் கன்றிட்டாலும் மறைத்துத் தோற்கன்றை மடுவிக்க, பின்புத்தைக் கன்றையே நினைத்துப் பால் சுரக்குமாபோலே.

பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்த

ஜிதந்தே ஸ்தோத்ர வ்யாக்யானம் முற்றிற்று.

பெரியவாச்சான் பிள்ளை திருவடிகளே ஶரணம்.





## ஜிதந்தே ஸ்தோத்ர வ்யாக்2யானத்திலுள்ள சில கடி2ன பத3ங்களுக்கு அர்த்த2ங்கள்

பக்கம்

(176) *ப்ரதிபாத3நம்*—அறிவித்தல். *பௌருஷேயம்*—புருஷனால் செய்யப்பட்டது. *து3ஷ்ப்ராபமான*—அடைய அரிதான.

(177) *ப்ரதிபாத்3யன்* — அறிவிக்கப்படுபவன். *லபி4த்து* — அடைந்து.

(178) *பரிச்சே2தி3க்க*—அளவிட. *அநந்யஸாத்4யன்*—மற்றொருவனால் அடையமுடியாதவன். *அநந்யார்ஹஶேஷபூ4தன்*—வேறொருவனுக்கு உரித்தானவனல்லாத அடிமை.

(179) *க்3ரஸ்தர்*—பீடிக்கப்பட்டவர்கள். *ப்ரவணர்*—ஈடுபட்டவர்கள். *ஶரண்யதை*—ஶரணமடையத்தகுந்தவனாயிருக்கும் தன்மை.

(180) *விஷயாந்தரம்*—வேறு விஷயங்கள்.

(181) *அடி*-காரணம். *பர்யாயம்*-ஒரே பொருளையுடைய சொல்.

(182) *முமுக்ஷோஸிஸ்ருக்ஷயா*-மோக்ஷத்தில் இச்சை2யுடையவனை ஸ்ருஷ்டிப்பதில் விருப்பத்தால்.

(183) *கர்மோபாதி4கம்*-கர்மத்தைக் காரணமாகக் கொண்டது. *நிருபாதி4க*—ஒரு காரணத்தால் ஏற்படாத; இயற்கையான. *மறித்து*—மறுபடியும். *பரித்ராணம்*—ரக்ஷணம். *ப்ரோத்ஸாஹனம்*—தூண்டுதல்.

(184) *அவிச்சி2ந்நம்*—இடைவிடாதது.

(185) *அஸங்க்2யாதம்*—கணக்கற்றது. *ஸுஶகம்*—ஸுலப4மாகச் செய்யத்தக்கது. *வ்யவஸிதர்*—தீர்மானத்தையுடையவர்.

(186) *வ்ருத்தம்*—நடத்தை. *பரது3:க்க2ாஸஹிஷ்ணுத்வம்*—பிறருடைய து3க்க2த்தை ஸஹியாமை.

(187) *அதி4க்ருதர்* — அதி4காரமுள்ளவர்கள். *கௌ3ணம்*—அமுக்2யம்.

(189) *ஸ்ரஷ்ட்ரந்தரவ்யாவ்ருத்தி* — மற்ற ஸ்ரஷ்டாக்களின் இன்மை.

(190) *நைரபேக்ஷ்யம்*—அபேக்ஷியாமலிருக்கும் தன்மை.

(192) *கர்மீப4வித்தவர்*—விஷயமானவர்.

(193) *அவதா4ரணம்*—ஏவகாரம்.

(194) *உக்தம்*—சொல்லப்பட்டது.

ஸ்தோ—29

(196) *ஸ்வரூபாந்யதா₂பா₄வம்* — ஸ்வரூபத்தில் மாறுபாடு. *தத்₃க₃ததோ₃ஷம்*—அவரிடமிருக்கும் தோ₃ஷம்.
(197) *அதீந்த்₃ரியம்*-இந்திரியங்களுக்கு எட்டாதது. *கோ₃சரம்*-விஷயம்.
(198) *தாத₃ர்த்₂யம்*—அவர்க்காயிருக்கும் இருப்பு. *அப்ராப்தம்*-தகாதது.
(200) *யுக₃பத்*—ஒரே சமயத்தில். *அக்ருத்யகரணம்*—செய்யத் தகாததைச் செய்தல்.
(201) *அக₄டிதம்* — செய்யமுடியாதது. *ப்ராபிக்க* — அடைய. *க்ருதக்ருத்யன்*—செய்யவேண்டியவற்றைச் செய்தவன்.
(203) *அண்ட₃ாந்தர்வர்த்தி*—அண்ட₃த்திற்கு உள்ளிருப்பவன்.
(204) *ப்ரதா₄நாத் அதி₄கம்*—ப்ரக்ருதியைவிட மேலானது.
(206) *ஶரீராநுப₃ந்தி₄*—ஶரீரத்தைச் சேர்ந்தது. *ஶேஷத்வம்*—அடிமையாயிருக்கும் தன்மை.
(207) *ந்யஸ்தப₄ரன்*—பா₄ரத்தை வைத்தவன்.
(208) *உடலான*—ஸாத₄னமான. *அந்யபரதை*—மற்றவைகளில் ஈடுபட்டிருக்கும் தன்மை. *கரணங்கள்*—இந்த்₃ரியங்கள்.
(209) *து₃ரிதங்கள்*—பாபங்கள்.
(210) *ஸமுச்சயிக்கிறது*-கூட்டுகிறது. *தலைக்கட்டுதல்*-முடித்தல். *அநுஷ்டே₂யம்*—அனுஷ்டிக்கவேண்டியது.
(212) *வைமுக்₂யம்*—விமுக₂னுயிருக்கும் தன்மை. *த்யாஜ்யம்*—கைவிடத்தக்கது. *உபாதே₃யம்* — எடுத்துக்கொள்ளத் தக்கது.
(214) *விலக்ஷணமான*—மேலான.
(215) *ஸந்நிஹிதம்*—அருகிலிருப்பது. *அத்₄யவஸாயம்*-உறுதி.
(217) *ஸ்வவஶர்*—ஸ்வதந்த்ரர். *ஸ்வாபம்*—தூக்கம்.
(218) *நசை*-ஆசை. *ப்ரஸாதா₃யத்தம்*-அருளாலே ஏற்பட்டது. *ருக்₃ணஶரீரன்*—வியாதியுள்ள சரீரத்துடன் கூடியவன்.
(219) *ஸாரஸ்யம்*—இனிமை. *அவதி₄*—எல்லை. *இறே*—அல்லவா. *ஒபாதி*—போல.
(220) *வ்யாஹதபா₄ஷணம்*—மாறுன பேச்சு.
(221) *ஶேஷித்வம்*—ஸ்வாமியாயிருக்கும் தன்மை. *பு₄வ்யதை*—அடங்கியிருக்கும் தன்மை.
(223) *ஸ்தவ்யன்*—ஸ்தோத்ரம் செய்யத்தக்கவன்.
(224) *காதா₃சித்கம்*—சிலசமயங்களிலுள்ளது.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமத்க்ருஷ்ணஸூரயே நம:

    

# ஸ்தோத்ரரத்ந வ்யாக்யான ப்ரமாணத்திரட்டு



1. ஏஷ ஸம்ப்ரஸாதோ₃ऽஸ்மாச் சா₂ரீராத் ஸமுத்தா₂ய பரம்
ஜ்யோதிருபஸம்பத்₃ய ஸ்வேந ரூபேணாபி₄நிஷ்பத்₃யதே।

[இந்த ஜீவன், இந்த ஶரீரத்திலிருந்து கிளம்பி, பரஞ்சோதியான நாராயணனை அடைந்து, ஸ்வரூபமலர்ச்சிபெறுகிறுன்.]

2. ததா₃ வித்₃வாந் புண்யபாபே விதூ₄ய
நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி

[பரமபுருஷனை ஸாக்ஷாத்கரித்தவுடன் ப்₃ரஹ்மஜ்ஞானியானவன், புண்யபாபங்களை விட்டு, ப்ரக்ருதிஸம்ப₃ந்த₂ மற்றவனாய், (புருஷோத்தமனுடன்) மேலான ஸாம்யத்தை அடைகிறுன்.]

3. ஸ்தோத்ரம் நாம கிமாமநந்தி
கவயோ யத்₃யந்யதீ₃யாந் கு₃ணாந்
அந்யத்ர த்வஸதோऽதி₄ரோப்ய
ப₂ணிதிஸ் ஸா தர்ஹி வந்த்₄யா த்வயி।
ஸம்யக் ஸத்யகு₃ணாऽபி₄வர்ணநமதோ₂
ப்₃ரூயு: கத₂ம் தாத்₃ருஶீ
வாக் வாசஸ்பதிநாऽபி ஶக்யரசநா
த்வத்ஸத்₃கு₃ணார்ணோநிதௌ₄॥

[ஸ்தோத்ரமென்று கவிகள் எதைச் சொல்லுகிறுர்கள்? ஒருவனுடைய கு₃ணங்களை அவைகளில்லாதவனுன மற்றொருவனிடம் ஏறிட்டுச்சொல்லுவதே (ஸ்தோத்ரம்)

1. சா₂ந் 8-12-2. 2. முண்ட₂கம் 3-1-3. 3. ஸ்ரீஸ்தவம்-3.

எனில்,—அம்மாதிரியான ஸ்தோத்ரம் உன்னிடம் முடியாது; உள்ள குணங்களை நன்ருக வர்ணிப்பதே (ஸ்தோத்ரம்) என்று சொல்லுவார்களாகில்,—உன்னுடைய கல்யாணகுணக்கடல் விஷயத்தில் ப்₃ருஹஸ்பதியாலும் அப்படிப்பட்ட ஸ்தோத்ரம் செய்ய எப்படி முடியும்?]

4. அந்யத்ராதத்₃கு₃ண்ணோக்திர் ப₄க₃வதி ந
தது₃த்கர்ஷசௌர்யை: பரேஷாம்
ஸ்துத்யத்வாத் யாவதர்த்த₂ாப₂ணிதிரபி
தத₂ா தஸ்ய நிஸ்ஸீமகத்வாத்।

[இல்லாத விஷயங்களை ஏறிட்டுச்சொல்லுவது ப₄க₃வானைத் தவிர மற்றவர்கள் விஷயத்தில்; ப₄க₃வத்₃விஷயத்திலல்ல; அவனுடைய பெருமைகளைத் திருடி மற்றவர்களைத் துதிக்க வேண்டியிருக்கிறபடியால். உள்ள விஷயங்களைச் சொல்லுவதும் (ப₄க₃வான் விஷயத்தில்) முடியாது; ப₄க₃வானுடைய பெருமைகள் எல்லையற்றவையாகையாலே.]

5. யதோ வாசோ நிவர்த்தந்தே।
அப்ராப்ய மநஸா ஸஹ।
ஆநந்த₃ம் ப்₃ரஹ்மணோ வித்₃வாந்।
ந பி₃பே₄தி குதஶ்சநேதி ॥

[எந்த ப்₃ரஹ்மத்தினிடமிருந்து, மனத்துடன் கூடிய வாக்குக்கள், (அதை) அளவிட்டறியாமல் திரும்புகின்றனவோ, அந்தப் பரமாத்மாவின் ஆநந்த₃த்தை அறிந்தவன் எதனிடமும் ப₄யப்படமாட்டான்.]

6. யஸ்யாமதம் தஸ்ய மதம் மதம் யஸ்ய ந வேத₃ ஸ:।
அவிஜ்ஞாதம் விஜாநதாம் விஜ்ஞாதமவிஜாநதாம் ॥

[எவனுக்கு ப்₃ரஹ்மம் (அளவிட்டு) அறியப்படவில்லையோ, அவனுக்கு (அது) அறியப்பட்டதாகிறது. எவனுக்கு (ப்₃ரஹ்மம்) அறியப்பட்டதாகிறதோ, அவன் (அதை) அறிய

4. ஈ-ஸ்த 1-19. 5. தை-ஆ 9-1. 6. கேந 2-3.



வில்லை. (அளவிட்டு) அறிந்தவர்களுக்கு அறியப்படாததாகவும், (அளவிட்டு) அறியாதவர்களுக்கு அறியப்பட்டதாகவுமிருக்கிறது (ப்₃ரஹ்மம்).]

7. பூ₄தார்த்தே₂ கதமா ஸ்துதி:

[உண்மையாக உள்ள விஷயத்தில் ஸ்துதி எப்படி முடியும்?]

8. ந ஸமர்த்தா₂ஸ் ஸுரா: ஸ்தோதும்
த்வாமநந்யப₄வம் விபு₄ம்

[ஸர்வவ்யாபியும், ஒருவரிடத்திலிருந்தும் உண்டாகாதவனுமான உன்னை ஸ்தோத்ரம் செய்ய தே₃வர்களும் ஸமர்த்த₂ரல்லர்.]

9. ஸ்தவ்ய: ஸ்தவப்ரிய:

[ஸ்தோத்ரம் செய்யத்தக்கவன்; ஸ்துதியை விரும்புபவன்.]

10. த₄ர்மார்த்த₂காமமோக்ஷாக்₂யா:
புருஷார்த்த₂ா உதா₃ஹ்ருதா:।
இத₃ம் சதுஷ்டயம் யஸ்மாத்
தஸ்மாத் கிம் கிமித₃ம் வச:॥

[த₄ர்மம், அர்த்த₂ம், காமம், மோக்ஷமென்று புருஷார்த்த₂ங்கள் சொல்லப்பட்டுள்ளன. இந்த நான்கும் எவனிடத்திலிருந்து அடையப்படுகின்றனவோ, அவனைக்குறித்து 'அவனால் என்ன ப்ரயோஜனம்?' என்னும் இந்த வார்த்தை ஏன் சொல்லப்படுகிறது?]

11. தத₃ஸ்ய த்ரிவித₄ஸ்யாऽபி து₃:க்க₂ஜாதஸ்ய வை மம।
க₃ர்ப்ப₄ஜந்மஜராத்₃யேஷு ஸ்தா₂நேஷு ப்ரப₄விஷ்யத: ॥
நிரஸ்தாதிஶயாஹ்லாத₃ ஸுக₂ப₄ாவைகலக்ஷணம்।
பே₄ஷஜம் ப₄க₃வத்ப்ராப்திரேகாந்தாத்யந்திகீ மதா ॥

8. வி-பு. 5-7-49. 9 விஷ்ணு. ஸஹஸ்ர. 10. வி-பு. 1-18.22. ப்ரஹ்லாத₃வாக்யம். 11. வி-பு. 6-5-58 & 59.

[க3ர்ப்ப4ம், பிறப்பு, கிழத்தனம் முதலிய அவஸ்தை2களில் உழலும் என்னுடைய (ஆத்4யாத்மிகம், ஆதி4தை3விகம் ஆதி4 பௌ4திகம் என்னும்) மூன்றுவித4மான து3:க்க2ஸமூஹத்திற்கு, தனக்கு மேலில்லாத ஆநந்த3ரூபமான ஸுக2மாயிருக்கையே லக்ஷணமாக உடையதும், துன்பமற்றதும், முடிவற்றதுமான ப4க3வத்ப்ராப்தியே மருந்தாக எண்ணப்படுகிறது.,]

12. 116-ஐப் பார்க்கவும்.

13. அநந்யசேதாஸ் ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யஶ:।
தஸ்யாऽஹம் ஸுலப4: பார்த்த2! நித்யயுக்தஸ்ய யோகி3ந: ॥

[அர்ஜுனா! வேறொன்றிலும் மனத்தைச் செலுத்தாதவனாக, எவனொருவன் தினந்தோறும் எப்பொழுதும் என்னை நினைக்கிறானோ, என்னுடைய நித்யயோக3த்தில் விருப்பமுள்ள யோகி3யாகிய அவனுக்கு நான் ஸுலப4னாகிறேன்.]

14. ப்ரத4ாநக்ஷேத்ரஜ்ஞபதிர் கு3ணேஶ:

[ப்ரக்ருதிக்கும் ஜீவனுக்கும் ஸ்வாமி; கல்யாணகு3ணங்களை உடையவன்.]

15. ஜ்ஞாஜ்ஞௌ த்3வாவஜாவீஶநீஶௌ

[(பரமாத்மாவும் ஜீவனும்) ஸர்வஜ்ஞனாகவும், அஜ்ஞனாகவுமிருக்கிறார்கள்; ஈஶ்வரனாகவும், அநீஶ்வரனாகவும் இருக்கிறார்கள்.]

16. தமீஶ்வராணாம் பரமம் மஹேஶ்வரம்

[ஈஶ்வரர்களுக்கும் மேலான மஹேஶ்வரனான அவனை...]

17. தா3ஸோऽஹம் வாஸுதே3வஸ்ய
தே3வதே3வஸ்ய ஶார்ங்கி3ண:।

13. கீ3தை. 8-14. 14. ஶ்வே 6-16. 15. ஶ்வே 1-9.
16. ஶ்வே 6-7. 17. புண்ட3ரீகஸம்வாத3ம்; நாரத3வாக்யம்.



ஶங்க2சக்ரக3த3ாபாணேஸ்
த்ரைலோக்யஸ்யைகசக்ஷுஷ: ॥

[தே3வதே3வனும், ஶார்ங்க3மென்னும் வில்லையுடையவனும், ஶங்க2ம், சக்ரம், க3தை3 இவைகளைக் கையிலே உடையவனும், மூவுலகிற்கும் ஓர் கண்ணாயிருப்பவனுமான வாஸுதே3வனுக்கு நான் அடிமை.]

18. தா3ஸபூ4தாஸ் ஸ்வதஸ் ஸர்வே ஹ்யாத்மாந: பரமாத்மந:।

[பரமாத்மாவுக்கு, எல்லா ஆத்மாக்களும் இயற்கையாகவே அடிமைப்பட்டவர்களன்றோ.]

19. தா3ஸோऽஹம் கோஸலேந்த்3ரஸ்ய
ராமஸ்யாऽக்லிஷ்டகர்மண:।
ஹநுமாந் ஶத்ருஸைந்யாநாம்
நிஹந்தா மாருதாத்மஜ: ॥

[கோஸலதே3ஶத்துக்கு அதி4பதியும், பெருங்காரியங்களையும் எளிதாகச் செய்து முடிப்பவனுமான ராமனுக்கு, ஶத்ருஸைன்யங்களை அழிப்பவனும், வாயுவின் புத்ரனும், ஹனுமான் என்னும் பெயரை உடையவனுமான நான் தா3ஸன்.]

20. யஸ்யாத்மா ஶரீரம்

[எந்தப்பரமாத்மாவுக்கு ஆத்மா ஶரீரமோ...]

21. யஸ்யாக்ஷரம் ஶரீரம்

[எவனுக்கு ஜீவன் ஶரீரமோ...]

22. அந்த: ப்ரவிஷ்டஶ் ஶாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா

[ஸர்வாந்தர்யாமியான புருஷோத்தமன் ஜனங்களை உள் நுழைந்தவனாய் நியமிக்கிறான்.]

18. ஹாரீதஸ்ம்ருதி; ஈஶ்வரஸம்ஹிதை - சிவவாக்யம்.
19. ரா-ஸு 42-35. 20. ப்3ருஹ 5-7-22. 21. ஸுப3ால 7
22. யஜு. ஆர 3-11-21.

23. பூ: ப்ராணிநஸ் ஸர்வ ஏவ கு₃ஹாஶயஸ்ய
அஹந்யமாநஸ்ய விகல்மஷஸ்ய

[எல்லாப் பிராணிகளும், ஹ்ருத₃யகு₃ஹையில் ஶயனித்திருப்பவனும், அழியாதவனும், தோ₃ஷமற்றவனுமான பரமாத்மாவுக்கு இருப்பிடம்.]

24. யாநி மூர்த்தாந்யமூர்த்தாநி யாந்யத்ராந்யத்ர வா க்வசித்।
ஸந்தி வை வஸ்துஜாதாநி தாநி ஸர்வாணி தத்₃வபு:॥

[உருவமுள்ளவையாயும், உருவமற்றவையாயும், இங்கும் எங்கும் ஒரு சமயத்திலிருக்கும் வஸ்துஸமூஹங்களெல்லாம் அந்தப் பரமாத்மாவுக்கு ஶரீரம்.]

25. யேந யேந தா₄தா க₃ச்ச₂தி
தேந தேந ஸஹ க₃ச்ச₂தி।
தத் யதா₂ தருணவத்ஸா வத்ஸம் வத்ஸோ வா
மாதரம் சா₂யா வா ஸத்வமநுக₃ச்சே₂த் ததா₂ப்ரகாரம்॥

[இளங்கன்றையுடைய பசு கன்றையும், கன்று பசுவைவும் (அல்லது குழந்தை தாயையும்), நிழல் பிராணியையும் எப்படிப் பின்தொடர்கின்றனவோ அப்படியே எப்படி எப்படிப் பரமபுருஷன் செல்லுகிறானோ, அப்படி அப்படியே (முக்தனும்) கூடப்போகிறான்.]

26. ஸோऽஶ்நுதே ஸர்வாந் காமாந்
ஸஹ ப்₃ரஹ்மணா விபஶ்சிதா

[முக்தன் எல்லாக் கல்யாணகு₃ணங்களையும், ஸர்வஜ்ஞனான ப்₃ரஹ்மத்துடன் கூட அனுப₄விக்கிறான்.]

27. ஜிதந்தே (1-13).

28. ப₄வாம்ஸ்து ஸஹ வைதே₃ஹ்யா கி₃ரிஸாநுஷு ரம்ஸ்யதே॥
அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்₃ரதஸ் ஸ்வபதஶ்ச தே॥

23. ஆபஸ்தம்ப₃ஸூத்ரம் 22-1. 24. வி-பு. 1-22-86. 25. பரம ஸம்ஹிதை. 26 தை-ஆ 1-2. 28 ரா-அ 31-25. லக்ஷ்மணவாக்யம்.



[நீர் வைதே₃ஹியுடன் கூட மலைத்தாழ்வரைகளில் விளையாடுவீர்; அடியேன் நீர் விழித்துக்கொண்டிருக்கும்போதும், தூங்கும்போதும் உமக்கு எல்லா அடிமைகளையும் செய்வேன்.]

29. விஜ்ஞாநஸாரதி₂ர் யஸ்து மந: ப்ரக்₃ரஹவாந் நர:।
ஸோத்₄வந: பாரமாப்நோதி தத்₃ விஷ்ணோ: பரமம் பத₃ம்॥

[எவனொருவன் நல்ல ஞானத்தை ஸாரதி₂யாகவும், மனத்தைக் கடிவாளமாகவும் கொண்டிருக்கிறானோ, அவன் ஸம்ஸாரத்திற்கு அக்கரையான விஷ்ணுவினுடைய பரம பத₃த்தை அடைகிறான்.]

30. ஜிதந்தே (1-4).

31. ந ஹி மே ஜீவிதேநார்த்தோ₂
நைவார்த்தை₂ர் ந ச பூ₄ஷணை:।
வஸந்த்யா ராக்ஷஸீமத்₄யே
விநா ராமம் மஹாரத₂ம்॥

[மஹாரத₂னான ராமனை விட்டு ராக்ஷஸிகள் நடுவில் வசிக்கும் எனக்கு உயிரினால் ப்ரயோஜனமில்லை; பொருள்களினால் ப்ரயோஜனமில்லை; ஆப₄ரணங்களால் ப்ரயோஜனமில்லை.]

32. ப்₃ரஹ்மவிதா₃ப்நோதி பரம்

[ப்₃ரஹ்மத்தை அறிபவன் (தியானிப்பவன்)மேலான பொருளை (ப்₃ரஹ்மத்தை) அடைகிறான்.]

33. ஆத்மா வா அரே த்₃ரஷ்டவ்யஶ்
ஶ்ரோதவ்யோ மந்தவ்யோ நிதி₃த்₄யாஸிதவ்ய:

[கேட்கத்தக்கதும், நினைக்கத்தக்கதுமான ஆத்மா தியானிக்கத்தக்கது; பார்க்கத்தக்கது.]

29. கட₂ 1-3.9. 31. ரா-ஸு 26-5. ஸீதாவாக்யம்.
32. தை-ஆ 1. 33. ப்₃ருஹ 6-5-6.

34. நாயமாத்மா ப்ரவசநேந லப்4யோ
ந மேத4யா ந ப3ஹுநா ஶ்ருதேந ।
யமேவைஷ வ்ருணுதே தேந லப்4யஸ்
தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம் ॥

[இந்தப் பரமாத்மா (ப4க்தியற்ற) ஶ்ரவணத்தினுலும், மனனத்தினுலும், தியானத்தினுலும் அடையத்தக்கவனல்லன். எவனை இப்பரமபுருஷன் வரிக்கிருனே, அவனுலேயே அடையத்தக்கவன்; அவனுக்கு இந்தப் பரமாத்மா தன்னுடைய தி3வ்யமங்க3ளவிக்3ரஹத்தை (ஸ்வரூபத்தை) காட்டுகிருன்.]

35. பி4த்3யதே ஹ்ருத3யக்3ரந்தி2ஶ்
சி2த்3யந்தே ஸர்வஸம்ஶயா: ।
க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி
தஸ்மிந் த்3ருஷ்டே பராவரே ॥

[மேலானவர்களிலும் மேலானவனுன அந்தப் பரமாத்மா பார்க்கப்பட்டவுடன், இவனுடைய (ராக3ம், த்3வேஷம் முதலிய) ஹ்ருத3யக்3ரந்தி2கள் பிளக்கின்றன; எல்லா ஸம்ஶயங்களும் சிதறுகின்றன; கர்மங்களும் அழிகின்றன.]

36. ப4க்த்யா த்வநந்யயா ஶக்ய அஹமேவம்விதோ4ऽர்ஜுந ।
ஜ்ஞாதும் த்3ரஷ்டும் ச தத்த்வேந ப்ரவேஷ்டும் ச பரந்தப ॥

[அர்ஜுனு! எதிரிகளை அழிப்பவனே! ஒரு ப2லனை எதிர்பாராத ப4க்தியினுலேயே இம்மாதிரியான நான், உண்மையாக அறிவதற்கும், பார்ப்பதற்கும், நுழைவதற்கும் தக்கவன்.]

37. ஸமஸ் ஸர்வேஷு பூ4தேஷு மத்3ப4க்திம் லப4தே பராம்

[ஸர்வப்ராணிகளிடமும் (பற்றற்றிருக்கும் விஷயத்தில்) ஸமமாயிருப்பவன் என்னிடம் மேலான ப4க்தியை அடைகிருன்.]

34. கட2 1-2-23. 35. முண்ட3 2-2-9. 36. கீ3தை 11-54.
37. கீ3தை 18-54.



38. யோ ப்3ரஹ்மாணம் வித3த4ாதி பூர்வம்
யோ வை வேதா3ம்ஶ்ச ப்ரஹிணோதி தஸ்மை ।
தம் ஹ தே3வமாத்மபு3த்3தி4ப்ரஸாத3ம்
முமுக்ஷுர் வை ஶரணமஹம் ப்ரபத்3யே ॥

[எவன் பிரமனை முன் படைத்தானே, எவன் வேத3ங்களையும் அவனுக்கு உபதே3ஶித்தானே, அப்படிப்பட்ட தே3வனும், தன் விஷயமான ஞானத்தை ப்ரகாசிப்பிப்பவனுமான பரமபுருஷனை, மோக்ஷமடைய விரும்பும் நான் ஶரணமடைகிறேன்.]

39. ந்யாஸமாஹுர் மநீஷிணோ ப்3ரஹ்மாணம்

[பெரியோர்கள் பரமாத்மாவை ந்யாஸமென்று சொல்லுகிருர்கள்.]

40. ந்யாஸ இதி ப்3ரஹ்மா

[ந்யாஸமென்பது ப்3ரஹ்மம்.]

41. தஸ்மாந் ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தமாஹு:

[ஆகையால் ந்யாஸத்தை (ஶரணுக3தியை) இந்தத் தபஸ்ஸுக்களுள் மேலானதாகச் சொல்லுகிருர்கள்.]

42. தே3வா வை யஜ்ஞாத் ருத்3ரமந்தராயந் । ஸ ஆதி3த்யா நந்வாக்ரமத । தே த்3விதை3வத்யாந் ப்ராபத்3யந்த । தாந் ந ப்ரதிப்ராயச்ச2ந் । தஸ்மாத3பி வத்4யம் ப்ரபந்நம் ந ப்ரதிப்ரயச்ச2ந்தி ॥

[தே3வர்கள் யஜ்ஞத்தில் ருத்3ரனுக்கு ஹவிர்ப்ப4ாக3ம் கொடுக்க மறுத்தார்கள்; ருத்3ரன் தே3வர்களைக் கொல்லத் தொடங்கினுன்; அவர்கள் அஶ்விநீதே3வதைகளை ஶரணம் புகுந்தார்கள்; அஶ்விநீதே3வர்கள் அவர்களைக் காட்டிக் கொடுக்கவில்லை; ஆகையால் ஶரணமடைந்தவன் கொல்லத் தகுந்தவனுயிருந்தாலும் அவனைக் காட்டிக்கொடுப்பதில்லை.]

38. ஶ்வே 6-18. 39. தை-நா-50. 40. தை-நா-49.
41. தை-நா-50. 42. யஜு-காண்ட3ம் 6-5.

தே3வா வை த்வஷ்டாரமஜிக4ாம்ஸந்। ஸ பத்நீ: ப்ராபத்3யத। தம் ந ப்ரதிப்ராயச்ச2ந்। தஸ்மாத3பி வத்4யம் ப்ரபந்நம் ந ப்ரதிப்ரயச்ச2ந்தி ||

[தே3வர்கள் (ஹவிர்ப்ப4ாக3ம் கேட்ட) த்வஷ்டாவைக் கொல்லவிரும்பினுர்கள்; அவன் தே3வபத்னிகளை ஶரண மடைந்தான்; அவர்கள் அவனைக் காட்டிக்கொடுக்கவில்லை; ஆகையால் ஶரணமடைந்தவன் கொல்லத்தகுந்தவனுயினும் அவனைக் காட்டிக்கொடுப்பதில்லை.]

43\. ஸ ப்4ராதுஶ் சரணௌ கா3ட4ம் நிபீட்3ய ரகு4நந்த3ந:।
ஸீதாமுவாசாதியஶா ராக4வஞ்ச மஹாவ்ரதம் ||

[ரகு4குலத்தை உகப்பிப்பவனும், மிகுந்த கீர்த்தியை உடையவனுமான அந்த லக்ஷ்மணன், தமையனின் திருவடிகளை நன்ருகப் பிடித்துக்கொண்டு ஸீதையையும், (ஆஶ்ரிதஸம்ரக்ஷணமான) பெரிய விரதத்தையுடைய ராக4வனையும் பார்த்துச் சொன்னுன்.]

44\. ஸக்ருதே3வ ப்ரபந்நாய தவாஸ்மீதி ச யாசதே।
அப4யம் ஸர்வபூ4தேப்4யோ த3த3ாம்யேதத்3 வ்ரதம் மம ||

[ஒரு தடவை ஶரணமடைந்தவன் பொருட்டும், 'உனக்கு அடியேனுகிறேன்' என்று பிரார்த்திப்பவன் பொருட்டும், எல்லா ப்ராணிகளிடத்தினின்றும் அப4யமளிக்கிறேன். இது எனக்கு விரதம்.]

45\. ஸோऽஹம் த்வாம் ஶரணமபாரமப்ரமேயம்
ஸம்ப்ராப்த: பரமபத3ம் யதோ ந கிஞ்சித்

[எவனைக் காட்டிலும் மேலான ப்ராப்யமில்லையோ அப்படிப் பட்டவனும், எல்லையற்றவனும், அளவிடமுடியாதவனுமான உன்னை, இப்படிப்பட்ட நான் ஶரணமடைந்தேன்.]

43\. ரா-அ 31-2. 44. ரா·யு 18-33. 45. வி·பு 5-23-47.



46\. தே3வர்ஷிபூ4தாப்தந்ருணும் பித்ருணும்
ந கிங்கரோ நாயம் ருணீ ச ராஜந்।
ஸர்வாத்மநா யஶ் ஶரணம் ஶரண்யம்
நாராயணம் லோககு3ரும் ப்ரபந்ந: ||

[அரசனே! எவனெருவன், ஶரணமடையத் தகுந்தவனும், லோககு3ருவுமான நாராயணனை எல்லா வித4த்திலும் ஶரண மடைந்தானே, அவன் தே3வர்களுக்கும், ரிஷிகளுக்கும், பூ4தங்களுக்கும், ப3ந்து4க்களுக்கும், பித்ருக்களுக்கும் அடிமையல்லன்; கடன்பட்டவனுமல்லன்.]

47\. மாமேவ யே ப்ரபத்3யந்தே மாயாமேதாம் தரந்தி தே

[எவர்கள் என்னையே ஶரணமடைகிருர்களோ அவர்கள் இந்த ப்ரக்ருதியைத் தாண்டுகிருர்கள்.]

48\. தமேவ ஶரணம் க3ச்ச2 ஸர்வப4ாவேந ப4ாரத

[ப4ரதகுலத்துதித்தவனே! எல்லா வித4த்திலும் அந்த ப4க3வானையே ஶரணமடை.]

49\. ஸர்வத4ர்மாந் பரித்யஜ்ய மாமேகம் ஶரணம் வ்ரஜ।
அஹம் த்வா ஸர்வபாபேப்4யோ மோக்ஷயிஷ்யாமி மா ஶுச: ||

[(ப2லஸாத4னமான) எல்லா த4ர்மங்களையும், வாஸனையுடன் விட்டு, என்னை ஒருவனையே உபாயமாக அடை; நான் உன்னை எல்லாப் பாபங்களினின்றும் விடுவிக்கிறேன்; து3க்கி2க்காதே.]

50\. தாவதா3ர்த்திஸ் ததா2 வாஞ்சா2 தாவந்மோஹஸ்
ததா2ऽஸுக2ம் ;
யாவந்ந யாதி ஶரணம் த்வாமஶேஷாக4நாஶநம் ||

[எல்லாப் பாபங்களையும் போக்கடிக்கும் உன்னை எதுவரையில் ஶரணமடையவில்லையோ, அதுவரையிலேயே (செல்

46\. ப4ாக3வதம் 11-5-41. 47. கீ3தை 7-14. 48. கீ3தை 18-62.
49\. கீ3தை 18-66. 50. வி-பு 1-9-73.

வத்தை இழந்ததினுலேற்படும்) வருத்தம்; அதுவரையிலேயே (செல்வம் வேண்டுமென்னும்) ஆசை; அதுவரையிலேயே (ஆத்மப்ராப்தியின்மையினுலேற்படும்) மோஹம்; அதுவரையிலேயே (ப$_4$க$_3$வானை அடையாததினுலேற்படும்) துன்பம். (ஆர்த்தன், அர்த்த$_2$ார்த்தி$_2$, கைவல்யநிஷ்ட$_2$ன், ப$_4$க$_3$வத்ப்ராப்திகாமன் என்னும் நான்கு வித$_4$மான அதி$_4$காரிகளுக்கும் ப்ரபத்தியே ப$_2$லஸாத$_4$னம் என்று தாத்பர்யம்.)]

**51. கர்ணே ஸ்ப்ருஷ்டே கடிம் சாலயதி**

[காதைத் தொட்டால் இடுப்பை அசைக்கிருன்.]

**52. ஆசார்யதே$_3$வோ ப$_4$வ**

[ஆசார்யனை தெய்வமாக உடையவனுக ஆவாயாக.]

**53. நம ருஷிப்$_4$யோ மந்த்ரக்ருத்$_3$ப்$_4$ய:**

[மந்த்ரத்தை ஸாக்ஷாத்கரித்த ரிஷிகளுக்கு நமஸ்காரம்.]

**54. ஸ ஹி வித்$_3$யாதஸ் தம் ஜநயதி। தச்ச்$_2$ரேஷ்ட$_2$ம் ஜந்ம॥**

[ஆசாரியனன்ருே வித்$_3$யையினுல் சிஷ்யனைப் பிறப்பிக்கிருன்; அது மேலான ஜன்மம்.]

**55. மந்த்ரே தத்$_3$தே$_3$வதாயாஞ்ச தத$_2$ா மந்த்ரப்ரதே$_3$ கு$_3$ரௌ।**
**த்ரிஷு ப$_4$க்திஸ் ஸதா$_3$ கார்யா ஸா ஹி ப்ரத$_2$மஸாத$_4$நம்॥**

[மந்திரம், அதில் சொல்லப்படும் தே$_3$வதை, மந்த்ரோபதே$_3$ஶம் செய்த ஆசாரியன் இம்மூவரிடத்திலும் எப்போதும் ப$_4$க்தி செய்யவேண்டும்; அதுவன்ருே (ப$_2$லஸித்$_3$தி$_4$க்கு) முதல் உபாயம்.]

**56. அபி$_4$வந்த்$_3$ய கு$_3$ரூநாதௌ$_3$ ஶிஷ்யதீ$_4$பத்$_3$மிநீரவீந்**

[சிஷ்யர்களுடைய பு$_3$த்$_3$தி$_4$யாகிய தாமரைக்கு ஸூர்யன் போன்றவர்களான ஆசாரியர்களை முதலில் நமஸ்கரித்து.]

51. பழமொழி. 52. தை-ஶீக்ஷா-11. 53. யஜு-ஆர. ப்ர-4.
54. ஆப-ஸூ 1-1-6. 55. விஷ்ணுதத்வம். 56. மீமாம்ஸாகாரிகை.



**57. யத$_2$ா க$_2$நந் க$_2$நித்ரேண நரோ வார்யதி$_4$க$_3$ச்ச$_2$தி।**
**தத$_2$ா கு$_3$ருக$_3$தாம் வித்$_3$யாம் ஶுஶ்ரூஷுரதி$_4$க$_3$ச்ச$_2$தி॥**

[மனிதன் எப்படி மண்வெட்டியால் (பூ$_4$மியை) வெட்டித் தண்ணீரை அடைகிருனே, அப்படியே கு$_3$ருவிடமிருக்கும் வித்$_3$யையை குருஸேவை செய்பவன் அடைகிருன்.]

**58. நமோ ப$_4$க$_3$வதே தஸ்மை வ்யாஸாயாமிததேஜஸே।**
**யஸ்ய ப்ரஸாத$_3$ாத் வக்ஷ்யாமி நாராயணகத$_2$ாமிமாம்॥**

[எவருடைய அருளினுல் இந்த நாராயணகதையைச் சொல்லுகிறேனே, அளவற்ற தேஜஸ்ஸையுடைய அந்த ப$_4$க$_3$வான் வியாஸருக்கு நமஸ்காரம்.]

**59. லௌகிகம் வைதி$_3$கம் வாऽபி தத$_2$ாத்$_4$யாத்மிகமேவ ச।**
**ஆத$_3$தீ$_3$த யதோ ஜ்ஞாநம் தம் பூர்வமபி$_4$வாத$_3$யேத்॥**

[உலகவிஷயங்களைப்பற்றியாவது, வேத$_3$த்தைப்பற்றியாவது, ப்$_3$ரஹ்மவிஷயமாகவாவது எவரிடமிருந்து ஞானத்தை அடைந்தானே, அவரை முதலில் நமஸ்கரிக்கவேண்டும்.]

**60. ப்ரத$_2$மமபி கு$_3$ரும் நாத$_2$மீடே$_3$**

[முதல் குருவான நாதமுனியையும் துதிக்கிறேன்.]

**61. அஹமபி ந மம। ப$_4$க$_3$வத ஏவாஹமஸ்மீத்யேவம் அமமதாம் யோஜயத்யதோ நம இதி॥**

[“நான் எனக்குமுரியேனல்லேன்; ப$_4$க$_3$வானுக்கு அடியேனுகிறேன்” என்று இம்மாதிரியாக மமகாரமில்லாமையைத் தருவதால் ‘நம:’ எனப்படுகிறது.]

**62. ஓம் நமோ விஷ்ணவே**

[அர்த்த$_2$ம் ஆசாரியர்களிடம் கேட்டுக்கொள்வது.]

57. மனு 2-218. 58. ப$_4$ார-ஆதி$_3$ 1-27. 59. மனு 2-117.
60. ஸஹஸ்ரநாமபா$_4$ஷ்யம். 61. 62. விஷ்ணுஷட$_3$க்ஷரீ.

**63. முக்தாநாம் லக்ஷணம் ஹ்யேதத் யச்ச்2வேதத்3வீப-**
**வாஸிநாம் ।**
**நித்யாஞ்ஜலிபுடா ஹ்ருஷ்டா நம இத்யேவ வாதி3ந: ॥**

[ஶ்வேதத்3வீபவாஸிகளுக்கு எது லக்ஷணமோ, அதுவே முக்தர்களுக்கும் லக்ஷணமாகும்; அதாவது:— எப்போதும் அஞ்ஜலி செய்துகொண்டிருப்பார்கள்; (அதனால்) ஆநந்தி3ப்பார்கள்; வாயால் 'நம:' என்றே சொல்லும் தன்மையுடையவர்களாயிருப்பார்கள்.]

**64. தஸ்ய யஜ்ஞவராஹஸ்ய விஷ்ணோரமிததேஜஸ: ।**
**ப்ரணாமம் யேऽபி குர்வந்தி தேஷாமபி நமோ நம: ॥**

[யஜ்ஞவராஹராகியவரும், அளவற்ற தேஜஸ்ஸை உடையவருமான அந்த விஷ்ணுவுக்கு எவர்கள் ஒரு நமஸ்காரம் செய்கிறார்களோ, அவர்களுக்குப் பலகால் நமஸ்காரம்.]

**65. தேஷாம் ஸததயுக்தாநாம் ப4ஜதாம் ப்ரீதிபூர்வகம் ।**
**த3தா3மி பு3த்3தி4யோக3ம் தம் யேந மாமுபயாந்தி தே ॥**

[என்னிடத்தில் எப்போதும் சேர்ந்திருப்பதை விரும்புபவர்களும், என்னை ப4ஜிப்பவர்களுமான அவர்களுக்கு, என்னை அடைவதற்கு ஸாத4னமான அந்த பு3த்3தி4யோக3த்தை அன்புடன் அளிக்கிறேன்.]

**66. ஸம்ஜ்ஞாயதே யேந தத3ஸ்ததோ3ஷம்**
**ஶு‍த்3த4ம் பரம் நிர்மலமேகரூபம் ।**
**ஸந்த்3ருஶ்யதே வாப்யதி4க3ம்யதே வா**
**தத் ஜ்ஞாநமஜ்ஞாநமதோऽந்யது3க்தம் ॥**

[எந்த அறிவினால், தோ3ஷமற்றதும், ஶு‍த்3த4மானதும், மிகவும் மலமற்றதும், ஒப்புயர்வற்றதுமான அந்தப் பரவஸ்து அறியப்படுகிறதோ, பார்க்கப்படுகிறதோ, அடையப்படுகிறதோ, அதுவே ஜ்ஞானம்; அதைக்காட்டிலும் வேறானது அஜ்ஞானம்.]

---

63. பா4ர-ஶாந்தி 344-45. 64. விஷ்ணுத4ர்மம்-90; யமவசனம். பா4ர-ஶாந்தி 46-126. பீ4ஷ்மர் ஸ்தோத்ரத்திலும் காண்கிறது.
65. கீ3தை 10-10. 66. வி-பு 6-5-87.



**67. தத் கர்ம யந்ந ப3ந்த4ாய ஸா வித்3யா யா விமுக்தயே ।**
**ஆயாஸாயாபரம் கர்ம வித்3யாந்யா ஶில்பநைபுணம் ॥**

[எந்தக் கர்மம் ப3ந்த4த்திற்குக் காரணமல்லவோ அதுவே கர்மம்; எது முக்திக்குக் காரணமோ அதுவே வித்3யை. மற்ற கர்மம் ஶ்ரமத்திற்கே. மற்ற வித்3யை செருப்புக்குத்தக் கற்றதுபோன்றது.]

**68. பிதரம் மாதரம் தா3ராந் புத்ராந் ப3ந்தூ4ந் ஸகீ2ந் கு3ரூந் ।**
**ரத்நாநி த4நதா4ந்யாநி க்ஷேத்ராணி ச க்3ருஹாணி ச ॥**
**ஸர்வத4ர்மாம்ஶ்ச ஸந்த்யஜ்ய ஸர்வகாமாம்ஶ்ச ஸாக்ஷராந் ।**
**லோகவிக்ராந்தசரணௌ ஶரணம் தேऽவ்ரஜம் விபோ4 ॥**

[ப4க3வானே! தந்தையையும், தாயையும், மனைவியையும், பிள்ளைகளையும், உறவினரையும், நண்பர்களையும், ஆசாரியர்களையும், ரத்னங்களையும், த4னதா4ன்யங்களையும், வயல்களையும், வீடுகளையும், எல்லா உபாயங்களையும், கைவல்யமுள்ளிட்ட எல்லா ஆசைகளையும், வாஸனையுடன் விட்டு, திருவுலகளந்தருளின உன் திருவடிகளை ஶரணமடைகிறேன்.]

**69. ஏநம் ஸர்வம் தத3பி4ஸமேதி யத்கிஞ்சித் ப்ரஜாஸ் ஸாது4**
**குர்வந்தி யஸ்தத் வேத3 யத்ஸ வேத3 ஸ மயைதது3க்த இதி**

[மனிதர்கள் எந்தெந்த நல்ல காரியங்கள் செய்கிறார்களோ, அவையெல்லாம் ரைக்வரிடம் பொருந்தியிருக்கின்றன. எதை அவர் (ரைக்வர்) அறிந்திருக்கிறாரோ அதையே எவனும் அறிகிறான். அப்படிப்பட்ட ரைக்வர் என்னால் இபபோது சொல்லப்பட்டார்.]

**70. லோகே யத்கிஞ்சித் ஸாத்4வநுஷ்ட்டி2தம் கர்ம, யச்ச**
**ஸர்வசேதநக3தம் விஜ்ஞாநம், தது3ப4யம் யதீ3யஜ்ஞாந-**
**கர்மாந்தர்க்க3தம், ஸ ரைக்வ இதி ஆஹ**

---

67. வி-பு 1-19-41. 68. விஹகே3ஶ்வரஸம்ஹிதை.
69. சா2ந்தோ3க்3யம் 4·1-4. 70. ஸ்ரீபா4ஷ்யம் 1-3-33.

[உலகத்தில் அனுஷ்டி₂க்கப்படும் எந்த நற்கருமமும், எல்லாச் சேதனர்களுடைய அறிவுமாகிய இவ்விரண்டும் எவருடைய ஜ்ஞானத்திலும், கர்மத்திலும் அடங்கியிருக்கின்றனவோ அவரே ரைக்வர் என்று (ஹம்ஸம) சொல்லிற்று.]

71. ஸ த்வாஸக்தமதி: க்ருஷ்ணே த₃ம்ʼஶ்யமானோ மஹோரகை₃:।
ந விவேத₃ாத்மனோ கா₃த்ரம் தத்ஸ்ம்ருத்யாஹ்லாத₃
ஸுஸ்தி₂த: ॥

[மஹாநாக₃ங்களினால் கடிக்கப்படுபவனும், க்ருஷ்ணனிடத்தில் பு₃த்₃தி₄யைச் செலுத்தினவனுமான அந்த ப்ரஹ்லாத₃ன், ப₄க₃வானை நினைக்கையினாலுண்டான ஆனந்த₃த்தினால் நிலை நின்றவனாய், தன்னுடைய உடம்பை அறியவில்லை.]

72. பஶ்யந்நபி ந த்₃ருஷ்டவாந்
[பார்த்துக்கொண்டிருந்தபோதும் பார்க்கவில்லை.]

73. ஸ்நேஹபூர்வமநுத்₄யாநம் ப₄க்திரித்யபி₄தீ₄யதே।
ப₄ஜ இத்யேஷ த₄ாதுர்வை ஸேவாயாம் பரிகீர்த்தித: ॥
தஸ்மாத் ஸேவா பு₃தை₄: ப்ரோக்தா ப₄க்திஶப்₃தே₃ந
பூ₄யஸீ ॥

[ஸ்நேஹத்தை முன்னிட்ட தியானம் ப₄க்தியெனப்படுகிறது. 'ப₄ஜ' என்கிற த₄ாது 'ஸேவை' என்னும் அர்த்த₂த்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் மேலான ஸேவையே பெரியோர்களால் ப₄க்திஶப்₃த₃த்தினால் சொல்லப்படுகிறது.]

74. ஸ்வாமிநி த₃ாஸஸ்ய ஸ்நேஹமயீ ஸ்தி₂தி:
[ஸ்வாமியிடத்தில் த₃ாஸனுடைய ஸ்நேஹம் நிறைந்திருக்கும் நிலைமை.]

75. வாஸுதே₃வோऽஸி பூர்ண:

71. வி-பு 1-17-39. 73. லைங்க₃புராணம் உத்தரப₄ாக₃ம்.



[ஆறு கு₃ணங்களாலும் பூர்ணனான வாஸுதே₃வனாயிருக்கிறாய்.]

76. நமஸ்தஸ்மை நமஸ்தஸ்மை நமஸ்தஸ்மை மஹாத்மநே।
[மஹாத்மாவான அவனுக்கு நமஸ்காரம்; அவனுக்கு நமஸ்காரம்; அவனுக்கு நமஸ்காரம்.]

77. நமோ நமஸ்தேऽஸ்து ஸஹஸ்ரக்ருத்வ:
புநஶ்ச பூ₄யோபி நமோ நமஸ்தே।
நம: புரஸ்தாத₃த₂ ப்ருஷ்ட₂தஸ்தே
நமோஸ்து தே ஸர்வத ஏவ ஸர்வ ॥

[உனக்கு ஆயிரந்தடவை நமஸ்காரம்; மறுபடியும் மறுபடியும் உனக்கு நமஸ்காரம்; எல்லாமாயிருப்பவனே! உனக்கு முன்னும் பின்னும் நமஸ்காரம்; உனக்கு எல்லாவிடத்திலும் நமஸ்காரம்.]

78. அஹமஸ்யாவரோ ப்₄ராதா கு₃ணைர் த₃ாஸ்யமுபாக₃த:
[நான் இவருடைய நினைவினால் (இவருக்குத்) தம்பி; (உண்மையில்) இவருடைய குணங்களால் (இவருக்கு) அடிமைப்பட்டவன்.]

79. ஜந்ம கர்ம ச மே தி₃வ்யம் ஏவம் யோ வேத்தி தத்த்வத:।
த்யக்த்வா தே₃ஹம் புநர்ஜந்ம நைதி மாமேதி
ஸோऽர்ஜுந! ॥

[அர்ஜுநா! என்னுடைய அப்ராக்ருதமான பிறப்பையும், சேஷ்டிதங்களையும் எவன் இப்படி உண்மையாக அறிகிறானோ, அவன் தே₃ஹத்தை விட்டு மறுஜன்மம் அடையான்; என்னை அடைகிறான்.]

80. அஜாயமாநோ ப₃ஹுதா₄ விஜாயதே।
தஸ்ய தீ₄ரா: பரிஜாநந்தி யோநிம்।

76. வி-பு 1-19-79. ப்ரஹ்லாத₃வாக்யம். 77. கீ₃தை 11-39.
78. ரா-கி 4-12. லக்ஷ்மணவாக்யம். 79. கீ₃தை 4-9.
80. புருஷஸூக்தம் உத்தராநுவாகம்.

[பிறப்பற்றவனுயிருந்தும் பலபடியாகப் பிறக்கிருன் (பரம புருஷன்). அவனுடைய அவதாரத்தை தீ₄ரர்களே (அறிவில் மிக்கோரே) நன்கு அறிகிருர்கள்.]

81. அஹத்வா ராவணம் ஸங்க்₂யே ஸபுத்ரபௌ₃லபா₃ந்த₄வம் ।
அயோத்₄யாம் ந ப்ரவேக்ஷ்யாமி த்ரிபி₄ஸ்தைர் ப்₄ராத்ருபி₄ஶ் ஶபே ॥

[பிள்ளைகளுடனும், ஸேனையுடனும், ப₃ந்து₄க்களுடனும் கூடிய ராவணனைச் சண்டையில் கொல்லாமல் அயோத்தியில் ப்ரவேசிக்கமாட்டேன். மூன்று தம்பிகளின் மீதும் ஆணையிடுகிறேன்.]

82. யத்₃விநா ப₄ரதம் த்வாம் ச ஶத்ருக்₄நஞ்சாபி மாநத₃ ।
ப₄வேந்மம ஸுக₂ம் கிஞ்சித் ப₄ஸ்மஸாத் குருதாம் ஶிகீ₂ ॥

[பெருமையைத் தருபவனே! ப₄ரதனையும், உன்னையும், ஶத்ருக்₄னனையுமில்லாமல் ஏதாவது எனக்கு ஸுக₂முண்டாகுமானுல், அதை அக்₃னி சாம்பலாக்கட்டும்.]

83. அப்யஹம் ஜீவிதம் ஜஹ்யாம்
த்வாம் வா ஸீதே ஸலக்ஷ்மணம் ।
ந து ப்ரதிஜ்ஞாம் ஸம்ஶ்ருத்ய
ப்₃ராஹ்மணேப்₄யோ விஶேஷத: ॥

[நான் உயிரையும், லக்ஷ்மணனோடுகூட உன்னையும் விடுவேனேயொழிய செய்த ப்ரதிஜ்ஞையை விடமாட்டேன்; அதிலும், விஶேஷமாக ப்₃ராஹ்மணர்களுக்குக் கொடுத்த ப்ரதிஜ்ஞையை விடேன்.]

84. ப₄ரதஸ்ய வச: குர்வந் யாசமாநஸ்ய ராக₄வ ।
ஆத்மாநம் நாதிவர்த்தேதா₂: ஸத்யத₄ர்மபராக்ரம ॥

[ராக₄வனே! ஸத்யமான த₄ர்மத்தையும், பராக்ரமத்தையும் உடையவனே! யாசிக்கும் ப₄ரதனுடைய வார்த்தையைச் செய்வதன் மூலம், உன்னுடைய ஸ்வரூபத்தை (ஆஶ்ரித பாரதந்த்ர்யத்தை) மீருமலிருப்பாயாக.]

85. 209-ஐ பார்க்கவும்.

86. அவிஸ்தரமஸந்தி₃க்₃த₄மவிலம்பி₃தமத்₃ருதம் ।
உரஸ்ஸ்த₂ம் கண்ட₂க₃ம் வாக்யம் வர்த்ததே மத்₄யமே ஸ்வரே ॥

[(இந்த ஹனுமானுடைய) மார்பிலிருந்தும், தொண்டையிலிருந்தும் வரும் வாக்யம் மத்₄யமஸ்வரத்திலும், விஸ்தாரமின்றியும், ஸந்தே₃ஹமின்றியும், காலதாமதமில்லாமலும், வேக₃மில்லாமலுமிருக்கிறது.]

87. ஸைஷா பா₄ர்க₃வீ வாருணீ வித்₃யா ।
பரமே வ்யோமந் ப்ரதிஷ்டி₂தா ॥

[இது ப்₄ருகு₃விற்கு வருணனுல் சொல்லப்பட்ட வித்₃யை; பரமபத₃த்தில் நிலை நிற்பது (இது).]

88. ஸ ஹோவாச வ்யாஸ: பாராஶர்ய:

[பராஶரரின் புத்திரரான அப்படிப்பட்ட வியாஸரன்ரே சொன்னுர்.]

89. ஆத்மா ஶுத்₃தோ₄ऽக்ஷரஶ்ஶாந்தோ நிர்கு₃ண: ப்ரக்ருதே: பர: ।
ப்ரவ்ருத்₃த்₄யபசயௌ நாஸ்ய ஏகஸ்யாகி₂லஜந்துஷு ॥

[ஆத்மாவானவன், கர்மம் முதலிய அஶுத்₃த₄மற்றவன்; விநாஶமற்றவன்; பசி, தாஹம் முதலியவையற்றவன்; ஸத்வரஜஸ்தமோகு₃ணங்களற்றவன்; ப்ரக்ருதியைக் காட்டிலும் மேலானவன்; எல்லாப் பிராணிகளிலும், ஒரே மாதிரி (ஜ்ஞாநைகாகாரனுக) இருக்கும் இவனுக்கு அதி₄கமாவதும், குறைவதும் கிடையாது.]

---

81. ரா-யு 19-21. 82. ரா-அ 97-8. 83. ரா-ஆ 10-19.
84. ரா-அ 111-7. வஸிஷ்ட₂வாக்யம்.

85. தை-ஆ. 86. ராகி 3-31. 87. தை-ப்₄ருகு₃வல்லீ-9.
88. தைத்திரீய ஆரண்யகம் ப்ரஶ்நம் 1, அனு-9. 89. வி-பு 2-13-71.

91&90. வித்3யாவிநயஸம்பந்நே ப்3ராஹ்மணே கவி3 ஹஸ்திநி ।
ஶுநி சைவ ஶ்வபாகே ச பண்டி3தாஸ் ஸமத3ர்ஶிந: ॥

இஹைவ தைர்ஜிதஸ்ஸர்க்கோ3
யேஷாம் ஸாம்யே ஸ்தி2தம் மந: ।
நிர்தோ3ஷம் ஹி ஸமம் ப்3ரஹ்ம
தஸ்மாத் ப்3ரஹ்மணி தே ஸ்தி2தா: ॥

[வித்3யை, அடக்கம் முதலியவைகளுடன் கூடிய ப்3ராஹ்மணனிடமும், கேவல ப்3ராஹ்மணனிடமும், பசுவிடமும், யானையிடமும், நாயிடமும், சண்டா3ளனிடமும், ஆத்மாவை உண்மையாய் அறிந்தவர்கள் ஸமத3ர்ஶிகளாக இருப்பார்கள். எவர்களுடைய மனமானது (இம்மாதிரியான) ஸம நிலைமையிலிருக்கிறதோ, அவர்களால் இங்கேயே ஸம்ஸாரம் ஜயிக்கப்பட்டது. ப்ரகருதிஸம்ஸர்க்க3மற்றதும், ஸமமானதுமான ஆத்மவஸ்துவன்றோ ப்3ரஹ்மம் (ப்3ரஹ்மத்திற்கு ஸமானமானது). ஆகையால் அவர்கள் ப்3ரஹ்மத்திலேயே நிலை நிற்கிருர்கள்.]

92. விகாரஜநநீமஜ்ஞாம் அஷ்டரூபாமஜாம் த்4ருவாம்
[(பதினாறு) விகாரங்களை உண்டாக்குவதும், (ப்ரக்ருதி, மஹான், அஹங்காரம் ஐந்து தன்மாத்ரைகள் என்னும்) எட்டு ரூபத்தை உடையதும், ஞானமற்றதும், பிறப்பற்றதும், நிலையானதுமான ப்ரக்ருதியை.]

93. அக்ஷய்யம் நாந்யதா3தா4ரமமேயமஜரம் த்4ருவம் ।
ஶப்3த3ஸ்பர்ஶவிஹீநம் தத் ரூபாதி3பி4ரஸம்ஹிதம் ॥
த்ரிகு3ணம் தஜ்ஜக3த்3யோநிரநாதி3ப்ரப4வாப்யயம் ॥

[(ப்ரக்ருதியானது) க்ஷயமற்றது; மற்றொரு அசித்தை ஆதா4ரமாகக்கொண்டிராதது; (தே3ஶகாலாதி3களால்) அளவற்றது; குறைவற்றது; நிலையானது; ஶப்3த3ஸ்பர்ஶங்களற்றது; ரூபம் முதலியவையற்றது; ஸத்வரஜஸ்தமோகு3ணங்களை

91 & 90. கீ3தை 5-18 & 19. 92. மந்த்ரிகோபனிஷத்.
93. வி-பு 1-2-20 & 21.



உடையது; தனக்குக் காரணத்தையும், பிறப்பையும், முடிவையுமற்ற அதுவே உலகிற்குக் காரணம்.]

94. பரமாத்மா ச ஸர்வேஷாமாதா4ர: பரமேஶ்வர: ।
விஷ்ணுநாமா ஸ வேதே3ஷு வேதா3ந்தேஷு ச கீ3யதே ॥
[பரமாத்மாவே எல்லோருக்கும் ஆதா4ரமாகவும், மேலான ஈஶ்வரனாகவுமிருப்பவன். அவன் வேத3ங்களிலும், வேதா3ந்தங்களிலும் விஷ்ணுவென்ற பெயரையுடையவனாகக் கீர்த்திக்கப்படுகிருன்.]

95. பர: பராணாம் பரம: பரமாத்மாத்மஸம்ஸ்தி2த: ।
ரூபவர்ணாதி3நிர்தே3ஶவிஶேஷணவிவர்ஜித: ॥
ஸர்வத்ராஸௌ ஸமஸ்தஞ்ச வஸத்யத்ரேதி வை யத: ।
ததஸ்ஸ வாஸுதே3வேதி வித்3வத்3பி4: பரிபட்2யதே ॥
[மேலானவர்களைக்காட்டிலும் மேலானவனும், தன்னைக்காட்டிலும் உயர்ந்தவனற்றவனும், தனக்குத்தானே ஆதா4ரமாக இருப்பவனுமான பரமாத்மா—ரூபம்,நிறம் முதலியவை,நாமம் எனப்படும் (ப்ராக்ருதமான) விஶேஷணங்களற்றவன். இவன் அறிஞர்களால் வாஸுதே3வனென்று படிக்கப்படுகிருன்.]

96. ப்ரதா4நஞ்ச புமாம்ஶ்சைவ ஸர்வபூ4தாத்மபூ4தயா ।
விஷ்ணுஶக்த்யா மஹாபு3த்3தே4 வ்ருதௌ
ஸம்ஶ்ரயத4ர்மிணௌ ॥
[மஹாபு3த்3தி4யையுடையவரே! ஒன்றுடனொன்று சேர்ந்திருக்கும் ஸ்வபா4வத்தையுடைய ப்ரக்ருதியும், புருஷனும், எல்லா பூ4தங்களுக்கும் ஆத்மாவான விஷ்ணுஶக்தியினால் வியாபிக்கப்பட்டிருக்கின்றன.]

97. யோகி3நாமம்ருதம் ஸ்தா2நம் ஸ்வாத்மஸந்தோஷகாரிணாம்
[ஆத்மமாத்ரானுப4வநிஷ்டா2ரான யோகி3களுக்கு அழிவற்ற ஸ்தா2னம்]

94. வி-பு 6-4-40 95. வி-பு 1-2-10 & 12.
96. வி-பு 2-7-29. 97. வி-பு 1-6-38.

98. ஸர்க்க3ஶ்ச ப்ரதிஸர்க்க3ஶ்ச வம்ஶ மந்வந்தராணி ச।
வம்ஶாநுசரிதம் சைவ புராணம் பஞ்சலக்ஷணம்॥

[ஸ்ருஷ்டி, ப்ரளயம், வம்ஶம், மன்வந்தரம், வம்ஶசரித்ரம் ஆகிய இவ்வைந்து லக்ஷணங்களையுமுடையது புராணமாகும்.]

99. தபநபவநயோர் ய: ப்ராப்தவாந் புத்ரபா4வம்
ஶதமக2க்ருதபாலிர் வித்3யயா ஜந்மநா வா।

[இந்திரனால் அடையாளம் செய்யப்பட்டவனும், ஸூர்யனுக்கும், வாயுவுக்கும், வித்3யையினாலும், ஜன்மத்தினாலும் புத்ரனாயிருக்கும் தன்மையை அடைந்தவனுமான ஹனுமான்...]

100. அப்3ரவீச்ச தத3ா வாக்யம் ஜாதக்ரோதோ4 விபீ4ஷண:।
அந்தரிக்ஷக3தஶ் ஸ்ரீமாந் ப்4ராதரம் ராக்ஷஸாதி4பம்॥

[ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயையுடைய விபீ4ஷணன் அப்போது மிகவும் கோபங்கொண்டவனாய், ஆகாயத்தில் கிளம்பி, ராக்ஷஸர்களுக்கு அதி4பதியான தன் தமையனைக் குறித்துச் சில வார்த்தைகள் சொன்னான்.]

101. பரமாபத3மாபந்நோ மநஸாசிந்தயத் ஹரிம்।
ஸ து நாக3வர: ஸ்ரீமாந் நாராயணபராயண:॥

[ஶ்லாக்4யமான ஆபத்தை அடைந்தவனும், கைங்கர்ய ஸ்ரீயை உடையவனும், நாராயணனையே மேலான க3தியாகக்கொண்டவனுமான அந்த க3ஜேந்திராழ்வான் மனத்தினாலே ஹரியை நினைத்தான்.]

102. ஸர்வப்ரியகரஸ்தஸ்ய ராமஸ்யாபி ஶரீரத:।
லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்நோ ப3ஹி: ப்ராண இவாபர:॥

[கைங்கர்ய லக்ஷ்மியை உடைய லக்ஷ்மணன், ராமனுக்கு ஶரீரத்தைக்காட்டிலும் எல்லாப் பிரியத்தையும் செய்பவனாகவும், வெளியிலிருக்கும் மற்றொரு ப்ராணன்போலவும் விளங்கினான்.]

98. நரஸிம்ஹபுராணம் 3-33. 99. போ4ஜசம்பு-கிஷ்-10.
100. ரா-யு 16-17. 101. விஷ்ணுத4ர்மம் 69-47. 102. ரா-பா3 18-28.



103. ஸ்தோத்ரரத்னம்—ஶ்லோகம் 60.

104. ஜிதந்தே ஸ்தோத்ரம்—1.

105. ஏவமுக்த்வாऽர்ஜுநஸ் ஸங்க்2யே ரதோ2பஸ்த2 உபாவிஶத்।
விஸ்ருஜ்ய ஸஶரம் சாபம் ஶோகஸம்விக்3நமாநஸ:॥

[அர்ஜுனன், இம்மாதிரி சொல்லிவிட்டு, சோகத்தினால் பீடிக்கப்பட்ட மனத்தை உடையவனாய், அம்புடன் கூடிய வில்லைக் கைவிட்டு, யுத்3த4களத்திலேயே ரத2த்தின்மேல் உட்கார்ந்தான்.]

106. யதா2 ரத்நாநி ஜலதே4ரஸங்க்2யேயாநி புத்ரக।
ததா2 கு3ணா ஹ்யநந்தஸ்ய அஸங்க்2யேயா மஹாத்மந:॥

[குழந்தாய்! எப்படி ஸமுத்3ரத்திலுள்ள ரத்னங்கள் கணக்கற்றவையோ, அம்மாதிரியே மஹாத்மாவான அநந்தனுடைய கு3ணங்களும் அளவற்றவை.]

107. ஆரோக்3யம் பா4ஸ்கராதி3ச்சே2த்
த4நமிச்சே2த் ஹுதாஶநாத்।
ஈஶ்வராத் ஜ்ஞாநமந்விச்சே2த்
மோக்ஷமிச்சே2ஜ்ஜநார்த்த3நாத்॥

[ஸூர்யனிடமிருந்து ஆரோக்3யத்தை விரும்பக்கடவன்; அக்3னியிடமிருந்து பொருளை விரும்பவேண்டும்; சிவனிடமிருந்து அறிவை விரும்பக்கடவன். நாராயணனிடமிருந்து மோக்ஷத்தை விரும்பக்கடவன்.]

108. இஷுக்ஷயாந்நிவர்த்தந்தே நாந்தரிக்ஷக்ஷிதிக்ஷயாத்।
மதிக்ஷயாந்நிவர்த்தந்தே ந கோ3விந்த3கு3ணக்ஷயாத்॥

[பா3ணங்களில்லாமல் திரும்புகிறார்களேயொழிய, பூ4மியும் ஆகாயமும் அழிந்துவிட்டதாலல்ல. (அம்மாதிரியே) பு3த்3தி4க்குறைவினால் திரும்புகிறார்களேயொழிய கோ3விந்தனுடைய கு3ணங்கள் முடிந்துவிட்டதாலல்ல.]

105. கீ3தை 1-47. 106. மாத்ஸ்யபுராணம். வராஹபுராணம் 74-40.
107. மாத்ஸ்யபுராணம் 67-41.

109. ஸா ஜிஹ்வா யா ஹரிம் ஸ்தௌதி
தச்சித்தம் யத்தத3ர்ப்பிதம் ।
தாவேவ ச கரௌ ஶ்லாக்4யௌ
யௌ தத்பூஜாகரௌ கரௌ ॥

[எது ஹரியைத்துதிக்கிறதோ, அதுவே நாக்கு. எது அவனிடம் ஸமர்ப்பிக்கப்பட்டதோ அதுவே நெஞ்சு. எவை அவனுக்குப் பூஜை செய்கின்றனவோ அக்கைகளே ஶ்லாக்4யமானவை.]

110. நஷ்டோ மோஹ: ஸ்ம்ருதிர் லப்3த4ா த்வத்ப்ரஸாத3ாந்
மயாऽச்யுத ।
ஸ்தி2தோऽஸ்மி க3தஸந்தே3ஹ: கரிஷ்யே வசநம் தவ ॥

[அச்சுதனே! (விபரீதஜ்ஞானமாகிய) மோஹம் நசித்தது. உன்னருளால் உண்மை அறிவு என்னால் அடையப் பட்டது. ஸந்தே3ஹம் நஶிக்கப்பெற்றவனாயிருக்கிறேன். உன் வசனத்தின்படியே (யுத்3த4ம்) செய்கிறேன்.]

111. யந்நாயம் ப4க3வாந் ப்3ரஹ்மா ஜாநாதி பரமம் பத3ம் ।
தந்நதா: ஸ்ம ஜக3த்3த4ாம தவ ஸர்வக3தாச்யுத ॥

[அச்யுதனே! ஸர்வவ்யாபியே! மேலான ப்ராப்யமான எதை ப4க3வானான பிரமனும் அறியானோ, உலகிற் கெல்லாம் இருப்பிடமான அந்த உன்னுடைய ஸ்வரூபத்தை வணங்குகிறோம்.]

112. தவாந்தராத்மா மம ச யே சாந்யே தே3ஹிஸம்ஜ்ஞிதா: ।
ஸர்வேஷாம் ஸாக்ஷிபூ4தோऽஸௌ ந க்3ராஹ்ய: கேநசிந்
க்வசித் ॥

[(பிரமனாகிய) எனக்கும், (ருத்3ரனாகிய) உனக்கும், (தே3ஹத்தை உடைத்தாயிருப்பதால்) 'தே3ஹீ' என்ற பெயரையுடைய மற்றவர்களுக்கும் அந்தராத்மா நாரா

109. விஷ்ணுத4ர்மம்-1. 110. கீ3தை 18-73. 111. வி-பு 1-9-59.
112. பா4ரதம் - மோக்ஷத4ர்மம் 179-4.



யணனே. எல்லாருக்கும் ஸாக்ஷியாயிருக்கிறார் அவர். எவராலும் எக்காலத்திலும் அறியத்தக்கவரல்லர் அவர்.]

113. தத்3 விஷ்ணோ: பரமம் பத3ம் ஸதா3 பஶ்யந்தி ஸூரய: ।
தி3வீவ சக்ஷுராததம் । தத் விப்ராஸோ விபந்யவோ
ஜாக்3ருவாம்ஸஸ் ஸமிந்த4தே । விஷ்ணோர்யத் பரமம் பத3ம் ॥

[விஷ்ணுவினுடைய அந்தப் பரமபத3த்தை நித்யஸூரிகள் எப்போதும் பார்க்கிறார்கள். அப்பரமபத3ம், எல்லாவற்றையும் பிரகாசிப்பிப்பவனும், ஆகாயத்திலிருப்பவனும் உலகிற் கெல்லாம் கண்ணாயிருப்பவனுமான ஸூர்யன்போல் ப்ரகாஶமுள்ளது. விஷ்ணுவினுடைய யாதொரு பரமபத3 மிருக்கிறதோ, அதில் மேத4ாவிகளும், துதிப்பதையே ஸ்வப4ாவமாக உடையவர்களும், ஜாக3ரூகர்களாயிருப்பவர் களுமான நித்யஸூரிகள் பிரகாஶிக்கின்றனர்.]

114. தே3வ! ப்ரபந்நார்த்திஹர! ப்ரஸாத3ம் குரு கேஶவ! ।
அவலோகநத3ாநேந பூ4யோ மாம் பாலயாச்யுத! ॥

[தே3வனே! ஶரணமடைந்தவர்களின் து3:க்க3த்தைப் போக்கடிப்பவனே! கேஶவனே! அருள்புரிவாயாக. அச் சுதனே! மறுபடியும் கடாக்ஷிப்பதன்மூலம் என்னைக் காப் பாற்றுவாயாக.]

115. ததை3க்ஷத ப3ஹு ஸ்யாம் ப்ரஜாயேயேதி
தத்தேஜோऽஸ்ருஜத ।

[அந்தப் பரப்3ரஹ்மம் '(நானே) பலவாக ஆகக்கடவேன்' என்று ஸங்கல்பித்தது; அது தேஜஸ்ஸை ஸ்ருஷ்டிசெய்தது.]

116. ரஸோ வை ஸ: । ரஸம் ஹ்யேவாயம் லப்3த்4வாநந்தீ3
ப4வதி । கோ ஹ்யேவாந்யாத் க: ப்ராண்யாத் । யதே3ஷ
ஆகாஶ ஆநந்தோ3 ந ஸ்யாத் । ஏஷ ஹ்யேவாநந்த3யாதி ।

113. ருக்3வேத3ம் அஷ்டக 1-2-7. ஸாமவேத3ம் 3-18-2-4.
114. வி-பு 1-20-16. ப்ரஹ்லாத3வாக்யம். 115. சா2ந்-உப 6-2-3.
116. தைத்திரீயம் ஆநந்த3வல்லி-7.

[ரஸ (ஆநந்த$_3$) ஸ்வரூபனன்றே அந்தப் பரமபுருஷன். ரஸஸ்வரூபனான அவனை அடைந்து (இந்த ஜீவன்) ஆநந்த$_3$த்தை உடையவனாகிறான். பிரகாசிப்பவனும், ஆநந்த$_3$ஸ்வரூபனுமான இப்பரமபுருஷன் இல்லாவிடில் எவன் இவ்வுலகிலுள்ள ஸுக$_2$த்தையோ, மோக்ஷஸுக$_2$த்தையோ அடையமுடியும்? (ஆகையால்) இவனே (ஜீவனை) ஆநந்தி$_3$ப்பிக்கிறான்.]

**117. ந தத$_3$ஸ்தி விநா யத் ஸ்மாந்மயா பூ$_4$தம் சராசரம்**

[அசையக்கூடியவையும், அசையக்கூடாதவையுமான வஸ்துக்களில், நானில்லாமல் இருக்கக்கூடிய வஸ்து கிடையாது.]

**118. ஸ ஏகாகீ ந ரமேத**

[(ப்ரளயகாலத்தில்) ஒருவராயிருந்த அந்த நாராயணன் ஆனந்த$_3$த்தை அடையவில்லை.]

**119. உபாத$_3$த்தே ஸத்தாஸ்தி$_2$திநியமநாத்$_3$யைஶ்சித$_3$சிதௌ**
**ஸ்வமுத்$_3$தி$_3$ஶ்ய ஶ்ரீமாநிதி வத$_3$தி வாகௌ$_3$பநிஷதீ$_3$ ।**
**உபாயோபேயத்வே ததி$_3$ஹ தவ தத்த்வம் ந து கு$_3$ணௌ**
**அதஸ்த்வாம் ஶ்ரீரங்கே$_3$ஶய ஶரணமவ்யாஜமப$_4$ஜம் ॥**

[ஹே ஶ்ரீரங்க$_3$நாத$_2$னே! 'ஶ்ரீமந்நாராயணன் ஸ்ருஷ்டி, ஸ்தி$_2$தி, நியமனம் முதலிய காரியங்களால் சேதனாசேதனங்களைத் தனக்காக ஸ்வீகரிக்கிறான்' என்று உபனிஷத்$_3$ வாக்யமானது சொல்லுகிறது. ஆகையால், இவ்விஷயத்தில் உபாயத்வமும் உபேயத்வமும் உனக்கு இயல்வு; செயற்கையல்ல. ஆகையால் உன்னை நிர்வ்யாஜமான உபாயமாக அடைந்தேன்.]

**120. கிமத்ர சித்ரம் த$_4$ர்மஜ்ஞ! லோகநாத$_2$! ஸுக$_3$ாவஹ!।**
**யத் த்வமார்யம் ப்ரப$_4$ாஷேத$_2$ா: ஸத்த்வவாந் ஸத்பதே$_2$ ஸ்தி$_2$த: ॥**

117. கீ$_3$தை 10-39. 118. மஹோபனிஷத்.
119. ஶ்ரீரங்க$_3$ராஜஸ்தவம் 2-88. 120. ரா-யு 18-36.



[த$_4$ர்மங்களை அறிந்தவரே! லோகநாத$_2$ரே! ஸுக$_2$த்தைத் தருபவரே! ஸத்வகு$_3$ணத்தையுடையவரும், நல்ல மார்க்க$_3$த்தில் நிற்பவருமான நீர் அழகிய சொல்லைச் சொன்னீர் என்பதில் என்ன ஆச்சரியம்?]

**121. காரணந்து த்$_4$யேய:**

[காரணவஸ்துவே தியானிக்கத்தக்கது.]

**122. ஸ ஸ்வராட்$_2$ ப$_4$வதி**

[அந்த முக்தாத்மா கர்மத்திற்கு வஶப்படாதவனாக ஆகிறான்.]

**123. ய ஆத்மா அபஹதபாப்மா விஜரோ விம்ருத்யுர் விஶோகோ விஜிக$_4$த்ஸோऽபிபாஸஸ் ஸத்யகாமஸ் ஸத்யஸங்கல்பஸ் ஸோऽந்வேஷ்டவ்ய:**

[எந்த ஆத்மாவானவன், பாபமற்றவனாகவும், கிழத்தனமற்றவனாகவும், ம்ருத்யுவற்றவனாகவும், ஶோகமற்றவனாகவும், பசியற்றவனாகவும், தாகமற்றவனாகவும், வீண்போகாத இஷ்டத்தையும், ஸங்கல்பத்தையும் உடையவனாகவுமிருக்கிறானோ அவன் தேடத்தக்கவன்.]

**124. ய: புத்ர: பிதரம் த்$_3$வேஷ்டி தம் வித்$_3$யாத$_3$ந்யரேதஸம் ।**
**யோ விஷ்ணும் ஸததம் த்$_3$வேஷ்டி தம் வித்$_3$யாதந்த்யரேதஸம் ॥**

[எந்தப் புத்திரன் பிதாவை த்$_3$வேஷிக்கிறானோ அவனை மற்றொருவனுடைய ரேதஸ்ஸுக்குப் பிறந்தவனாக அறியலாம்; எவனொருவன் விஷ்ணுவை எப்போதும் த்$_3$வேஷிக்கிறானோ அவனைச் சண்டா$_3$ளனுக்குப் பிறந்தவனாக அறியலாம்.]

**125. விஷ்ணுப$_4$க்திவிஹீநோ யஸ்ஸர்வஶாஸ்த்ரார்த்த$_2$வேத்$_3$யபி ।**
**ப்$_3$ராஹ்மண்யம் தஸ்ய ந ப$_4$வேத் தஸ்யோத்பத்திர் நிரூப்யதாம் ॥**

121. அத$_2$ர்வஶிகை$_2$. 122. ச$_2$ாந்தோ$_3$க்$_2$யம் 7-25-2. 123 ச$_2$ாந்தோ$_3$க்$_3$யம் 8-7-1. 124. ப்$_3$ரஹ்மாண்ட$_3$புராணம். 125. பாத்$_3$மபுராணம்.

[எல்லா ஶாஸ்த்ரங்களின் அர்த்த2த்தை அறிந்தவனுன போதிலும் எவன் விஷ்ணுப4க்தியில்லாதவனே அவனுக்கு ப்3ராஹ்மண்யம் கிடையாது. அவனுடைய உத்பத்தியை நிரூபிக்கலாம்.]

**126. ஹிரண்யக3ர்ப்ப4ஸ் ஸமவர்த்ததாக்3ரே**
**பூ4தஸ்ய ஜாத: பதிரேக ஆஸீத்**

[முதலில் பூ4தங்களுக்கெல்லாம் ஒரே பதியான ஹிரண்ய க3ர்ப்ப4ன் (ஜீவாத்மஸமூஹத்தைத் தன்னுட்கொண்ட ப4க3வான்) இருந்தான்.]

**127. ஏகோ ஹி ருத்3ரோ ந த்3விதீயாய தஸ்து2:**

[ருத்3ரன் ஒருவனே; இரண்டாவதாக (ஸஹாயமாக) ஒருவருமில்லை.]

**128. ந கிரிந்த்3ர த்வது3த்தரோ ந ஜ்யாயோ அஸ்தி வ்ருத்ரஹந்**

[இந்திரனே! உன்னைக்காட்டிலும் மேலானவனில்லை; வ்ருத்ரனைக் கொன்றவனே (உன்னைக்காட்டிலும்) பெரியவனில்லை.]

**129. தஸ்ய மத்4யே வஹ்நிஶிகா2 அணீயோர்த்4வா வ்யவஸ்தி2த:।**
**நீலதோயத3மத்4யஸ்தா2 வித்3யுல்லேகே2வ பா4ஸ்வரா।**
**நீவாரஶூகவத் தந்வீ பீதாபா4 ஸ்யாத் தநூபமா।**
**தஸ்யாஶ் ஶிகா2யா மத்4யே பரமாத்மா வ்யவஸ்தி2த:।**
**ஸ ப்3ரஹ்மா ஸ ஶிவஸ்ஸேந்த்3ரஸ் ஸோக்ஷர:**
**பரமஸ் ஸ்வராட்॥**

[அந்த இருத3யகமலத்தின் நடுவில், சிறியதும் மேல் நோக்கினதுமான அக்3னிஶிகை2 (பரமாத்மாவின் தி3வ்ய மங்க3ளவிக்3ரஹம்) இருக்கிறது. (அது) நீலமேக4த்தை உட்கொண்ட மின்னல்போல் பிரகாஶமுள்ளதாகவும், நெல் நுனிபோல் சிறிதாகவும், மஞ்சள் நிறமுள்ளதாகவும், ஒப்பற்றதாகவும் இருக்கிறது. அந்த ஶிகை2யின் நடுவில் பரமாத்மா விளங்குகிருன். அவனே பிரமனுக்கும் அந்தர்யாமி; அவனே ஶிவனுக்கும் அந்தர்யாமி; அவனே இந்திரனுக்கும் அந்தர்யாமி; (பிரமன் முதலியவர்களைக்காட்டிலும்) மேலானவனும், கர்மத்திற்கு வசப்படாதவனும், அழிவற்றவனுமான முக்தாத்மாவுக்கும் அவனே அந்தர்யாமி.]

126. தைத்திரீயஸம்ஹிதை 4-2-8. 127. ஶ்வேதாஶ்வதரம் 3.2.
128. ருக் அஷ்டகம்-3-6-19. 129. தைத்-நாராயணவல்லி-11.



**130. நாராயணபரா வேதா3 தே3வா நாராயணங்க3ஜா:।**
**நாராயணபரா லோகா நாராயணபரா மகா2:॥**

[வேத3ங்கள் நாராயணனைச் சொல்லுபவை; தே3வர்கள் நாராயணனுடைய அங்க3த்திலிருந்து உண்டானவர்கள்; நாராயணனைப் பற்றியிருப்பவை உலகங்கள்; யாக3ங்கள் நாராயணனை ஆராதி4ப்பவை.]

**131. க3ந்த4த்3வாராம் து3ராத4ர்ஷாம் நித்யபுஷ்டாம் கரீஷிணீம்।**
**ஈஶ்வரீம் ஸர்வபூ4தாநாம் தாமிஹோபஹ்வயே ஶ்ரியம்॥**

[கீர்த்தியைத் தருபவளும், (து3ஷ்டர்களால்) அடைய முடியாதவளும், எப்போதும் ஸம்ருத்3தி4யை உடையவளும், எல்லா ஸம்பத்துகளையும் உடையவளும், எல்லா பூ4தங்களுக்கும் ஈஶ்வரியுமான ஸ்ரீதே3வியை இங்கு அழைக்கிறேன்.]

**132. அஸ்யேஶாநா ஜக3தோ விஷ்ணுபத்நீ**

[இந்த உலகிற்கெல்லாம் ஸ்வாமினியாகவும், விஷ்ணுவுக்குப் பத்னியாகவும் இருப்பவள்.]

**133. மஹாந் ப்ரபு4ர்வை புருஷ: ஸத்த்வஸ்யைஷ ப்ரவர்த்தக:**

[மஹாபுருஷனே! (மோக்ஷ) ப2லத்தைக் கொடுக்கக்கூடியவன். இவனே ஶுத்3த4ஸத்வத்திற்கு ப்ரவர்த்தகன்.]

130. பா4க3வதம் 2-5-15. 131. ஸ்ரீஸூக்தம்-9. 132 நீளாஸூக்தம் தைத்திரீய ஸம்ஹிதை 4 4-12. 133. ஶ்வே. உப. 3-12.

134. வேத3ாஹமேதம் புருஷம் மஹாந்தம்
ஆதி3த்யவர்ணம் தமஸ: பரஸ்தாத்।
தமேவம் வித்3வாநம்ருத இஹ ப4வதி
நாந்ய: பந்த2ா வித்3யதேऽயநாய ॥

[(வேத3புருஷனுகிய) நான் (ஸ்வரூபரூபகு3ணவிபூ4திகளில்) பெரியவனும், ஸூர்யன்போல் ப்ரகாஶிப்பவனும், ப்ரக்ருதிக்கு அப்பாற்பட்டவனுமான இந்தப் புருஷனை அறிகிறேன். அவனை இம்மாதிரி அறிபவன் இங்கேயே முக்தனுக ஆகிறுன். மோக்ஷத்திற்கு (அவனைத்தவிர) வேறு வழி கிடையாது.]

135. ய ஏஷோऽந்தராதி3த்யே ஹிரண்மய: புருஷோ த்3ருஶ்யதே
ஹிரண்யஶ்மஶ்ருர் ஹிரண்யகேஶ ஆப்ரணக2ாத் ஸர்வ ஏவ
ஸுவர்ண:। தஸ்ய யத2ா கப்யாஸம் புண்ட3ரீகமேவமக்ஷிணீ॥

[ஸூர்யனுக்கு நடுவில் தங்கம்போல் அழகிய உருவையுடைய எந்த இந்தப் பரமபுருஷன் காணப்படுகிறுனே, அவன் ஸுவர்ணம்போன்று அழகான மீசையையும், கேஶங்களையும், எல்லா அவயவங்களையும் உடையவன். அவனுக்கு ஸூர்யனுல் மலரும் தாமரைபோன்ற இரு கண்கள் உள.]

136. ததஸ்ஸமுத்க்ஷிப்ய த4ராம் ஸ்வத3ம்ஷ்ட்ரயா
மஹாவராஹ: ஸ்பு2டபத்3மலோசந:।
ரஸாதலாது3த்பலபத்ரஸந்நிப4:
ஸமுத்தி2தோ நீல இவாசலோ மஹாந் ॥

[மலர்ந்த தாமரைபோன்ற திருக்கண்களை உடையவரும், நீலோத்பலமலரின் இதழ்போன்ற நிறத்தையுடையவருமான மஹாவராஹஸ்வரூபியான ப4க3வான் தன்னுடைய த3ந்தத்தால் பூ4தே3வியை ரஸாதலத்திலிருந்து எடுத்துக்கொண்டு பெரிய நீலமலைபோல் கிளம்பினுர்.]

134. புருஷஸூக்தம் உத்தராநுவாகம்-2.
135. சா2ந்தோ3க்3யம் 1-6 & 7. 136. வி-பு 1-4-26.



137. யஸ்மாத் க்ஷரமதீதோऽஹமக்ஷராத3பி சோத்தம:।
அதோऽஸ்மி லோகே வேதே3 ச ப்ரதி2த: புருஷோத்தம:॥

[நான் ஞானத்தில் ஏற்றக்குறைவுகளுள்ள ஸம்ஸாரி புருஷனை அதிக்ரமித்திருப்பதாலும், ஞானத்தில் ஏற்றக்குறைவுகளற்ற முக்தபுருஷனைக்காட்டிலும் மேலானவனுயிருப்பதாலும், ஶ்ருதியிலும், ஸ்ம்ருதியிலும் புருஷோத்தமனென்று பிரஸித்3தி4பெற்றிருக்கிறேன்.]

138. ஏதாவாநஸ்ய மஹிமா அதோ ஜ்யாயாம்ஶ்ச பூருஷ:।
பாதோ3ஸ்ய விஶ்வா பூ4தாநி த்ரிபாத3ஸ்யாம்ருதம் தி3வி॥

[இவனுடைய மஹிமை இப்படிப்பட்டது. பரமபுருஷன் இதைக்காட்டிலும் மேலானவன். எல்லா உலகங்களும் இவனுடைய (விபூ4தியில்) கால் பா4க3ம்; பரமபத3த்தில் இவனுடைய (விபூ4தியில்) அழிவற்றதான முக்கால் பா4க3மிருக்கிறது.]

139. யஸ்யாயுதாயுதாம்ஶாம்ஶே விஶ்வஶக்திரியம் ஸ்தி2தா।
பரப்3ரஹ்மஸ்வரூபஸ்ய ப்ரணமாமஸ்தமவ்யயம் ॥

[பரப்3ரஹ்மஸ்வரூபியான எவனுடைய பல்லாயிரத்தில் ஒரு பா4க3த்தில் உலகமாகிற ஶக்தி நிலைநிற்கிறதோ, குறைவற்றவனுன அவனை வணங்குகிறேம்.]

140. மேரோரிவாணுர் யஸ்யைதத் ப்3ரஹ்மாண்ட3மகி2லம் முநே

[முனிவரே! இந்த ப்3ரஹ்மாண்ட3ம் முழுவதும் எவனுக்கு, மேருவுக்கு அணுவைப்போலாகிறதோ...]

141. விஷ்டப்4யாஹமித3ம் க்ருத்ஸ்நமேகாம்ஶேந
ஸ்தி2தோ ஜக3த்

[நான் இவ்வுலகையெல்லாம் (எனது) ஒரு அம்ஶத்தினுல் த4ரித்துக்கொண்டிருக்கிறேன்.]

137. கீ3தை 15-18. 138. புருஷஸூக்தம்-13.
139. வி-பு 1-9-53. 140. 141. கீ3தை 10-42.

**142. ப்ரமாணத்திற்கு மூலத்தைப் பார்க்கவும்.**

[பிறகு, வேத3ங்கள் அபஹரிக்கப்பட்டவுடன், பிரமனை அஜ்ஞானம் பீடித்தது. அதன் பின் வேத3ங்களை இழந்த அவன் ஈசனைக் குறித்துப் (பின்வருமாறு) பேசினான். பிரமன்;— ‘வேத3ங்களே எனக்கு உயர்ந்த கண்; வேத3ங்களே எனக்கு மேலான த4னம்; மறைகளே எனக்கு மேலான தேஜஸ்; வேத3ங்களே எனக்கு உயர்ந்த ப்3ரஹ்மம். அஸுரர்களுடைய ப3லத்தினால் இங்கிருந்து என்னுடைய எல்லா வேத3ங்களும் அபஹரிக்கப்பட்டன. வேத3ங்களற்ற இவ்வுலகங்களெல்லாம் இருளடைந்தன. லோகங்களை ஸ்ருஷ்டிக்க ஆரம்பி4த்த நான் வேத3மில்லாமல் என் செய்வேன்? ஐயோ! வேத3ங்கள் நஶித்ததினால் எனக்குப் பெரிய து3:க்க2ம் வந்து சேர்ந்தது; என்னை அடைந்த இந்த ஶோகமாகிய வியாதி (என்) மனத்தைத் துன்புறுத்துகிறது’...... ஹரியானவர் ரஸாதலத்திலிருந்த எல்லா வேத3ங்களையும் எடுத்துப் பிரமனிடம் கொடுத்தார். அரசனே! பிறகு (அப்பிரமன்) தன் இயற்கைநிலையை அடைந்தனன். இப்படி (மது4கைடப4ர்களென்னும்) அவ்விருவரையும் கொன்றதாலும், வேத3த்தை மீட்டுக்கொணர்ந்ததாலும், புருஷோத்தமன் பிரமனுடைய ஶோகத்தைப் போக்கடித்தான்.]

**143. ப்ரமாணத்திற்கு மூலத்தைப் பார்க்கவும்.**

[தே3வியைக் குறித்து ருத்3ரன்:— ‘பிறகு கோபத்தையுடையவனும், சிவந்த கண்களை உடையவனுமான என்னால், அப்பிரமனுடைய தலை இடதுகைக் கட்டைவிரல் நக2த்தின் நுனியால் கிள்ளப்பட்டது’. பிரமன்:— ‘அபராத4மற்ற என்னுடைய தலை, உன்னால் அறுக்கப்பட்டபடியால் நீ ஶாபத்தை அடைந்து கபாலியாக (கபாலத்துடன் கூடிய

142. பா4ர. ஶாந்தி 357-31. 143. மாத்ஸ்யபுராணம்-182.



வனாக) ஆவாய்.’ ருத்3ரன்:— தே3வி! ப்3ரஹ்மஹத்தி செய்தவனாயும் கலங்கினவனாகவும் பூ4மியில் தீர்த்த2ங்களைச் சுற்றிக்கொண்டிருந்த நான் அதற்குப்பின் ஹிமாசலமலைக்குச் சென்றேன். அங்கு ஸ்ரீமந்நாராயணன் என்னால் பிச்சைக்காக யாசிக்கப்பட்டான். அதன்பின் அவனால் தன் (தே3ஹத்தில்) ஒரு பா4க3ம் நக2த்தின் நுனியால் கீறப்பட்டது. அதிலிருந்து பெரிதாக வெள்ளமிடும் ரத்ததா4ரை பெருகியது. ......அழகிற் சிறந்தவளே! விஷ்ணுவினுடைய அருளினால் அக்கபாலம் ஆயிரக்கணக்கான பல துண்டுகளாக வெடித்து, கனவில் கிடைத்த பணம்போல் போயிற்று.]

**144. யுக3கோடிஸஹஸ்ராணி விஷ்ணுமாராத்4ய பத்3மபூ4:।**
**புநஸ்த்ரைலோக்யதா4த்ருத்வம் ப்ராப்தவாநிதி ஶுஶ்ரும॥**

[தாமரையில் பிறந்த நான்முகன் ஆயிரங்கோடியுக3ங்கள் விஷ்ணுவை ஆராதி4த்து மறுபடியும் மூவுலகிற்கும் பதியாயிருக்கும் தன்மையை அடைந்தானென்று கேள்விப்படுகிறோம்.]

**145. ப்ரஹ்மாத3யஸ் ஸுராஸ் ஸர்வே விஷ்ணுமாராத்4ய தே புரா।**
**ஸ்வம் ஸ்வம் பத3மநுப்ராப்தா: கேஶவஸ்ய ப்ரஸாத3த:॥**

[பிரமன் முதலிய எல்லா தே3வர்களும் முன் விஷ்ணுவை ஆராதி4த்து, தங்கள் தங்கள் பத3விகளைக் கேஶவனுடைய அருளாலே பெற்றார்கள்.]

**146. ஏவமேஷோऽஸுராணாம் ச ஸுராணாஞ்சாபி ஸர்வஶ:।**
**ப4யாப4யங்கர: க்ருஷ்ணஸ் ஸர்வலோகேஶ்வர: ப்ரபு4:॥**

[இம்மாதிரியாக (நமக்கு) ஸ்வாமியும், எல்லா உலகங்களுக்கும் ஈஶ்வரனுமான இந்த க்ருஷ்ணன் அஸுரர்களுக்கும் தே3வர்களுக்கும் எக்காலத்திலும் (முறையே) ப4யத்தையும், அப4யத்தையும் அளிப்பவன்.]

144. மஹாபா4ரதம் ஸபா4பர்வம் 14-8. 145. நாரஸிம்ஹபுராணம்.
146. பா4ரதம் - ஸபா4பர்வம்.

**147. ப்ரமாணத்திற்கு மூலத்தைப் பார்க்கவும்.**

[ரிஷிஶ்ரேஷ்ட2ரே! (ப4க3வான் திருவுலகளந்தருளின) அச்சமயம், ஹரியினிடம் ப4க்தியினுல் த4ர்மம் ஜலமாயிற்று. த4ர்மமாகிய அந்த ஜலத்தை எடுத்து, ஜக3ந்நாத2னுடைய ஸந்தோஷத்திற்காக (அவனுடைய) திருவடியானது (என்னுல்) மேலான ப4க்தியுடன் விளக்கப்பட்டது; பாத்3யம், அர்க்4யம் முதலியவைகளாலும் பூஜிக்கப்பட்டது. விழுந்த அந்த ஜலத்தைப் பார்த்து, 'நான் (பரிஶுத்3த4ப்படுத்தத்) தகுந்தவனுயிருக்கிறேன்' என்று நிஶ்சயித்து, சிவன் தன்னைப் பரிஶுத்3த4ப்படுத்திக்கொள்வதற்காக ஜடையின் நடுவில் தலையால் தாங்கினுன். பிறகு, பல பதினுயிரக்கணக்கான வருஷங்கள், உருத்திரன் அப்படியே (அதை) விடவில்லை.]

**148. ஸதே3வ ஸோம்யேத3மக்3ர ஆஸீதே3கமேவாத்3விதீயம்**

[குழந்தாய்! (நாமரூபங்களுடன் காணப்படும்) இந்த உலகம் ப்ரளயகாலத்தில் (நாமரூபங்களில்லாமையால்) ஒன்ருகவும், (தன்னைப்போல் வேருென்றில்லாததால்) இரண்டற்றதாகவுமிருந்த 'ஸத்' எனப்படும் ப்3ரஹ்மமாகவே இருந்தது.]

**149. தம: பரே தே3வ ஏகீப4வதி**

['தமஸ்' எனப்படும் மூலப்ரக்ருதி பரமாத்மாவுடன் ஒடுங்குகிறது.]

**150. ப்3ரஹ்மாதி3ஷு ப்ரலீநேஷு நஷ்டே லோகே சராசரே।**
**ஆபூ4தஸம்ப்லவே ப்ராப்தே ப்ரலீநே ப்ரக்ருதௌ மஹாந் ||**
**ஏகஸ் திஷ்ட2தி விஶ்வாத்மா ஸ து நாராயண: ப்ரபு4: ||**

[பிரமன் முதலியவர்களெல்லாம் லயமடைந்து, சராசரமான உலகெல்லாம் நஶித்து, பஞ்சபூ4தங்களும் லய

147. ஈஶ்வரஸம்ஹிதை; பிரமன் வாக்யம்.
148. சா2ந்-உப. 6-2-1 149. ஸுபா2லோபனிஷத்-2.
150. மஹாபா4ரதம், ஶாந்திபர்வம். 210-24. நாரத3ஸ்தோத்ரம்.



மடைந்து, மஹத்தத்வமானது மூலப்ரக்ருதியில் லயமடையும்போது ஸர்வாந்தர்யாமியான ஒருவனே இருக்கிருன். அவனே ஸர்வஸ்வாமியான நாராயணன்.]

**151. ந ஹி பாலநஸாமர்த்2யம்ருதே ஸர்வேஶ்வரம் ஹரிம்।**
**ஸ்தி2தௌ ஸ்தி2தம் மஹாப்ராஜ்ஞ ப4வத்யந்யஸ்ய கஸ்யசித் ||**

[மஹாபு3த்3தி4மானே! ரக்ஷணத்தில் நிலைநிற்கும் ஸர்வேஶ்வரனுன ஹரியைத் தவிர வேறு எவனுக்கும் ரக்ஷிக்க ஸாமர்த்2யம் கிடையாதன்ருே.]

**152. ந ஸம்பத3ாம் ஸமாஹாரே விபத3ாம் விநிவர்த்தநே।**
**ஸமர்த்தோ2 த்3ருஶ்யதே கஶ்சித் தம் விநா புருஷோத்தமம் ||**

[செல்வங்களைச் சேர்த்துக்கொடுப்பதிலும், ஆபத்துக்களை அடியோடு போக்குவதிலும் ஸமர்த்த2னுயிருப்பவன் அந்தப் புருஷோத்தமனைத் தவிர வேருெருவனும் காணப்படுகிறதில்லை.]

**153. ஸ்ருஜதஸ் தஸ்ய தே3வஸ்ய பத்3மம் ஸூர்யஸமப்ரப4ம்।**
**நாபே4ர் விநிஸ்ஸ்ருதம் தஸ்ய தத்ரோத்பந்ந: பிதாமஹ: ||**

[அந்த தே3வன் ஸ்ருஷ்டிக்கும்போது, ஸூர்யனை ஒத்த ஒளியை உடைய ஒரு தாமரை அவனுடைய உந்தியிலிருந்து வெளிப்பட்டது; அதில் நான்முகன் உண்டானுன்.]

**154. யத்தத் பத்3மமபூ4த் பூர்வம் தத்ர ப்3ரஹ்மா வ்யஜாயத।**
**ப்3ரஹ்மணஶ்சாபி ஸம்பூ4தஶ் ஶிவ இத்யவதா4ர்யதாம் ||**
**ஶிவாத் ஸ்கந்த3ஸ் ஸம்ப3பூ4வ ஏதத் ஸ்ருஷ்டிசதுஷ்டயம் ||**

[(ப4க3வானுடைய உந்தியிலிருந்து) யாதொரு தாமரை முன் உண்டாயிற்ருே அதில் பிரமன் பிறந்தான். பிரமனிடமிருந்தே ஶிவன் பிறந்தானென்று அறியத்தக்கது.

151. வி-பு 1-22-21. 152. பரமஸம்ஹிதை. 154. மஹாபா4ரதம்.

சிவனிடமிருந்து ஸ்கந்$_3$ன் உண்டானான். இது (முதலில் ஏற்பட்ட) நாலு ஸ்ருஷ்டி.]

**155.** ஸங்கை$_4$ஸ் ஸுராணாம் தி$_3$வி பூ$_4$தலஸ்தைஸ்
ததா$_2$ மனுஷ்யைர் க$_3$க$_3$நே ச கே$_2$சரை: ।
ஸ்துத: க்ரமாந் ய: ப்ரசகார ஸர்வதா$_3$
மமாஸ்து மாங்க$_3$ல்யவிவ்ருத்$_3$த$_4$யே ஹரி: ॥

[ஸ்வர்க்க$_3$த்தில் தே$_3$வஸமூஹங்களாலும், அப்படியே பூ$_4$மிப்ரதே$_3$ஶத்திலிருக்கும் மனுஷ்யர்களாலும், ஆகாயத்தில் ஆகாஶஸஞ்சாரிகளாலும் துதிக்கப்பட்டவனாய், எந்த ப$_4$க$_3$வான் திருவடிகளை வைத்தருளினானோ, (திரிவிக்ரமாவதாரம் செய்த) அந்த ஹரி எனக்கு எப்போதும் மங்க$_3$ளங்களின் வ்ருத்$_3$தி$_4$யின்பொருட்டு ஆகட்டும்.]

**156.** ஸந்தி$_3$க்$_3$தே$_4$ க$_2$லு ந்யாய: ப்ரவர்த்ததே

[ஸந்தே$_3$ஹத்திற்கு இடமுள்ள விஷயத்திலன்றோ ந்யாயம் ப்ரவர்த்திக்கும் (செல்லுபடியாகும்.)]

**157.** ஆஸுரீம் யோநிமாபந்நா மூடா$_4$ ஜந்மநி ஜந்மநி।
மாமப்ராப்யைவ கௌந்தேய ததோ யாந்த்யத$_4$மாம் க$_3$திம்॥

[அர்ஜுனா! ஆஸுரஸ்வபா$_4$வமுள்ள ஜன்மத்தை அடைந்து, ஜன்மந்தோறும் மூட$_4$ர்களாய், என்னை அடையாமலே, அதிலும் கீழான க$_3$திக்குப் போகிறார்கள்.]

**158.** ஶீலம் ஹி நாம மஹதோ மந்தை$_3$ஸ் ஸஹ
நீரந்த்$_4$ரேண ஸம்ஶ்லேஷ:

[ஶீலமென்பது, பெரியவன் தாழ்ந்தவர்களோடு நெருங்கிச் சேருதல்.]

**159.** ந பூ$_4$தஸங்க$_4$ஸம்ஸ்தா$_2$நோ தே$_3$ஹோऽஸ்ய பரமாத்மந: ।

[இந்தப் பரமாத்மாவினுடைய திருமேனி பஞ்சபூ$_4$தங்களுடைய சேர்க்கையால் உண்டானதன்று.]

155. விஷ்ணுத$_4$ர்மம் மாங்க$_3$ள்யஸ்தவம். 157. கீ$_3$தை 16-20.
159. பா$_4$ரதம் - ஶாந்திபர்வம் 206-60.



**159*.** ந தஸ்ய ப்ராக்ருதா மூர்த்திர் மாம்ஸமஜ்ஜாஸ்தி$_2$-
ஸம்ப$_4$வா ।

[அவனுக்கு, மாம்ஸம், மஜ்ஜை, எலும்பு இவைகளாலுண்டான ப்ரக்ருதிஸம்ப$_3$ந்த$_4$முள்ள உடம்பு கிடையாது.]

**160.** தம் த்வா க்$_3$ருணாமி தவஸமதவீயாந் க்ஷயந்தமஸ்ய
ரஜஸ: பராகே

[இந்த ரஜோகு$_3$ணத்தையுடைய மூலப்ரக்ருதிக்கு மேலான பரமபத$_3$த்தில் எழுந்தருளியிருக்கும் தனிவீரரான அப்படிப்பட்ட உம்மை ஶக்தியற்ற அடியேன் துதிக்கிறேன்.]

**161.** ஸ்வஸத்தாதா$_4$ரகம் ஸத்த்வம் மிஶ்ரஸத்த்வாத் விலக்ஷணம்

[தன்னுடைய ஸத்தையினாலேயே (பிறருக்கு) தா$_4$ரகமானதும், ரஜஸ்தமோகு$_3$ணங்களோடு சேர்ந்திருக்கும் ஸத்வத்தைக்காட்டிலும் வேறுப்பட்டதுமான ஸத்வம்.]

**162.** அக்$_3$நே: ஶிவஸ்ய மாஹாத்ம்யம் தாமஸேஷு ப்ரகீர்த்யதே।
ராஜஸேஷு ச மாஹாத்ம்யமதி$_4$கம் ப்$_3$ரஹ்மணோ விது$_3$: ॥
ஸாத்த்விகேஷ்வத$_2$ கல்பேஷு மாஹாத்ம்யமதி$_4$கம் ஹரே: ।
தேஷ்வேவ யோக$_3$ஸம்ஸித்$_3$தா$_4$ க$_3$மிஷ்யந்தி பராங்க$_3$திம் ॥

[அக்$_3$னியினுடையவும், சிவனுடையவும் பெருமை தாமஸ கல்பங்களில் சொல்லப்படுகிறது. ராஜஸகல்பங்களில் பிரமனுடைய பெருமை அதி$_4$கமாகச் (சொல்லப்படுவதாக) அறிகிறார்கள். ஸாத்விககல்பங்களில் ஹரியின் பெருமை அதி$_4$கமாகச் சொல்லப்படுகிறது. அவைகளிலேயே யோக$_3$ஸித்$_3$தி$_3$ அடைந்தவர்கள் மேலான க$_3$தியை அடைகிறார்கள். (கல்பம்—பிரமனுடைய தினம்.)]

**163.** மஹாத்மாநஸ்து மாம் பார்த்$_2$ தை$_3$வீம் ப்ரக்ருதிமாஶ்ரிதா:।
ப$_4$ஜந்த்யநந்யமநஸோ ஜ்ஞாத்வா பூ$_4$தாதி$_3$மவ்யயம் ॥

159*. வராஹபுராணம் 14-41. வாயுபுராணம் 34-40.
160. ருக்-அஷ்டக 5-6-24-12. யஜுர் 2-2-12. 161. பாஞ்சராத்ரம்.
162. மாத்ஸ்யபுராணம் 53-63. 163. கீ$_3$தை 9-13.

[அர்ஜுனா! தே3வஸ்வபா4வத்துடன் கூடிய மஹாத்மாக்களோவெனில், ஸகல பூ4தங்களுக்கும் காரணனாகவும், குறைவற்றவனாகவுமிருக்கும் என்னை அறிந்து வேறெதிலும் மனம் செலுத்தாதவர்களாய், (என்னை) உபாஸிக்கிறார்கள்.]

**164. அப்3ரவீத் த்ரித3ஶஶ்ரேஷ்டா2ந் ராமோ த4ர்மப்4ருதாம் வர:।**
**ஆத்மாநம் மாநுஷம் மந்யே ராமம் த3ஶரதா2த்மஜம் ॥**

[“நான் என்னை மனுஷ்யனாகவும், த3ஶரத2ன் பிள்ளை ராமனாகவும் நினைக்கிறேன்” என்று—த4ர்மவான்களில் மேலான ராமன் தே3வஶ்ரேஷ்ட2ர்களைக் குறித்துச் சொன்னான்.]

**165. நாஹம் தே3வோ ந க3ந்த4ர்வோ ந யக்ஷோ ந ச தா3நவ:।**
**அஹம் வோ பா3ந்த4வோ ஜாதோ நைதச்சிந்த்ய-**
**மிதோऽந்யதா2 ॥**

[நான் தே3வனல்லன்; க3ந்த4ருவனல்லன்; யக்ஷனல்லன்; அஸுரனுமல்லன்; நான் உங்களுக்கு உறவினனாகப் பிறந்திருக்கிறேன். என் பிறப்பு இதைத்தவிர வேறுவிதமாக (உங்களால்) நினைக்கத்தக்கதல்ல.]

**166. அண்டா3நாந்து ஸஹஸ்ராணாம் ஸஹஸ்ராண்யயுதாநி ச।**
**ஈத்3ருஶாநாம் ததா2 தத்ர கோடிகோடிஶதாநி ச ॥**

[‘அந்த ப்ரக்ருதியில் இம்மாதிரியான பல கோடி நூறாயிரம் அண்ட3ங்கள் இருக்கின்றன’ என்பது ஸாரார்த்த2ம்.]

**167. ஹிரண்மயே பரே லோகே விரஜம் ப்3ரஹ்ம நிஷ்களம்।**
**தச்சு2ப்4ரம் ஜ்யோதிஷாம் ஜ்யோதிஸ்தத்3யதா3த்மவிதோ2**
**விது3: ॥**

[பொன்மயமான மேலான உலகத்தில், ரஜோகு3ணமற்றதும், அவயவங்களில்லாததுமான ப்3ரஹ்மமிருக்கிறது. அது பரிஶுத்3த4மானது. சோதிகளுக்கெல்லாம் சோதியாயிருக்கும் அதைப் பரமாத்மஜ்ஞானிகள் அறிகிறார்கள்.]

---

164. ரா-யு 120-11. 165. வி-பு 5-13-12. க்ருஷ்ணவாக்யம்.
166. வி-பு 2-7-27. 167. முண்ட3கோபனிஷத் 2-2-10.



**168. யோ அஸ்யாத்4யக்ஷ: பரமே வ்யோமந்।**
**ஸோ அங்க3 வேத3 யதி3 வா ந வேத3**

[எவனொருவன் இவ்வுலகத்திற்கு அதி4பதியாய், பரமபத3த்தில் (எழுந்தருளியிருக்கிறானோ),அவனே (தன் பெருமையை) அறிவானோ, அறியானோ!]

**169. தே ஹ நாகம் மஹிமாநஸ் ஸசந்தே**
**யத்ர பூர்வே ஸாத்4யாஸ் ஸந்தி தே3வா:**

[யாதொரு பரமபத3த்தில் ஸாத்4யர்கள் எனப்படும் தே3வர்கள் இருக்கிறார்களோ, அந்தப் பரமபத3த்தை அவர்கள் மஹிமையுடையவர்களாய் அடைகிறார்கள்.]

**170. அத்யர்க்காநலதீ3ப்தம் தத் ஸ்தா2நம் விஷ்ணோர்**
**மஹாத்மந:।**
**ஸ்வயைவ ப்ரபா4யா ராஜந்! து3ஷ்ப்ரேக்ஷம்**
**தே3வதா3நவை: ॥...**
**தத்ர க3த்வா புநர்நேமம் லோகமாயாந்தி பா4ரத ॥**

[மஹாத்மாவான விஷ்ணுவினுடைய அந்த ஸ்தா2னம் ஸூர்யனுடையவும், அக்3னியுடையவும் ஒளியை விஞ்சியது. அரசனே! அது தன்னுடைய ஒளியினாலேயே தே3வர்களாலும், அஸுரர்களாலும் காண அரியது. ப4ரதவம்ஶத்தில் உதி3த்தவனே ! அங்கு போய் மறுபடியும் இவ்வுலகுக்குத் திரும்பிவருவதில்லை.]

**171. ஸ பரஸ் ஸர்வஶக்தீநாம் ப்3ரஹ்மணஸ் ஸமநந்தரம்।**
**மூர்த்தம் ப்3ரஹ்ம மஹாபா4க3 ஸர்வப்3ரஹ்மமயோ ஹரி: ॥**

[ப4க3வான் (இவனுடைய உருவமான ஸம்ஸாரிஜீவன், முக்தன், தி3வ்யமங்க3ளவிக்3ரஹம் எனப்படும்) எல்லா ஶக்திகளைக்காட்டிலும் மேலானவன். ‘ப்3ரஹ்மம்’ என்று சொல்லப்படும் ப4க3வானுடைய திருமேனி விஷ்ணுவுக்கு

---

168. தைத்திரீயப்3ராஹ்மணம் 2-8-9-6. 169. புருஷஸூக்தம் 1-18.
170. பா4ரதம், ஆரண்யபர்வம் 136-18 & 23. 171. வி-பு 1-22-63.

